# ஸ்ரீ வேங்கடேச பாகவதம்

(நூல் 1: முதலாழ்வார்கள் சரிதைகளும் பாசுரங்களும்)

எழுதி, வெளியிட்டவர்:

*ராசிபுரம் ராமபத்ரன்*

Author of:

"Sri Ramakrishna Bhagavata"

and

"Vivekananda : Divinity on Earth"

THIS BOOK IS PUBLISHED WITH THE
FINANCIAL ASSISTANCE OF
TIRUMALA TIRUPATI DEVASTHANAMS
UNDER THEIR SCHEME
"AID TO PUBLISH RELIGIOUS BOOKS"

ஸ்ரீ வேங்கடேச நிலையம்

**B-6, 10,** "நித்யா" 13-ஆம் தெரு,

நங்கநல்லூர்

சென்னை - 600 061



# சமர்ப்பணம்

எனது தந்தையார் அவர்களுக்கு

## திரு. *ரா.ஸ்ரீ. ஸ்ரீகண்டன்* (1904 — 75)

சுதந்திரப் போராட்ட தியாகி, கோபிசெட்டிபாளையம்;
தாமிர பத்திரம் பெற்றவர். படம் 1940-ஆம் ஆண்டு
சிறைக்குச் செல்லுமுன் எடுத்தது, 'ஹிந்து' பத்திரிகையில் வெளியானது.

# முதலாழ்வார்கள் மூவர்



பொய்கையார் பூதத்தார் பேயார்

# ACKNOWLEDGEMENTS

The Author wishes to acknowledge with thanks the help rendered in various ways by the following persons / institutions, in the publication of this book:

i) Shri A. Chengal Reddy, Chairman, Tirumala Tirupati Devasthanams, Tirumala.

ii) Shri P.R. Madhava Rao, P.V.R. Group of Companies, Jayaram Rao Street, Srikalahasti.

iii) Shri Mukunda Rao J Pawar, Managing Director, Manasa Supermarket, 53/1, Burkit Road, T. Nagar, Madras 600 017.

iv) Shri S. Sivaraman, Branch Manager, State Bank of India, Nanganallur, Madras - 600 061.

v) M/s Sundaram Charities, 180, Anna Salai, Madras 600 002.

vi) Shri A. Rangaswami, Managing Director, M/s Lakshmi General Finance Ltd, Madras-14.

vii) Shri N.S. Ramamurti, Sub-Editor, "Saptagiri", T.T.D. Press, Tirupati-517507.

viii) Shri S.V.K.S. Srinivasan, Acharya Purusha, Sri Venkateswara Temple and Officer, State Bank of India, Tirupati.

# பொருளடக்கம்

பக்கம்

முன்னுரை ....................................................................7
1. வேங்கடவன் வாழ்த்து ....................................................12
2. இராமாநுச நூற்றந்தாதி ....................................................18
3. வேங்கடமே! யாம் விரும்பும் வெற்பு ..................................22
4. சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை! .....28
5. மண்மேல் மாதவன் பூதங்கள் மூவர் ...............................38
6. முதலாழ்வார்கள் மூவர்.....................................................42
7. தொண்டை நாட்டுத் தொண்டர்கள் ...............................48
8. முதலாழ்வார்கள் தோற்றமும், ஏற்றமும்..........................55
9. மூரிநீர் வண்ணனின் முப்படைகள் .................................65
10. மூவர் கூடுதலும், முகுந்தனைப் பாடுதலும் ...............74
11. முதலாழ்வார்கள் தனியன்கள் .........................................81
12. வேங்கடவன்தமர் ஏற்றிய வேதவிளக்கு .......................86
13. வானரம் வணங்கும் வேங்கடம் ..................................108
14. வேடர் வில் வளைக்கும் வேங்கடம் ............................116
15. வேழம் வழிபடும் வேங்கடம்.........................................131
16. முதலாழ்வார்கள் கண்ட திருமலை ..............................146
17. முதலாழ்வார்கள் கண்ட திருவேங்கடவன்...................156
18. முதலாழ்வார்கள் வாழித் திருநாமங்கள் .......................161
பயன்பட்ட நூல்கள். .....................................................163

# அன்பர்களுக்கு வேண்டுகோள்!

# ஸ்ரீ வேங்கடேச பாகவதம் வெளியீடு

''ஸ்ரீ வேங்கடேச பாகவதம்'' தொடர்ந்து ஏழு பாகங்க ளாக, சுமார் 1000 பக்க அளவில், முன்னுரையில் விவரித்த படி வெளிவரவிருக்கிறது. இதுவே முதல் நூல். தமிழில் ஏழு புத்தகங்களையும் வெளியிடுவதற்கு இன்றைய நிலவ ரப்படி ரூபாய் 1.50 லட்சம் தேவைப்படுகிறது. அச்சுக்கூலி, காகித விலை போன்றவை மாதாமாதம் ஏறிக்கொண்டேயி ருக்கின்றன. அடுத்து வரும் புத்தகங்களுக்கும் தொடர்ந்து திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் பொருளுதவி கிடைக்குமா என்று சொல்ல முடியாது. இதேபோல், ஆங்கிலம், தெலுங்கு, இந்தி போன்ற மொழிகளிலும் வெளியிடத் திட்டம் இருக்கிறது. இவ்வளவு பொருள் வசதி அடியேனிடம் இல்லை. எனவே இந்த நூலை விரும்பும் பக்தர்கள் ''ஸ்ரீவேங்கடேச பாகவதம்'' வெளியி டும் திருப்பணிக்குப் பின்வருமாறு உதவும்படி பணிவன்பு டன் கேட்டுக்கொள்கிறேன்.

—ரா. ஸ்ரீ. ரா.

## *முன்பதிவுத் திட்டம்*

*வாசகர்கள் ரூ. 100/- முன்பணம் அனுப்பித் தங்கள் பெயர்களைப் பதிவு செய்து கொண்டால், அடுத்து வரும் நான்கு நூல்கள்* **தபால் செலவின்றி** *வெளியானவுடன் அனுப்பி வைக்கப்படும். இவர்களின் பெயர்களும் அடுத்த புத்தகத்தில் இடம்பெறும்.*

## *நன்கொடைகள்*

*விருப்பம்போல் அனுப்பலாம். ரூ. 50/-க்குக் குறையாமல் அனுப்புபவர்களின் பெயர்கள் அடுத்த நூலில் வெளியா கும். புத்தகமும் செலவின்றிப் பெறலாம்.*

*தொகை அனுப்ப வேண்டிய முகவரி*

**ஸ்ரீ வேங்கடேச நிலையம்**
**B-6, 10, ''நித்யா'', 13-ஆம் தெரு,**
**நங்கநல்லூர், சென்னை - 600 061.**

ஏழுமலையான் துணை.

# முன்னுரை

'பாகவதம்' என்றாலே நினைவுக்கு வருவது விஷ்ணுவின் அவதாரங்களையும், பிரகலாதன் போன்ற மகாபாகவதர்களின் சரிதைகளையும், கிருஷ்ணாவதாரத்தின் உயர்வையும் விரித்துரைக்கும் மகத்தான ஸ்ரீமத் பாகவத புராணம்தான். இதைத் தவிர, தேவீ பாகவதம், சைதன்ய பாகவதம் (வங்காளத்தில் தோன்றிய அவதார புருஷராகிய ஸ்ரீ கிருஷ்ண சைதன்ய மகாப்பிரபுவின் சரிதை) ஆகிய புத்தகங்களும் பிற்காலத்தில் எழுந்தன. பகவான், பக்தர்களின் பெருமையை பக்தியூட்டக்கூடிய வகையில் விவரிக்கும் நூல்களைப் பொதுவாக பாகவதம் எனலாம்.

பாகவத உத்தமர்களாகிய பன்னிரு ஆழ்வார்களில் பதின்மர் ஸ்ரீ வேங்கடேசனை 213 பாசுரங்கள் இயற்றி மங்களாசாஸனம் செய்துள்ளனர். மகாபாகவதர்களாகிய ஆழ்வார்களின் சரிதைகளையும், அவர்கள் திருவேங்கடமுடையானைக் குறித்துப் பாடியுள்ள பாசுரங்களையும் விளக்குவதால் இதற்கு "ஸ்ரீ வேங்கடேச பாகவதம்" என்னும் பெயர் வழங்கப்பட்டது. ஸ்ரீமத் பாகவத புராணத்தைப் போன்ற நூல் என்பதல்ல! அவ்வகையில் செய்யப்பட்ட சிறு முயற்சி, பக்தி நூல் என்றே இதைக் கொள்ள வேண்டுகிறேன்.

ஸ்ரீமத் பாகவத புராணம் கிருஷ்ணாவதாரத்தின் சிறப்பை வலியுறுத்தும் நூல்; "கிருஷ்ணஸ்து பகவான் ஸ்வயம்" என்கிறது. ஆழ்வார்களின் அனுபவங்களையும், அருளிச் செயல்களையும் மனத்தில் கொண்டு, கி.பி. 9-ஆம் நூற்றாண்டில், பெயர் தெரியாத ஒரு மகாபுருஷரால், பாண்டிய நாட்டில் திருத்தி எழுதப்பட்டதே இப்பொழுது வடமொழியில் வழங்கிவரும் பாகவதம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்; காவிரி ஆற்றின் கரைகளிலே மாபெரும் விஷ்ணு பக்தர்கள் தோன்றுவர் என்று பாகவதம் கூறுவதை இதற்கு ஆதாரமாகக் காட்டுவர். இங்ஙனம் ஆழ்வார்களின் கருத்துக்களை மனத்தில் கொண்டு திருத்தி எழுதப்பட்ட நூலே பாகவத புராணம் என்றால், நேரடியாக அந்த மகா பாகவதர்களின் பாசுரங்களை விளக்கிக் கூறும் எந்த நூலையும் ஏன் பாகவதமாக அழைக்கக் கூடாது? தாராளமாக அழைக்கலாம். இந்த எளிய புத்தகத்திற்கு "ஸ்ரீ வேங்கடேச பாகவதம்" என்று ஒரு பெரும் பெயரை சூட்டத் துணிந்ததற்கு இது ஒரு முக்கிய காரணம்.

கிருஷ்ணாவதாரக் கூறுடையவன் ஸ்ரீ வேங்கடேசன்; ராமாவ தாரக் கூறுடையவன் ஸ்ரீரங்கநாதன் என்கிறது ஸ்ரீவைஷ்ணவம். அதாவது ஸ்ரீகிருஷ்ணன் மறைந்த பிறகு, அவனுடைய அவதார சக்தியைத் தேக்கி வைத்துப் பின்வரும் தலைமுறைகளுக்கு அதை வினியோகித்து, அருள் பாலிக்கும் அர்ச்சை நிலையே ஸ்ரீநிவா ஸன். எனவே ஸ்ரீ வேங்கடேசனின் புகழைக் கூறுவது, பாகவத புராணத்தைப் போல, ஸ்ரீ கிருஷ்ணனைப் புகழ்வதேயாகும். ஸ்ரீ கிருஷ்ணனின் பெருமையைக் கூறுவதே பாகவதம் என்று கொண் டாலும், ஸ்ரீ வேங்கடேசனின் பெருமையைக் கூறுவதும் இவ்வகை யில் பாகவதமே! ஆழ்வார்கள் கிருஷ்ணாவதாரத்திலேயே சிறப் பாக ஈடுபட்டனர் என்பது நன்கு தெரிந்ததே. இதுவும் இந்த நூலுக்கு "ஸ்ரீவேங்கடேச பாகவதம்" என்று பெயரிடத் துணிந்த தற்கு மற்றொரு முக்கிய காரணம் ஆகும்.

'ஸ்ரீ வேங்கடேச பாகவதம்' ஆழ்வார்களின் சரிதைகள், திரு வேங்கடவனைக் குறித்த பாசுரங்களைத் தவிர, எம்பெருமானுக் குக் கைங்கரியம் செய்த ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்கள்; திருவேங்கட வனைப் பாடிய தாளப்பாக்கம் அன்னமாச்சாரியர், புரந்தரதாஸர், தியாகராஜர் போன்ற மகான்கள், மற்ற வேங்கடேச பக்தர்களின் சரிதைகள், பாடல்கள் ஆகியவற்றையும் விளக்கும். இது கீழ்க்கண் டவாறு நூல் வரிசையாக வெளிவர இருக்கிறது:

## "ஸ்ரீ வேங்கடேச பாகவதம்" - நூல் வரிசை

**நூல் 1:** முதலாழ்வார்கள் மூவரின் சரிதைகள், வேங்கடவனைக் குறித்த சில பாசுரங்கள்.

**நூல் 2:** திருமழிசையாழ்வார், மதுரகவியாழ்வார், நம்மாழ்வார் சரிதைகள், சில பாசுரங்கள்.

**நூல் 3:** குலசேகர ஆழ்வார், பெரியாழ்வார், ஸ்ரீ ஆண்டாள்.

**நூல் 4:** திருமங்கையாழ்வார் சரிதை, பாசுரங்கள்

**நூல் 5:** ஆழ்வார்கள் வேங்கடவனைப் பாடிய பாசுரங்கள் (தொடர்ச்சி)

**நூல் 6:** ஸ்ரீ வேங்கடேச புராணம், சுப்ரபாதம்.

**நூல் 7:** ஆசாரியர்கள், மற்ற வேங்கடேச பக்தர்களின் சரிதைகள், பாடல்கள்.

ஏழுமலையானைக் குறித்து ஏழு நூல்கள்! ஒவ்வொன்றும் சுமார் 150 பக்கங்கள் வரை; விலை ரூ. 25/-க்குள் இருக்க வேண்டும். முதல் நூலான இது வெளியானதும் 6 மாதங்களுக்குள் அடுத்த நூலென்று பதிப்பித்து, 2, 3 ஆண்டுகளுக்குள் இந்தத் திருப்பணியை முடிக்க வேண்டும் என்று அவா! திருவேங்கடவனின் திருவருள் இருந்தால் இவ்விதமே எளிதில் நிறைவேறும், என்று நம்பிக்கை.

அடியேன் ஸ்ரீ ராமகிருஷ்ணர், தூய அன்னை ஸ்ரீசாரதாதேவி, சுவாமி விவேகானந்தர் ஆகியோரிடம் ஈடுபாடுடையவன். ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் இருவரையும் குறித்து "Sri Ramakrishna Bhagavata", "Vivekananda : Divinity on Earth" என்னும் புத்தகங்களை ஆங்கிலத்தில் ஏற்கனவே எழுதி வெளியிட்டுள்ளேன். இதுவே என்னுடைய முதல் தமிழ்நூல். திருவேங்கடமுடையான் எங்கள் குலதெய்வமாதலால், எம்பெருமானைக் குறித்து ஒரு புதிய நோக்கில் எழுதி, நம்மாலான பகவத் கைங்கர்யம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் பல ஆண்டுகளாகவே இருந்து வந்திருக்கிறது. இப்பொழுது ஏழுமலையான் திருவருளால் இது கைகூடியிருக்கிறது.

எளிதாகவும், இனிமையாகவும் உள்ள ஆழ்வார்கள் பாசுரங்கள், அதே சமயம் பொருளாழம் மிக்கவை! இவற்றிற்குப் பல வைணவ ஆசாரியர்கள் தமிழும், சம்ஸ்கிருதமும் கலந்த மணிப்பிரவான நடையில் உரையெழுதியிருக்கிறார்கள். வைணவம் உரைவளம் மிக்கது! இவற்றை நம்மால் நேரடியாகப் படித்துப் புரிந்து கொள்ள இயலாது. பூர்வாசார்யார்கள் அருளிய கருத்துக்களை சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்பு, தென்கலை வைணவ அறிஞரான காஞ்சீபுரம் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய சுவாமி எழுதி வெளியிட்ட ''திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை'' என்னும் உரை; வடகலை வைணவ அறிஞரான ஸ்ரீ உத்தமூர் திருமலை நல்லான் சக்ரவர்த்தி வீரராகவாசாரியர் எழுதிய ''உபய வேதாந்த க்ரந்தமாலை ப்ரபந்தரக்ஷை'' என்னும் உரை, போன்றவற்றைப் படித்து அறியலாம். பிரபலமான இவ்விரு உரைநூல்களும்கூட இன்று கிடைப்பதில்லை. வடகலை, தென்கலை பேதமின்றி இந்த நூலில் சிறந்த அறிஞர்களின் விளக்கங்கள் தரப்பட்டுள்ளன.

ஆழ்வார்களின் பாசுரங்களில் காணப்படும் உயர்ந்த பக்தி நிலைகளை, சமீப காலத்தில் நேரடியாக அனுபவித்தவர் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரே எனலாம். பரமஹம்ஸர் வங்காள வைணவ

குடும்பத்தில் அவதரித்தவர்; கையில் எழுந்தருளியிருக்கும் கதா தர விஷ்ணுவின் அவதாரமாகவே போற்றப்படுபவர். முன்பு நர-நாராயண அவதாரத்தில் நரமகரிஷியாக இருந்தவரே சுவாமி விவேகானந்தர் என்று பரமஹம்ஸர் கூறியிருக்கிறார். எனவே ஆழ்வார்களின் சரிதைகளுக்கும், பாசுரங்களுக்கும் விளக்கமாக ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் மற்றும் பிற மகான்க ளின் சாதனைகளும், போதனைகளும் இப்புத்தகத்தில் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன. 'ஸ்ரீ வேங்கடேச பாகவதம்' என்னும் இந்நூலுக்கு இத்தகைய பரந்த சமய நோக்கு பொருத்தமானதே என்று கூறலாம். ஏனெனில் வைணவர்கள் மட்டுமின்றி, அனைத்து சமயத்தினரும் நம்பி வணங்கும் தெய்வம் ஸ்ரீவேங்கடேசன். அவரவர்கள் ஏழுமலையானைத் தங்கள் இஷ்ட தெய்வமாகவே நினைத்து வழிபடுகின்றனர் என்று கூறத் தேவையில்லை.

இத்தகைய பக்தி நூல்களுக்கு, ஆசிரியர்கள் பிற அறிஞர்களின் அணிந்துரை, சமயப்பெரியார்களின் அருளுரை முதலியவற்றைப் பெற்று இணைப்பது வழக்கமாகி விட்டது. பல காரணங்களினால் இவை இந்நூலில் இடம் பெறவில்லை. இவ்விதம் அமைவதே ஒரு விதத்தில் பொருத்தம் என நினைக்கிறேன். அனைத்து சமயத்தி னரும் வணங்கும் இன்றைய இந்து மதத்தின் மாபெரும் தெய்வ மான ஸ்ரீ வேங்கடேசனைப் பற்றிய நூலில், ஓரிரு பிரிவினரிடமி ருந்து மட்டுமே இவற்றைப் பெற்று இணைப்பது சரியா என்றும் தோன்றியது! தவிர, ஒரு புத்தகத்தின் வெற்றி, தோல்வியை இறுதியாக நிர்ணயிப்பது அதை வாங்கிப்படிக்கும் வாசகர்கள் தாம் ''இவர் எழுதிய நூல் நன்றாயிருக்கிறது; அவசியம் வாங்கிப்படி யுங்கள்'' என்று வாசகர்கள் மற்றவர்களிடம் சொன்னால் அதைவி டச் சிறந்த அணிந்துரை, பரிந்துரை இல்லை. ''இவர் எழுதியிருக் கும் மற்ற நூல்களையும் வாங்கிப் படிக்க வேண்டும்'' என்று வாசகர்கள் தீர்மானிப்பதே மிகுந்த பயனளிக்கும் ஆசியுரை! எனவே இவற்றைப் படிப்பவர்களிடமே விட்டுவிடுகிறேன்.

நாம் பேசும் தமிழில் உள்ள உச்சரிப்புக்கு முக்கியத்துவம் கொடுத்தே இப்புத்தகம் எழுதப்பட்டுள்ளது. இதனாலேயே சில இலக்கணப் பிழைகள் நேரலாம்!

எனவே அடியேன் எழுதியுள்ள இந்த எளிய புத்தகத்தில் காணப்படும் குறைகளைப் பொறுத்தருளி, குணங்களைக் கொள் ளும்படி, பக்தர்களைத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

ஏழுமலையானைப் பற்றிய இந்தப் புத்தகத்திற்கு திருவேங்கட முடையான் கோயிலை நிர்வகிக்கும் ''திருமலை திருப்பதி தேவஸ் தானம்'' பொருளுதவி செய்ய முன் வந்ததை, எம்பெருமானின் கிருபையாகவே கருதுகிறேன். இதற்குப் பெரிதும் காரணமாயி ருந்த தி.தி. தேவஸ்தானத்தின் சேர்மன் திரு. A. செங்கல்ரெட்டி (Shri A. Chengal Reddy, Chairman, Tirumala Tirupati Devasthanams, Tirumala) அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். திருமலை திருப்பதி தேவஸ்தானத்தினரின் உதவியுடன் இந்நூல் வெளியிடப்படுவதாலேயே, ஸ்ரீவைஷ்ணக் கோட்பாடுகளுக்கு இசைந்த கருத்துக்களையே இந்நூலில் இயன்றவரை எடுத்துக் கூறியுள்ளேன். மற்றும், இந்நூலில் குறைகள் காணப்பட்டால், அதற்கு அடியேனே பொறுப்பு, தி.தி. தேவஸ்தானம் அல்ல என்பதையும் தெளிவுபடுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

கடந்த இரண்டு ஆண்டுகளாக, சென்னையைச் சார்ந்த நங்கநல் லூரில் அடியேன் தங்கியிருக்கிறேன். இது பக்தர்கள் நிறைந்த ஊர். வெகு அருகிலேயே கல்விக்கடவுளான ஸ்ரீ லக்ஷ்மீஹயவதனப் பெருமாள், சக்கரத்தாழ்வார், ஸ்ரீ ராமானுஜர், ஸ்ரீ வேதாந்த தேசிகர், ஸ்ரீநிவாஸன், சிறிய திருவடி ஆகியோருடன் கோயில் கொண்டுள் ளார். பக்கத்திலேயே பிள்ளையார் கோயில், சற்றுத்தள்ளி உத்தர குருவாயூரப்பன் கோயில்! மற்றொரு பக்கம், ஸ்ரீ ராகவேந்திர சுவாமி பிருந்தாவனம், 32 அடி உயரமுள்ள ஆதிவ்யாதிஹர பக்தாஞ்சனேய சுவாமி திருக்கோயில்; கடைவீதியில் ஸ்ரீ அர்த்தநாரீ சுவரர், துர்க்கையம்மன் கோயில், பழவந்தாங்கல் ரயில் நிலையம் அருகே ஸ்ரீ ராஜராஜேஸ்வரி ஆலயம்; அம்மன்கோயில், மற்றும் பற்பல வழிபாட்டுக் கூடங்கள். நாம் ஆலயங்களுக்கு அடிக்கடி செல்லாவிடினும், காலை வேளைகளில் சத்ய சாயி பக்தர்கள், ராகவேந்திர அன்பர்கள் பஜனை, திவ்யப் பிரபந்தங்கள் இசைத்தல் போன்றவற்றை வீட்டிலும், வெளியிலும் கேட்டு இன்புறலாம். பக்தர்களுக்குப் பயன்படும் வகையில் ஸ்ரீ வேங்கடேச பாகவதம் அமைய வேண்டும் என்று, இவ்விதம் பற்பல வடிவங்களில், எங்கும் நம்மைச் சுற்றி எழுந்தருளியிருக்கும் பரம்பொருளைப் பிரார்த்திக்கிறேன், வணக்கம்.

***ஸ்ரீ வேங்கடேச நிலையம்,*** ***தாஸன்,***
***நங்கநல்லூர்,*** ***ரா. ஸ்ரீ.ரா.***
***7-8-1994.***

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்
சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

# 1. வேங்கடவன் வாழ்த்து

## பொதுத் தனியன்கள்

### ஸ்ரீமணவாள மாமுனிகள் தனியன்
(அழகிய மணவாளன் அருளிச் செய்தது)

ஸ்ரீ சைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்ய ஜாமாதரம் முநிம்.

### ஸ்ரீ வேதாந்த தேசிகர் தனியன்

ராமாநுஜ தயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம்
ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம்.

### குருபரம்பரை தனியன்
(ஸ்ரீ கூரத்தாழ்வான் அருளிச் செய்தது)

லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாதயாமுந மத்யமாம்
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபம்பராம்.

### ஸ்ரீ ராமாநுஜர் தனியன்

யோநித்யமச்யுத பதாம்புஜ யுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே

### ஸ்ரீ நம்மாழ்வார் தனியன்
(ஸ்ரீ ஆளவந்தார் அருளிச் செய்தது)

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதி:
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா.

## ஸ்ரீ ஆழ்வார்கள், உடையவர் தனியன்
(ஸ்ரீ பராசர பட்டர் அருளிச் செய்தது)

பூதம் ஸரஸ்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந்
பக்தாங்கரிரேணு பரகால யதீந்த்ர மிச்ராந்
ஸ்ரீமத் பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.

## ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம்

கௌஸல்யா சுப்ரஜா ராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே
உத்திஷ்ட நரசார்தூல கர்தவ்யம் தைவமாஹ்நிகம்
உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த உத்திஷ்ட கருடவத்ஜ
உத்திஷ்ட கமலாகாந்த த்ரைலோக்யம் மங்களம் குரு.

வந்துதித்தாய் ராமாய் நீ கோசலை தன் திருமுகனாய்
சிந்து மொழிச் சிறுகாலை திசையெங்கும் புலகிறகு
மந்திரங்கள் வாய் மொழிந்து வந்தனைகள் புரிந்தருளச்
செந்திருக்கண் அருள் பொழிய வேங்கடவா! எழுந்தருள்வாய்.

## ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரம்

விநா வேங்கடேசம் ந நாதோ ந நாத:
ஸதா வேங்கடேசம் ஸ்மராமி ஸ்மராமி
ஹரே வேங்கடேச ப்ரஸீத ப்ரஸீத
ப்ரியம் வேங்கடேச ப்ரயச்ச ப்ரயச்ச

திருவேங்கடேசா நாதனே நாதன் நீ
ஒரு வேங்கடேசா உன்னையே எண்ணினும்
பெரு வேங்கடேசா நின்னையே நின்னையே
அருள் வேங்கடேசா அருள் வேங்கடேசா.

## ஸ்ரீ வேங்கடேச ப்ரபத்தி

ஸ்ரீமன் க்ருபாஜலநிதே க்ருத ஸர்வலோக
ஸர்வக்ஞ சக்த நதவத்ஸல ஸர்வசேஷின்
ஸ்வாமின் சுசீல ஸுலபாச்ரித பாரிஜாத
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே.

கருணையெனும் திருகடலே காத்தளிக்கப் படைத்தவனே
பெருந்தாயைப் பிரிந்தறியாப் பெரியோனே வல்லவனே
ஒரு முதல்வா பாரிஜாத உயர்மலரே துயர் களையும்
திருவடிகள் பற்றி உய்ய வேங்கடவா! சரண் புகுந்தோம்.

## ஸ்ரீ வேங்கடேச மங்களாசாஸனம்

ச்ரிய: காந்தாய கல்யாண நிதயே நிதயேர்திநாம்
ஸ்ரீவேங்கடநிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம்.

திருக்கேள்வா மங்களங்கள் பொழிபவனே பொலிபவனே
பெருநெறியே ஸ்ரீநிவாஸா வேங்கடேசா மங்களங்கள்.

மங்களாசாஸனபரைர் மதாசார்யபுரோகமை:
- ஸர்வைச்ச பூர்வைராசார்யைஸ் ஸத்க்ருதாயாஸ்து மங்களம்.

ஈங்கெங்கள் குருமுதலோர் இயம்பியவள் மங்களத்தாய்
ஓங்கி உயர் வேங்கடவா உனக்கென்றும் மங்களங்கள்.

## ஸ்ரீ வேங்கடேச த்வாதச நாம ஸ்தோத்திரம்

வேங்கடேசோ வாஸுதேவ: வாரிஜாஸன வந்தித:
ஸ்வாமி புஷ்கரிணீவாஸ: சங்கசக்ர கதாதர:
பீதாம்பரதரோ தேவ: கருடாரூட ஸோபித:
விஸ்வாத்மா விஸ்வலோகேச: விஜயோ வேங்கடேஸ்வர:

(வாரிஜாஸன வந்தித: தாமரைமலரை
ஆசனமாகக் கொண்ட பிரம்மனால் வணங்கப்பட்டவனே.)

ஏதத் த்வாதஸ நாமானி த்ரிஸந்த்யம் ய: படேன் நர:
ஸர்வபாப வினிர்முக்தோ விஷ்ணோஸ்ஸாயுஜ்ய மாப்னுயாத்.

*பொருள்: இந்தப் பன்னிரண்டு நாமங்களை மூன்று சந்திகாலங்களிலும் எந்த மனிதன் ஜபிக்கிறானோ, அவன் எல்லா பாவங்களிலிருந்தும் விடுபட்டு, விஷ்ணுவை அடைகிறான்.*

## ஆழ்வார்கள், ஆசாரியர்கள், அவர்கள் அருளிய நூல்கள், வேதம் ஆகியவற்றுக்கு வாழ்த்துக்கூறுதல்

ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல் வாழி
தாழ்வாதுமில் குரவர்தாம் வாழி - ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள்தாம் வாழி
செய்ய மறை தன்னுடனே சேர்த்து.

*(உபதேசரத்தினமாலை, 3).*

## திருப்பல்லாண்டு
(ஸ்ரீ பெரியாழ்வார் அருளிச் செய்தது)

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன்
சேவடி செவ்விதிருக் காப்பு.

அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம்
பல்லாண்டு
வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும்
பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே

## வேங்கடவன் கைங்கரியப் பாசுரம்
(ஸ்ரீ நம்மாழ்வார் அருளிச் செய்தது)

ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்
தெழிகுரல் அருவித் திருவேங்கடத்து
எழில்கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே.

## வேங்கடவன் சரணாகதிப் பாசுரம்
(ஸ்ரீ நம்மாழ்வார் அருளிச் செய்தது)

அகல கில்லேன் இறையும் என்று
அலர்மேல் மங்கை உறை மார்பா!
நிகரில் புகழாய்! உலகம் மூன்று
உடையாய்! என்னை ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங்கடத்தானே!
புகல் ஒன்று இல்லா அடியேன் உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே!

## குலசேகரப்படி பாசுரம்
(ஸ்ரீ குலசேகர ஆழ்வார் அருளிச் செய்தது)

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே!
நெடியானே! வேங்கடவா! நின் கோயிலின் வாசல்

அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே.

## சென்னியோங்கு தண்திருவேங்கடம்

(ஸ்ரீ பெரியாழ்வார் அருளிச் செய்தது)

சென்னியோங்கு தண்திருவேங்கடமுடையாய்! உலகு
தன்னை வாழநின்ற நம்பீ! தாமோதரா! சதிரா!
என்னையும் என் உடைமையையும் உன் சக்கரப்பொறி
ஒற்றிக்கொண்டு
நின்னருளே புரிந்திருந்தேன் இனியென் திருக்குறிப்பே.

## திருப்பாவை உயிர்நிலைப் பாசுரம்

(ஸ்ரீ ஆண்டாள் அருளிச் செய்தது)

சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்து உன்
பொற்றாமரை அடியே போற்றும் பொருள் கேளாய்
பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்த நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே ஆவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்
மற்றைநம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்.

## அமலன் ஆதிபிரான்

(ஸ்ரீ திருப்பாண் ஆழ்வார் அருளிச் செய்தது)

அமலன் ஆதிபிரான் அடியார்க்கு என்னை ஆட்படுத்த
விமலன் விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கடவன்
நிமலன் நண்மலன் நீதிவானவன் நீள்மதில் அரங்கத்தம்மான் திருக்
கமலபாதம் வந்து என் கண்ணினுள்ளன ஒக்கின்றதே.

## திருவேங்கடம் அடை நெஞ்சமே!

(ஸ்ரீ திருமங்கை ஆழ்வார் அருளிச் செய்தது)

பேசுமின் திருநாமம் எட்டெழுத்தும் சொல்லிநின்று
பின்னரும்
பேசுவார்தமை உய்யவாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம்
வாசமாமலர் நாறுவார்பொழில் சூழ்தரும் உலகுக்கெல்லாம்
தேசமாய்த் திகழும்மலைத் திருவேங்கடம் அடை நெஞ்சமே!

## திருமலையின் பெருமை

(ஸ்ரீ திருமழிசையாழ்வார் அருளிச் செய்தது)

வேங்கடமே! விண்ணோர் தொழுவதும் மெய்ம்மையால்
வேங்கடமே! மெய்வினை நோய் தீர்ப்பதுவும் - வேங்கடமே!
தானவரை வீழத்தன் ஆழிப்படைதொட்டு
வானவரைக் காப்பான் மலை.

ஸ்ரீ நம்மாழ்வார் பாசுரம்

குன்றம் ஏந்திக் குளிர்மழை காத்தவன்
அன்று ஞாலம் அளந்தபிரான் பரன்
சென்றுசேர் திருவேங்கட மாமலை
ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே.

ஸ்ரீ வேதாந்த தேசிகர் அருளிச் செய்தது

கண்ணன் அடியினை எமக்குக் காட்டும் வெற்பு
கடுவினையரிரு வினையும் கடியும் வெற்பு
திண்ணமிது வீடென்னத் திகழும் வெற்பு
தெளிந்த பெருந்தீர்த்தங்கள் செறிந்த வெற்பு
புண்ணியத்தின் புகலிதெனப் புகழும் வெற்பு
பொன்னுலகிற் போகமெலாம் புணர்க்கும் வெற்பு
விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு
வேங்கடவெற்பென விளங்கும் வேத வெற்பே.

*திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்*

# 2. இராமாநுச நூற்றந்தாதி

## தனியன்

நயந்தரு பேரின்பம் எல்லாம் பழுதென்று நண்ணினர்பால்
சயந்தரு கீர்த்தி இராமாநுசமுனி தாளிணைமேல்
உயர்ந்த குணத்துத் திருவரங்கத்தமுது ஓங்கும் அன்பால்
இயம்பும் கலித்துறை அந்தாதி ஓத இசை நெஞ்சமே.

நயம் தரு பேரின்பம் = நல்லதைத் தரும் என்று உலகினர் அறிவு மயங்கி அனுபவிக்கும் சிற்றின்பம்; நண்ணினர்பால் = தம்மை அடைந்தவர்களுக்கு; திருவரங்கத்தமுது = நூலை இயற்றிய திருவரங்கத்து அமுதனார் என்னும் ஆசாரியர்; இயம்பும் = கூறும்; கலித்துறை அந்தாதி = இச்செய்யுள்களின் வகை.

பொருள்:

உலகினர் பெரிய இன்பமாக அறிவு மயங்கிக் கருதும் சிற்றின்பங்கள் அற்பமானவை, இறுதியில் துன்பமே பயப்பவை; அவற்றை இழிவானவை என்று விலக்கித் தம்மை அடைந்தவர்களுக்கு ஸம்ஸார ஜயத்தைச் செய்து அருள்பவர் ஸ்ரீ ராமானுஜர். இத்தகைய புகழ்பெற்ற எம்பெருமானாருடைய இரண்டு திருவடிகளையும் பற்றிப் பெருகிய அன்பாலே பிறர்க்கு நன்மையே செய்யும் உயர்ந்த குணமுடையவர் திருவரங்கத்தமுதனார்; இவர் அருளிச்செய்த கலித்துறை அந்தாதிப் பாசுரங்களால் அமைந்த 'இராமாநுச நூற்றந்தாதி' என்னும் பிரபந்தத்தை ஓதி உய்வடைவதற்கு, என் நெஞ்சமே! நீ இசைவாயாக.

ஆழ்வார் எனப்படும் ஸ்ரீ சடகோபருக்கு அடுத்து வணங்கத்தக்கவர் உடையவர், எம்பெருமானார் எனப்படும்

ஸ்ரீராமானுஜர். ஸ்ரீ வைஷ்ணவ ஆழ்வார்கள், ஆசாரியர்கள் அனைவருள்ளும் ஒப்பற்ற இடத்தைப் பெற்றுப் பெரிதும் போற்றப்படுபவர் ஸ்ரீ ராமானுஜரே என்றால் அது மிகையாகாது. வைணவத்திற்கு மட்டுமின்றிப் பொதுவாக பக்திமார்க்கத்திற்கே வலுவான அடிப்படை சித்தாந்தத்தை 'ஸ்ரீ பாஷ்யம்' என்கிற பிரம்மசூத்திர உரையின் மூலம் ஏற்படுத்தித் தந்தவர் உடையவரே. எம்பெருமானாரைக் குறித்து திருவரங்கத்தமுதனார் என்னும் ஆசாரியர் அருளிச்செய்த ''இராமாநுச நூற்றந்தாதி'' என்னும் பிரபந்தம், நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களில் இறுதியானது.

ஸ்ரீ மதுரகவியாழ்வார் ஸ்ரீ நம்மாழ்வார் விஷயமாக அருளிச்செய்த ''கண்ணிநுண் சிறுத்தாம்பு'' என்னும் பிரபந்தமும், இராமாநுச நூற்றந்தாதியும் ஸ்ரீ வைஷ்ணவத்தில் மிகச் சிறந்தனவாகப் போற்றப்படுபவை. காரணம், இவ்விரண்டும் ஆசார்யனை விஷயமாகக் கொண்டவை என்பதே. ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தில் ''ஸ்ரீமந் நாராயணனுடைய அவதார விசேஷமே ஆசார்யன்'' என்று கூறப்படுகிறது.

'இராமாநுச நூற்றந்தாதி' காயத்ரீ மந்திரத்தைப் போலவே தினமும் அனுசந்திக்கத்தக்கது என்பதனால், 'ப்ரபந்த சாவித்ரி' என்றும் 'ப்ரபந்த காயத்ரி' என்றும் ஸ்ரீ வைஷ்ணவர்களால் போற்றப்படுகிறது. இது இராமாநுசர் காலத்திலேயே இயற்றப்பட்டது.

'இராமாநுச நூற்றந்தாதி' பாடிய திருவங்கத்தமுதனார், ஸ்ரீ ராமானுஜரின் முக்கிய சீடரான கூரத்தாழ்வானின் சீடர். திருவரங்கம் பெரிய கோயிலில் இருந்ததனால் 'பெரிய கோயில் நம்பி' எனப்பட்டவர். ஸ்ரீ ராமானுஜருக்கு ஆழ்வார்களிடத்திலும், திவ்ய தேசங்களிடத்திலும் உள்ள அன்பை அவர் நியமித்தபடியே பாடும் இப்பிரபந்தம், எம்பெருமானார் சந்நிதியிலேயே அரங்கேற்றப்பட்டது. ஸ்ரீ ராமானுஜரே தம் திருவடி சம்பந்தமுடையாரெல்லாம் இதை நித்யானு சந்தேயமாம்படி கற்பித்தருளியதுந்தவிர, பெரிய கோயில் நம்பிகளின் வாக்கு அமுதவாக்காய் இருந்தமையால், அவருக்கு 'அமுதன்' என்ற திருநாமத்தையும் பிரசாதித்து அருளினார். அன்று முதல் நூலாசிரியர் 'திருவங்கத்தமுதனார்' என்றே வழங்கப்பட்டார்.

முதல் ஆழ்வார்களின் மீது ஸ்ரீ ராமானுஜருக்கு உள்ள பேரன்பைக் காட்டும் பாசுரங்களை இங்கு காண்போம்.

## ஸ்ரீ பொய்கையாழ்வார்

வருத்தும் புற இருள் மாற்ற, எம்பொய்கைப்பிரான் மறையின்
குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையுங்கூட்டி
ஒன்றத்திரித்து அன்று எரித்த திருவிளக்கைத் தன் திருவுள்ளத்தே
இருத்தும் பரமன் இராமாநுசன் எம் இறையவனே (8)

*புற இருள் = அஞ்ஞானம்; மறை = வேதம்; மறையின் குருத்து = வேதசாரம், வேதாந்தம்.*

**பாசுரத்தின் பொருள்:**

*துன்புறுத்தும் அஞ்ஞான இருளைப் போக்குவதற்காக, நமது பிரபந்த குலத்தலைவரான பொய்கையாழ்வார், முற்காலத்தில் வேதாந்தங்களின் சாரத்தையும், செந்தமிழ்ச் சொற்களையும் கூட்டி, இரண்டையும் ஒன்று சேரத் திரித்து, ''வையந்தகளியா'' என்று தொடங்கும் முதல் திருவந்தாதியைப் பாடியருளினார். ஒளிவீசும் மெய்ஞ்ஞான விளக்காகிய இந்தப் பிரபந்தத்தைத் தனது திருவுள்ளத்திலே என்றும் வைத்திருந்த மகா வைபவசாலியான ஸ்ரீ ராமானுஜரே நமக்கு நாதர்.*

*''புற இருள் மாற்ற... திரித்து அன்று எரித்த திருவிளக்கு'' என்பது இங்கு நமக்கு இத்திருக்குறளை நினைவூட்டுகிறது:*

*''எல்லா விளக்கும் விளக்கு அல்ல, சான்றோர்க்குப்*
*பொய்யா விளக்கே விளக்கு''*

**பரிமேலழகர் உரை:**

*புறத்து இருள் கடியும் உலகத்தார் விளக்குகள் எல்லாம் விளக்கு ஆகா; துறவான் அமைந்தார்க்கு விளக்காவது மனத்து இருள் கடியும் பொய்யாமை ஆகிய விளக்கே.*

*சான்றோர் = துறவான் அமைந்த ஸ்ரீராமானுஜர் போன்றவர்கள். பொய்யா விளக்கு = மனத்து இருள் கடியும் பொய்கைப்பிரான் ஏற்றிய திருவிளக்கு.*

## ஸ்ரீ பூதத்தாழ்வார்

இறைவனைக் காணும் இதயத்து இருள்கெட ஞானமென்னும்
நிறைவிளக்கு ஏற்றிய பூதத்திருவடி தாள்கள் நெஞ்சத்து
உறைய வைத்து ஆளும் இராமாநுசன் புகழ் ஓதும் நல்லோர்
மறையினைக் காத்து இந்த மண்ணகத்தே மன்ன வைப்பவரே (9)

பூதத்திருவடி = பூதத்தாழ்வார்; தாள்கள் = திருவடிகள்; மன்ன = நிலைபெற.

**பொருள்:**

பகவானைக் காணுவதற்கு உபகரணமான இதயத்தைச் சூழ்ந்துள்ள அஞ்ஞான இருள் நீங்கும்படி பூதத்தாழ்வார் ''ஞானச்சுடர் விளக்கேற்றினேன்'' என்று பரஞானமாகிய பரிபூரண தீபத்தை ஏற்றி வைத்தார். ''இரண்டாம் திருவந்தாதி'' அருளிய இந்த ஆழ்வாரது திருவடிகளைத் தமது திருவுள்ளத்திலே இடைவிடாது வைத்து அனுபவிப்பவர் இராமானுசர்; எம்பெருமானாருடைய திவ்ய குணங்களைத் துதிக்கும் நல்லோர் பிற சமயங்களால் அழியாதவாறு வேதங்களைக் காத்து இவ்வுலகில் நிலைநிறுத்த வல்லவர்கள்.

## ஸ்ரீ பேயாழ்வார்

மன்னிய பேரிருள் மாண்டபின் கோவலுள் மாமலராள்
தன்னோடு மாயனைக் கண்டமை காட்டும் தமிழ்த்தலைவன்
பொன்னடி போற்றும் இராமாநுசற்கு அன்பு பூண்டவர் தாள்
சென்னியிற் சூடும் திருவுடையார் என்றும் சீரியரே (10)

கோவலுள் = திருக்கோவலூரில்; சென்னி = தலை.

**பாசுரத்தின் பொருள்:**

நீடித்த அறியாமை இருள் முதலிரண்டு ஆழ்வார்கள் ஏற்றிய திருவிளக்காலே நீங்கியது. பிறகு திருக்கோவலூரில் பிராட்டியுடனே தோன்றிய பகவானைத் தாம் கண்ட வகையை ''திருக்கண்டேன்'' என்று தொடங்கும் மூன்றாம் திருவந்தாதியின் மூலம் தமிழ்த்தலைவராகிய பேயாழ்வார் வெளியிட்டருளினார். இவரது பொன்னடிகளைப் போற்றும் இராமானுஜரிடம் அன்பு பூண்டவர்களது திருவடிகளைத் தலையில் சூடும் பாக்கியம் பெற்றவர்களே என்றும் சிறந்தவர்கள்.

**எம்பெருமானார் திருவடிகளே சரணம்**

# 3. வேங்கடமே! யாம் விரும்பும் வெற்பு

## பொய்கையாழ்வார்

1. வேங்கடமே! வானோர் மனச்சுடரைத் தூண்டும் மலை.
2. வேங்கடமே! வெண்சங்கம் ஊதியவாய் மாலுகந்த ஊர்.
3. வேங்கடமே! மேலசுரர் எம்மென்னு மாலது இடம்.
4. வேங்கடமே! பேரோத வண்ணர் பெரிது (நின்றதுவும்).
5. வேங்கடமே! மேலசுரர் கோன் வீழக் கண்டுகந்தான் குன்று.
6. வேங்கடமே! மேலொருநாள் மான்மாய வெய்தான் வரை.

## பூதத்தாழ்வார்

7. வேங்கடமே! விண்ணவர்தம் வாயோங்கு தொல்புகழான் வந்து.
8. வேங்கடமே! பன்னாள் பயின்றது — மணிதிகழும் வண்தடக்கை மால்.
9. வேங்கடமே! யாம் விரும்பும் வெற்பு.

## பேயாழ்வார்

10. வேங்கடமே! மேலொரு நாள் மண் கோட்டுக் கொண்டான் மலை.
11. வேங்கடமே! மேலொரு நாள் மண்மதியில் கொண்டுகந்தான் வாழ்வு.
12. வேங்கடமே! மேல்நாள் விளங்கனிக்குக் கன்றெறிந்தான் வெற்பு.

13. வேங்கடமே! மேல்நாள் குழக்கன்று கொண்டு எறிந்தான் குன்று.
14. வேங்கடமே! மேலை இளங்குமரர் கோமான் இடம்.
15. வேங்கடமே! மேலொருநாள் தீங்குழல் வாய்வைத்தான் சிலம்பு.

## திருமழிசையாழ்வார்.

16. வேங்கடமே! வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு.
17. வேங்கடமே! நாடு வளைத்து ஆடுதுமேல் நன்று.
18. வேங்கடமே! விண்ணோர் தொழுவதும் மெய்ம்மையால்
19. வேங்கடமே! மெய்வினை நோய் தீர்ப்பதுவும்.
20. வேங்கடமே! வானவரைக் காப்பான் மலை.

## நம்மாழ்வார்

21. வேங்கடமே! அருமா மாயத்து எனதுயிரே! எனதுடலே!

'வேங்கடமே!' என்று பூலோக வைகுண்டமாகிய திருமலையை வியந்து, விளித்து மூன்றாவது அடி முடியும்; நான்காவது அடி வேங்கடாசலத்தின் மகிமையைக் கூறும் 'மகா வாக்கியமாக' அமையும். இவ்விதம் ஆறு பாசுரங்களை அருளிச் செய்துள்ளார் ஆழ்வார்களில் முதல்வரான பொய்கைப்பிரான்.

''முன்னோர் மொழிப் பொருளேயன்றி அவர் மொழியும்
பொன்னே போல் போற்றுவாம்''

என்னும் தமிழ் மரபினையொட்டி அடுத்துப் பாடிய பூதத்தார், பேயார், திருமழிசையாழ்வார் ஆகியோரும் இதே பாணியில் சில பாசுரங்களை அமைத்தனர். இவ்விதம் அமைந்த அடிகளை ஒன்று திரட்டியே, ''வேங்கடமே! யாம் விரும்பும் வெற்பு'' என்கிற தலைப்பில் கவிதைபோல் இங்கு அமைக்கப்பட்டிருக்கிறது. திவ்வியப் பிரபந்தம் என்னும் கடலில் கண்டெடுக்கப்பட்ட இந்த வேங்கட முத்துக்களைச் சற்று ஆராய்வோமா?

## பொய்கையாழ்வார்

**1. வேங்கடமே! வானோர் மனச்சுடரைத் தூண்டும் மலை**

வேங்கடம் தொழுவார் வினைச்சுடரை நந்துவிக்கும்; அதாவது, பாவம் என்னும் தீயை அணைத்துவிடும். அதே

நேரத்தில் தேவர்கள், நித்யசூரிகளுடைய மனச்சுடரைத் தூண்டும்; அதாவது திருவுள்ளமாகிய விளக்கைத் தூண்டி விளங்கச் செய்யும். குறைக்க வேண்டிய இடத்தில் தீயைக் குறைக்கும்; பெருக்க வேண்டிய இடத்தில் பெருக்கும்! மண்ணுலகத்தினர், விண்ணுலகத்தினர் ஆகிய இருசாராரும் வணங்குவது வேங்கடமே! (முதல் திருவந்தாதி, 26)

**2. வேங்கடமே! வெண்சங்கம் ஊதியவாய் மால் உகந்த ஊர்.**

மால் = திருமால், கிருஷ்ணன், பார்த்தசாரதி. மகாபாரதப் போரில் 'பாஞ்சசன்னியம்' என்கிற வெண்சங்கத்தை வாயால் ஊதினான் கீதாசார்யன். யுத்தத்தை முடித்தவன் விரும்பி எழுந்தருளியிருக்கும் ஊர் வேங்கடமே! (மு.தி. 37)

**3. வேங்கடமே! மேலசுரர் எம்மென்னும் மாலது இடம்**

மேல் = மேலான, சிறப்புடைய; சுரர் = தேவர்கள், வைகுந்தத்திலிருக்கும் நித்யசூரிகள்; மாலது = திருமாலுடைய; மால் = வ்யாமோஹம் (பிரேமை) உடையவன், பக்வத்ஸலன்.

மேலான நித்யசூரிகள் ''நம்முடைய திருமால்!'' என்று உரிமை கொண்டாடும் இடம் எது? வேங்கடமே! (மு.தி. 38)

**4. வேங்கடமே! பேரோத வண்ணர் பெரிது (நின்றதுவும்).**

பேர் ஓதம் வண்ணர் = பேரோத வண்ணர். பேர் = பெரிய; ஓதம் = கடல்; பெரிய கடல் நிறமுடைய பெருமாள்.

திருமால் தன் பெருமையெல்லாம் நன்கு தோன்ற நிற்குமிடம் வேங்கடமே! புண்ணியத் தலங்கள் யாவற்றினும் இத்தகைய ஏற்றம் திருமலைக்கே உண்டு (மு.தி. 39).

**5. வேங்கடமே! மேலசுரர் கோன் வீழக் கண்டு உகந்தான் குன்று**

மேல் + அசுரர் = மேலசுரர். அசுரர் கோன் = ஹிரண்யகசிபு. முன்னொரு நாள் அசுரர் தலைவனாகிய ஹிரண்யகசிபுவைக் கொன்று வீழ்த்தி, ''பக்தனாகிய பிரகலாதனின் விரோதி முடிந்தான்'' என்று மகிழ்ந்தான் திருமால். அந்த நரசிம்ம மூர்த்தியினுடைய மலை எது? வேங்கடமே! ஆச்ரித விரோதிகளை அழிக்கவே திருமலையில் உறைகிறான். (மு.தி. 40).

**6. வேங்கடமே! மேலொருநாள் மான்மாய எய்தான் வரை**

மேலொரு நாள் = முன்பொரு நாள்; வரை = மலை.

மாரீசன் என்னும் மாயமானைக் கொல்ல அம்பு எய்தான் கோதண்டராமன். அவன் சென்றடைந்த மலை எது? வேங்கடமே! (மு.தி. 82).

## பூதத்தாழ்வார்

**7. வேங்கடமே! விண்ணவர்தம் வாயோங்கு தொல்புகழான் வந்து**

நித்யசூரிகள் வாயாரத் தன்னை வாழ்த்தும் உயர்ந்த பழமையான குணங்கள் வாய்ந்தவன் ஏழுமலையான். (இரண்டாம் திருவந்தாதி, 25).

**8. வேங்கடமே! பன்னாள் பயின்றது மணிதிகழும் வண்தடக்கை மால்**

நீலமணிபோல் திகழ்ந்து, உதாரமாய் நீண்ட திருக்கைகளையுடைய திருமால் நெடுங்காலம் நித்யவாசம் செய்யுமிடம் வேங்கடமே! ஆச்ரிதர்கள் (தன்னைப் புகலாகப் பற்றியவர்கள்) புறம்பான போகங்களில் மனம் செல்லாதவாறு இவ்விதம் பெருமான் பல திருப்பதிகளில் உறைகிறான். (இ.தி. 46).

**9. வேங்கடமே! யாம் விரும்பும் வெற்பு**

வெற்பு = மலை. திவ்ய தேசங்கள் பற்பல என்றாலும், நாம் அனைவரும் மிக விரும்பும் மலை வேங்கடமே! இரத்தினச் சுருக்கமாக நம்மில் பலர் ஒப்புக்கொள்ளக் கூடிய கருத்தைக் கூறுவதால், இதுவே நம் தலைப்பும் ஆயிற்று. (இ.தி. 53).

## பேயாழ்வார்

**10. வேங்கடமே! மேலொருநாள் மண் கோட்டுக் கொண்டான் மலை**

மண் = பூமி; கோடு = பன்றியின் கோரைப்பல். முன்பு வராக அவதாரம் எடுத்து பூமியைத் தன் கோரப்பல்லினால் கொண்டு வந்த பெருமாளுடைய வராககிரி வேங்கடமே! பேயாழ்வார் அவதார லீலைகளைக் கூறுகிறார். (மூன்றாம் திருவந்தாதி, 45).

**11. வேங்கடமே! மேலொருநாள் மண்மதியில் கொண்டுகந்தான் வாழ்வு**

மதி = புத்தி சாதுர்யம். முன்னொருநாள் புத்திசாதுர்யத்துடன் மகாபலிச் சக்கரவர்த்தியிடமிருந்து மூன்றடி மண்ணைக் கேட்டு, மகிழ்ச்சியுடன் உலகளந்து கொண்ட திரிவிக்கிரமன் வாழும் மலை வேங்கடமே! (மூ. தி. 58).

**12. வேங்கடமே! மேல்நாள் விளங்கனிக்குக் கன்றெறிந்தான் வெற்பு**

விளாம்பழ வடிவில் கிருஷ்ணனைக் கொல்லக் காத்திருந்த கபித்தாசுரனை, கன்று வடிவெடுத்திருந்த வத்ஸாசுரனை எறிதடியாகக் கொண்டு அடித்து, இருவரையும் கொன்ற கண்ணனுடைய மலை வேங்கடமே! (மூ. தி. 68).

**13. வேங்கடமே! மேல்நாள் குழக்கன்று கொண்டு எறிந்தான் குன்று**

குழக்கன்று = இளங்கன்று, இங்கு வத்ஸாசுரன். அதே கிருஷ்ணலீலை! 'ஒரே கல்லில் இரண்டு மாங்காய்' என்பது போல், ஒரே வீச்சில் இரண்டு அசுரர்களைக் கிருஷ்ணன் வீழ்த்தியதால், இருமுறை இதை அனுபவிக்கிறார். கன்றைக் கொன்றவன் குன்று வேங்கடமே! (மூ.தி. 71).

**14. வேங்கடமே! மேலை இளங்குமரர் கோமான் இடம்**

மேலை = முன்னொரு நாள்; என்றும் பன்னிரண்டு (இருபத்தைந்து என்றும் கூறுவதுண்டு) வயதேயுடைய நித்திய சூரிகளின் அரசன் நிற்குமிடம் வேங்கடமே! (மூ.தி. 72)

**15. வேங்கடமே! மேலொருநாள் தீங்குழல் வாய்வைத்தான் சிலம்பு**

சிலம்பு = மலை. முன்பு புல்லாங்குழலிலே வாய்வைத்து வேணுகானம் செய்த முரளீதரன் நிற்கும் மலை வேங்கடமே! கிருஷ்ணாவதாரக் கூறுடையவன் ஸ்ரீவெங்கடேசன்; ஆகையால் பேயாழ்வார் வேங்கடகிருஷ்ணனின் லீலைகளில் ஆழங்காற்படுகிறார் (மூ.தி. 82).

## திருமழிசையாழ்வார்

**16. வேங்கடமே! வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு**

வைப்பு = நிதி. திருமலை உயர்ந்திருப்பதால், வானிலிருந்து தேவர்கள் இறங்கி வந்தும், உலகினர் ஏறிச்சென்றும் வணங்கும்படி

அமைந்துள்ளது. ஆன்மீகச் செல்வம் வைத்த மாநிதிபோல் குவிந்துள்ள மலை வேங்கடமே! (நான்முகன் திருவந்தாதி, 45)

**17. வேங்கடமே விண்ணோர் தொழுவதும் மெய்ம்மையால்**

**18. வேங்கடமே! மெய்வினை நோய் தீர்ப்பதுவும்.**

**19. வேங்கடமே! வானவரைக் காப்பான் மலை.**

நித்யசூரிகள் உண்மையான பக்தியுடன் தொழுவதும் வேங்கடமே! நம்முடைய பாவங்களையும், உடலை வருத்தும் நோய் நொடிகளையும் தீர்த்து வைப்பதும் வேங்கடமே! தேவர்களைக் காத்தருள்பவனுடைய மலையும் வேங்கடமே! ஒரே பாசுரத்தில் ''வேங்கடமே! வேங்கடமே! வேங்கடமே!'' என்று மும்முறை வாழ்த்தி விடுகிறார், திருமழிசையாழ்வார். வைத்த மாநிதிபோல், வேங்கடவன் புகழை ஒரே இடத்தில் குவித்து வைத்திருக்கிறார்! (நா. தி. 48).

**20. வேங்கடமே! எனதுடலே! அருமா மாயத்து எனதுயிரே!**

நம்மாழ்வார் தெற்குத் திருமலை எனப்புகழ் பெற்ற திருமாலிருஞ்சோலையைப் பாடிய பாசுரத்தில் இத்தொடர் வருகிறது. ''திருமால் திருவேங்கடமலையை விரும்புவது போலவே எனது உடலையும் விரும்பி அதனுள் அந்தர்யாமியாக உறைகிறான். என் உயிரோ கடப்பதற்கு அரிய இந்த மாயை என்னும் பிரகிருதியுடன் கலந்துள்ளது'' என்கிறார். (திருவாய்மொழி 10.7.8)

''திருவேங்கடம் தொடக்கமான கோயில்களில் செலுத்தும் ஆசையை ஸ்ரீமந் நாராயணன் என்னுடைய தலை, உயிர், மனம், வாக்கு அனைத்திலும் செலுத்தி ஒரு கணநேரமும் என்னைப் பிரியாதிருக்கிறான். அவனே எல்லா பூதங்களுக்கும் காரணமான ஸர்வேச்வரன்'' என்று இப்பாசுரத்தில் நம்மாழ்வார் கூறுகிறார்.

''வேங்கடமே யாம் விரும்பும் வெற்பு'' என்னும் வேங்கடேச பக்தர்களின் உடலே, இதயமே திருவேங்கடம், எம்பெருமான் உறையும் கோயில். வேங்கடவனே அவர்களது உயிர்!

**திருமலையாழ்வார் தாழ்வரையே சரணம்.**

# 4. சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை!

## பொய்கையாழ்வார்

1. வேங்கடத்தாய்! நால்வேதப் பண்ணகத்தாய்.
2. விண் கொடுக்கும் மண்ணளந்த சீரான் திருவேங்கடம்.
3. வேங்கடமும் நின்றான் என்றால் கெடுமாம் இடர்.
4. வேங்கடத்து மேயானும் உள்ளத்தின் உள்ளானென்று! ஓர்.

## பூதத்தாழ்வார்

5. வேங்கடத்தான் முன்னொரு நாள் மாவாய் பிளந்த மகன்.
6. வேங்கடவனையே! வாய்திறங்கள் சொல்லும் வகை.
7. வேங்கடத்தான் விண்ணோர் முடி தோயும் பாதத்தான்.
8. வேங்கடமென்று உளங்கோயில் உள்ளம் வைத்து உள்ளினேன்.
9. வேங்கடவன் மலரடிக்கே செல்ல அணி வேங்கடவன் பேராய்ந்து.
10. திருவேங்கடம் கண்டீர்! வான்கலந்த வண்ணன் வரை.

## பேயாழ்வார்

11. நால்பால் வேதத்தான் வேங்கடத்தான்.
12. வேங்கடமும் தாம் கடவார் தண்துழாயார்.
13. வேங்கடம் என் சிந்தை அனந்தன் இறைபாடியாய இவை.
14. வேங்கடமும் இடமாகக் கொண்டார் கோபாலகன்.
15. வேங்கடத்தான் உள்ளத்தின் உள்ளே உளன்.

16. வேங்கடத்தான் மண்ணொடுங்கத்தான் அளந்த மன்
17. பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்.
18. வேங்கடம் தன் குடங்கை நீரேற்றான் தாழ்வு.
19. வேங்கடம் பாடும் மால்கிடந்த நீள்கடல் புகும்.
20. வேங்கடவனையே கண்டு வணங்கும் களிறு.
21. வேங்கடத்து நின்றான் குரைகழலே கூறுவதே நலம்.

## திருமழிசையாழ்வார்

22. வேங்கடத்துள் நின்று குடந்தையுள் கிடந்த மாலும் அல்லையே?
23. வேங்கடம் மாலபதமே அடைந்து நாளும் உய்ம்மினோ.
24. வெறுப்பனோ வேங்கடத்து மேயானை.
25. அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண.
26. வேங்கடம் பாடினேன் வீடாக்கி நிற்கின்றேன்.
27. வேங்கடவா! என்னுள்ளம் புகுந்தாய் திருவேங்கடமதனைச் சென்று.
28. சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை.
29. வேங்கடத்தானை கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான்
30. போம்! குமரன் நிற்கும் பொழில் வேங்கடமலைக்கே!
31. கானமும் வானரமும் வேடும் உடை வேங்கடம்.
32. விண்ணாள வேண்டுவார் வேங்கடத்தான் பால் வைத்தாரே பன்மலர்கள்.

'வேங்கடமே!' என்றழைத்து ஆழ்வார்கள் பாடிய பாசுர வாக்கியங்களைக் கண்டோம். இவற்றைத்தவிர, முதல் நான்கு ஆழ்வார்கள் 'வேங்கட' பதத்தை உபயோகித்துப் பாடியுள்ள வாக்கியங்கள் இங்கு தொகுத்து அமைக்கப்பட்டுள்ளன. இவற்றை சற்று விளக்கமாகக் காண்போம்.

## பொய்கையாழ்வார்

### 1. வேங்கடத்தாய்! நால்வேதப் பண்ணகத்தாய்!

வேங்கடத்தில் நிற்பவனே! ஸ்வரப்ரதானமான நான்கு வேதங்களின் பண்ணின் மயமானவனே! உன் பெருமையை உணர்வார் யார்? என்கிறார் - (முதல் திருவந்தாதி, 68)

### 2. விண்கொடுக்கும் மண்ணளந்த சீரான் வேங்கடம்

முன்பு மண்ணளந்த பெருமானது திருவேங்கடமலை தவறாமல் வணங்குகிறவர்களுக்குப் பரமபதமளிக்கும்.

திருவேங்கடவனைத் தொழுபவர் உய்வர் என்று சொல்லவும் வேண்டுமோ? (மு.தி. 76).

**3. வேங்கடமும் நின்றான் என்றால் கெடுமாம் இடர்**

இடர் = துன்பம். திருமலைக்கு நேரில் சென்று ஏழுமலையானைத் தொழுதால்தான் பலன் கிடைக்கும் என்பதில்லை. திருவேங்கடத்தில் எம்பெருமான் நிற்கிறான் என்று நினைத்தாலே நமது துன்பங்கள் நீங்கிவிடும். பகவத்ஸ்மரணை பிறவித் துன்பத்தையும் போக்கும். (மு.தி. 77)

**4. வேங்கடத்துமேயானும் உள்ளத்தின் உள்ளான் என்று ஓர்**

ஓர் = தெரிந்து கொள்.

**வெள்ளத்தின் உள்ளானும் வேங்கடத்து மேயானும்**
**உள்ளத்தின் உள்ளானென்று ஓர்''**

என்பதே பாசுரத்தின் ஈரடிகள். வெள்ளம் = திருப்பாற்கடல். பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பவனும், வேங்கடத்தில் நிற்பவனும், ஆகிய திருமால் நம்முடைய இதயத்திலும் நித்யவாஸம் செய்கிறான். நமது இதயத்தில் இடம் பிடிப்பதற்கே திருமலையேறினான். எம்பெருமானின் அந்தர்யாமித்வத்தையும் கூறுகிறார் (மு.தி. 99)

## பூதத்தாழ்வார்

**5. வேங்கடத்தான் முன்னொருநாள் மாவாய் பிளந்த மகன்**

மா = விலங்கு, இங்கே குதிரை வடிவில் வந்த கேசி என்ற அரக்கன். முன்பொரு காலத்தில் குதிரையுருக்கொண்டு வந்த கேசியின் வாயைப் பிளந்து சிறு பிள்ளையான கிருஷ்ணன் கொன்று, 'கேசவன்' என்று புகழடைந்தான். அவனே வேங்கடத்தில் எழுந்தருளியிருக்கிறான். (இரண்டாம் திருவந்தாதி, 28)

**6. வேங்கடனையே! வாய்திறங்கள் சொல்லும் வகை**

திறங்கள் = தன்மைகள், வேங்கடவனின் அமைந்த கல்யாண குணங்கள். ''எனது மனம் துளசி மாலைகளணிந்த திருமாலையே நினைக்கிறது. எனது உடல் அவனையே வணங்குகிறது. எனது வாய் திருமலையில் மிடுக்குடன் நிற்கும் வேங்கடவனின்

தன்மைகளையே எப்பொழுதும் சொல்கிறது'' என்கிறார் பூதத்திருவடி. இங்ஙனம் மனம், மெய், வாக்கு ஆகிய திரிகரணங்களால் திருவேங்கடவனையே வழிபட்ட மாபெரும் வேங்கடேசபக்தர்கள் முதலாழ்வார்கள். நாமும் இவ்விதமே செய்ய முயன்று உய்வடைய வேண்டும் என்று கூறத் தேவையில்லை. (இ.தி. 33).

### 7. வேங்கடத்தான் விண்ணோர்முடி தோயும் பாதத்தான்

விண் = பரமபதம், வைகுந்தம். தேவர்களும், நித்யசூரிகளும் ஸ்ரீ வேங்கடாசலபதியின் திருவடிகளை தினமும் வந்து வணங்குவதாகக் கூறுகிறார். இகபரம் இரண்டிலும் புகல் அவனே. (இ.தி. 45).

### 8. வேங்கடமென்று உளங்கோயில் உள்ளம் வைத்து உள்ளினேன்

உளங்கோயில் = இதயக்கோயில். உள்ளினேன் = பிரார்த்திக்கிறேன், வேண்டுகிறேன். உள்ளம் வைத்து = பிரதிபத்தியாக, நன்றியாக. 'தென்னனுயர் பொருப்பும் தெய்வவடமலையும்' என்று தெற்கில் திருமாலிருஞ்சோலையும், வடக்கில் வேங்கடமலையும் புகழ்பெற்ற வைணவத்தலங்கள். ''இரு திருமலைகளிலும் நீ எவ்வளவு மனமுவந்து வாழ்கிறாயோ, அவ்விதம் என்னுடைய இதயக்கோயிலிலும் மகிழ்ச்சியுடன் உறைகிறாய். அதற்குப் பிரதிபத்தியாக (நன்றியாக) 'திருப்பாற்கடலைக் கைவிட்டு விடாதே' என்று நான் பிரார்த்திக்கிறேன்'' என்கிறார் ஆழ்வார். பக்தவத்ஸலனாகிய ஸ்ரீ வேங்கடேசன் பக்தனின் நெஞ்சில் மிகவும் விரும்பி உறைகிறான்; திருப்பாற்கடலையே காலிசெய்து விட்டு, பக்தர்களின் இதயக்கோயிலிலேயே நிரந்தரமாகத் தங்கிவிடுவானோ என்கிற ஐயம் ஆழ்வாருக்கு! எனவே இவ்விதம் வேண்டுகிறார். தென்மலை, வடமலை என்பது போல, இதயத்திலும் இரண்டு அறைகள் உண்டு; எனவே இரு திருமலைகளையும் சேர்த்தே பேசுகிறார்! இதயத்தெய்வம் நம் வேங்கடவன்.

### 9. வேங்கடவன் மலரடிக்கே செல்ல அணி வேங்கடவன் பேராய்ந்து

பேர் ஆய்ந்து = பெயர்களைச் சொல்லிக்கொண்டு; அணி = அழகிய. ''எனது மனமே! அழகிய திருமலைமீது நின்றவனது ஸ்ரீ வேங்கடேச ஸஹஸ்ர நாமங்களையே சொல்லி, அத்திருவேங்கடமுடையானுடைய மலரடிக்கே செல்லும்படி

*புஷ்பங்களை ஸமர்ப்பிப்பாயாக'' என்கிறார். 'புஷ்ப மண்டபம்' என்றே புகழ்பெற்ற பொன்மலையில் 'பூவங்கிசேவை' சாதிக்கும் புருஷோத்தமனுக்குப் புஷ்பாஞ்சலி செய்ய விரும்புகிறார். (இ.தி. 72).*

**10. திருவேங்கடம் கண்டீர்! வான் கலந்த வண்ணன் வரை**

*பூதத்தாழ்வார் இப்பாசுரத்தில் அற்புதமான யானைக் காட்சியொன்றைக் காட்டுகிறார்; இத்தகைய வேங்கடத்தைக் கண்டவர்களே! நீலமேக சியாமளனாகிய திருமாலின் மலையையல்லவா காணும் பேறு பெற்றவர்கள் நீங்கள், என்கிறார். (இ.தி. 75).*

## பேயாழ்வார்

**11. நால்பால் வேதத்தான் வேங்கடத்தான்**

*''நான்கு வேதங்களிலும் பேசப்படும் பிரம்மம் வேங்கடவனே; இவனை வணங்கி, மனத்தினால் தியானித்தால் சிற்றின்ப ஆசைகள் தாமாகவே நீங்கிவிடும்; வேதம் முதலிய சாத்திரங்களில் மனத்தைச் செலுத்துவதும், அவற்றின் உட்பொருளை உணர்வதும் எளிதாகும்'' என்கிறார். வேதமூர்த்தி வேங்கடேசன். (மூன்றாம் திருவந்தாதி, 14).*

**12. வேங்கடமும் தாம் கடவார் தண்துழாயார்**

*கடவார் = விடமாட்டார்; துழாய் = துளசி; தண்துழாயார் = துளசிமாலையணிந்த மூர்த்திகள். ''சிறந்த என் மனத்தையும், ஆதிசேஷனையும் விட்டு என்றும் நீங்காத திருமால் உறையுமிடம் வேங்கடம்'' என்கிறார் ஆழ்வார். இங்கும், அங்கும், எங்கும் இருப்பவன் சிறப்பாக எழுந்தருளியிருக்குமிடம் வேங்கடம். (மூ.தி. 26).*

**13. வேங்கடம் என்சிந்தை அனந்தன் இறைபாடியாய இவை.**

*இறை = இறைவன்; அரசன் இறைபாடி = ராஜதானி, இறைவனை நிச்சயமாகக் காண இயலுமிடம்.*

*பகவான் நிச்சயமாக எழுந்தருளியிருக்கும் இடங்களை ஆழ்வார் பட்டியலிடுகிறார்: என் மனம், பாற்கடல், குடந்தை (கும்பகோணம்) வேங்கடம், வைகுந்தம், பாடகம் என்னும் திருப்பதி, வேதம், ஆதிசேஷன். எங்கும் வியாபித்திருக்கும்*

விஷ்ணுவை இத்தகைய திவ்யதேசங்களைத் தவிர வேறு இடங்களில் நம்மால் காண்பது கடினம். "என் மனமே ஒரு வேங்கடேச தர்பார்" என்கிறார். (மூ.தி. 30).

### 14. வேங்கடமும் இடமாகக் கொண்டார் கோபாலகன்

அவதார சக்தியைத் தேக்கி வைப்பது அர்ச்சை. கிருஷ்ணாவதாரத்தின் சக்தி சிறப்பாக இன்று வெளிப்படும் இடமே வேங்கடம். (மூ.தி. 32).

### 15. வேங்கடத்தான் உள்ளத்தின் உள்ளே உளன்

எங்கும் நிறைந்த பரம்பொருளாகிய ஸ்ரீநிவாஸன் நம் உள்ளத்தினுள்ளேயே இருக்கிறான். நம்முடைய உட்கண் திறந்தால் அவனைக் காண இயலும். (மூ.தி. 39)

### 16. வேங்கடத்தான் மண் ஒடுங்கத்தான் அளந்த மன்.

மன் = சுவாமி, மன்னுபவன். உலகமே தெரியாதபடி மண் ஒடுங்க அதனைத் திரிவிக்கிரம அவதாரத்தில் அளந்த வேங்கடவனே நமது சுவாமி. (மூ.தி. 40)

### 17. பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்

பண்டு எல்லாம் = அனாதிகாலமாக. ஆதிகாலத்திலிருந்தே வேங்கடத்தையும், பாற்கடலையும் வைகுண்டமாகவே திருவுள்ளம் பற்றி நித்யவாஸம் செய்கிறான் திருமால். திருமலை பூலோக வைகுண்டம். "திருமால் வைகுந்தமே! தண் திருவேங்கடமே!" என்கிறார் நம்மாழ்வாரும். (மூ. தி. 61).

### 18. வேங்கடம் தன் குடங்கை நீரேற்றான் தாழ்வு

குடங்கை = உள்ளங்கை; தாழ்வு = வந்து தங்குமிடம். மகாபலிச் சக்கரவர்த்தி தாரைவார்க்க, தான நீரைத் தன் உள்ளங்கையில் ஏற்று யாசித்த வாமனன் தோன்றியுள்ள இடம் திருவேங்கடம். "பிச்சை எடுத்தான் பெருமாள்" என்று கூறுவது வாமனனையே. இது அவனுடைய சௌசீல்யத்தைக் காட்டுகிறது. (சௌசீல்யம் = தன்னைவிடத் தாழ்ந்தவரிடத்திலும் வேறுபாடு இன்றிச் சரளமாகப் பழகும் தன்மை). திருவேங்கடவனும் ஒரு விதத்தில் பிச்சையெடுத்த பெருமாளே! ஆதிவராகரிடம் நிலத்தை யாசித்து திருமலையில் கோயில் கொண்டவன் அல்லவா? சுவாமி புஷ்கரிணிக் கரையில் ஆதிவராகர் தாரைநீர் வார்க்க

ஏழுமலையான் நிலத்தை அளந்து கொண்டான் போலும் (மூ.தி. 62)

**19. வேங்கடம் பாடும் மால்கிடந்த நீள்கடல் புகும்**

வேங்கடத்தின் புகழ்படும் அடியார்கள், திருமால் கிடக்கும் திருப்பாற்கடலிலே நித்யம் நீராடப் புகுவர். வைகுந்தமடைவர் என்று சொல்லவும் வேண்டுமோ? இங்கே வியாக்யானச் சக்கரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளை உரையிலிருந்து சில மணியான வரிகள்: ''திருமலையைப் பாடுங்கோள்; திருத்துழாயைச் சூடுங்கோள்; திருப்பாற்கடலிலே முழுகுங்கோள்!'' திருத்துழாய் (துளசி) சூடுவது, திருமலையானிடம் சரண் புகுவதைக் குறிக்கும் (மூ. தி. 69).

**20. வேங்கடவனையே கண்டு வணங்கும் களிறு**

களிறு = யானை. திருமலை யானைகளும் துதிக்கையில் பூவை ஏந்தி, ஏழுமலையானை வணங்குகின்றன. அவனை அண்டுவதற்கு எந்தவிதத் தகுதியும் வேண்டியதில்லை - உயர்பிறப்புங் கூட! மனிதனாய்ப் பிறந்த நாம் அவனை அடைய முயலாமல் பிறவியை வீணாக்கலாமா? (மூ. தி. 70)/

**21. வேங்கடத்து நின்றான் குரைகழலே கூறுவதே நலம்**

குரை = குரைக்கும், ஒலி செய்யும்; கழல் = கழட்டக்கூடிய, காலில் அணியும் ஆபரணம்; எனவே குரைகழல் = திருவடி; வேங்கடத்து நின்றான் குரைகழலே கூறுவதே நாத்தன்னால் உள்ள நலம். திருவேங்கடனின் திருவடிகளைத் துதிப்பதே நாவினால் நாம் அடையக்கூடிய பயன்—நாராயணாவென்னாத நாவென்ன நாவே. (மூ. தி. 73).

## திருமழிசையாழ்வார்

**22. வேங்கடத்துள் நின்று குடந்தையுள் கிடந்தமாலும் அல்லையே?**

மால் = ஆச்ரயித்தவரிடம் வ்யாமோஹம் உடையவன், பக்தவத்ஸலன். கன்றுக்கு இரங்கும் பசுவைப்போல, பக்தர்களையே எண்ணி ஏங்குபவன்; இதற்காகவே வேங்கடத்தில் நின்ற திருக்கோலத்திலும், கும்பகோணத்தில் சாரங்கபாணிப் பெருமாளாகக் கிடந்த திருக்கோலத்திலும், பக்தர் வரும் வழிமேல் விழிவைத்துக் காத்திருக்கிறான். ''உன்னைப் பார்த்தால்

திருமலையில் நிற்பவன் ஜாடையாகத் தெரிகிறதே. நீதானே அவன்?'' என்று ஆராவமுதனை விசாரிக்கிறார். (திருச்சந்தவிருத்தம், 60)

**23. வேங்கடம் மாலபதமே அடைந்து நாளும் உய்ம்மினோ**

மால = திருமாலுடைய; நாளும் = நாள்தோறும்; உய்ம்மினோ = உய்வடையுங்கள், உஜ்ஜீவியுங்கள்.

திருவேங்கடத்திலுள்ள திருமாலின் திருவடிகளையே நாள்தோறும் ஆச்ரயித்து (பற்றி) வாழுங்கள். (தி.வி. 82)

**24. வெறுப்பனோ வேங்கடத்து மேயானை!**

வெறுப்பனோ = மறப்பேனோ? மேயான் = மேவுபவன், பொருந்தியிருப்பவன். ''ஸ்ரீ வேங்கடாசலபதியை என்னால் மறக்க முடியுமா? உடலை வருத்தும் பாவவினைகளும், நோய்களும் நம்மிடம் அணுகாமல் அகற்றும் தன்மையுடைய அவனுடைய திருவடிகளை மறப்பது தகுமோ?'' என்கிறார். (நான்முகன் திருவந்தாதி, 34)

**25. அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண**

''நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். இனி உலகத்தினர் எவ்விதம் நடந்தால் என்ன? என்னைப் பொறுத்தவரையில், திருவேங்கடமுடையானைக் கண்ணால் கண்டு சேவிக்க விரும்பி, அவனையே அழைக்கிறேன். திருமலையில் நித்யவாசம் செய்யும் பேறு கைகூடுமோ என்று சகுனம் பார்த்துக் கொண்டிருக்கிறேன்'' என்கிறார். (நா. தி. 39).

**26. வேங்கடம் பாடினேன் வீடாக்கி நிற்கின்றேன்.**

''வெற்பென்று வேங்கடம் பாடினேன் வீடாக்கி
நிற்கின்றேன் நின்று நினைக்கின்றேன்''.

வெற்பு = மலை; வீடு = மோட்சம், பரமபத சித்தி. ''பசுமலை, குருவிமலை, பச்சைமலை, பவழமலை'' என்று தமாஷாக மலைகளின் பெயரைச் சொல்லி வந்த என் வாயில் அகஸ்மாத்தாக ''திருவேங்கடமலை, திருமலை, ஏழுமலை'' என்று வந்துவிட்டது. இதனால் மோட்சம் எனக்கு நிச்சயம் என்னும்படி நிற்கிறேன். ''இத்தனை சிறிய சொல்லிற்கு, இத்தனை பெரிய பேறு கிடைத்தது எப்படி? என்று ஆராய்கிறேன்'' என்கிறார்

ஆழ்வார். கடுகளவு சாதனை, கடல் அளவு நன்மை! தினையளவு சொல், பனையளவு பயன்! (நா.தி.40)

**27. வேங்கடவா! என்னுள்ளம் புகுந்தாய் திருவேங்கடமதனைச் சென்று**

''நீ திருமலையிலிருந்து வந்து என்னுள்ளத்தில் புகுந்தாய்; நான் திருவேங்கடம் சென்று உன்னைக் காண விரும்புகிறேன்'' என்கிறார். (நா.தி. 41).

**28. சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை**

''நின்று வினைகெடுக்கும் நீர்மையால்'' என்பது அடுத்த இரண்டாவது வரி.

சேண் = உயர்வு; சேண் உயர் = மிகவுயர்ந்த; நீர்மை = சுபாவம், தன்மை, இயல்பு. ''பாவங்களைப் போக்குவதில் நிலைத்து நிற்கும் இயல்புடையது ஆகையால், 'நெடிதுயர்ந்த திருமலையாழ்வாரைச் சென்று வணங்கிப் பயனடைவீர்'' என்கிறார். வேங்கடம் என்றாலே பாவவினைகளைப் பொசுக்குவது என்று பொருள். இதுவே இங்கு பொருத்தமான தலைப்புமாகிறது! (நா. தி. 42).

**29. வேங்கடத்தானை கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான்**

கங்குல் = இரவு; இங்கு அந்தி, சந்தியாகாலம், ஸாயாஸந்த்யை; காப்பு அணிவான் = திருவந்திக்காப்பிடுவதற்கு; புகுந்தார்கள் = தினமும் புகுந்து கொண்டிருக்கிறார்கள்; பிரம்மாதி தேவர்கள் சூரியன் மறையும் அந்தி நேரத்தில் பற்பல பூசைப் பொருள்களுடன் ஸ்ரீ வேங்கடாசலபதியை ஆராதிக்கத் திருமலையில் தினந்தோறும் புகுந்து கொண்டிருக்கின்றனர். (நா. தி. 43)

**30. போம்! குமரன் நிற்கும் பொழில் வேங்கடமலைக்கே!**

குமரன் = நித்யயுவனாகிய எம்பெருமான். ''இளைஞர்களே! சோலைகள் நிறைந்த திருவேங்கடமலைக்கு இளமையிலிருந்தே செல்லுங்கள். நித்யகுமரனாகிய வேங்கடவனை வணங்குங்கள்!'' என்று தூண்டுகிறார். வயது முதிர்ந்தபின் பார்க்கலாம் என்று வாளாவிருப்பது அறிவீனம். (நா.தி.44)

### *31. கானமும், வானரமும், வேடும் உடை வேங்கடம்*

*காட்டிலுள்ள வேங்கடவன் தேவர்களால் தொழப்படுபவன்; ஆயினும் வானரங்களுக்கும், வேடர்களுக்கும் கூட முகங்கொடுக்கும் சௌசீல்யம் உடையவன். இன்றோ திருமலைக்காடு நாடாகிவிட்டது! (நா. தி. 47)*

### *32. விண்ணாள வேண்டுவார் வேங்கடத்தான்பால் வைத்தாரே பன்மலர்கள்*

*வைகுந்தத்தில் பெருமை பொலிய இருந்து ஆளும் பேறு பெற்றவர்கள், ' முன்பு திருவேங்கடமுடையான் திருவடிகளில் பலவகை மலர்களையும் ஸமர்ப்பித்தவர்களே. பாகவத சேவை செய்து, பக்தர்களால் 'நம்முடையவர்கள்' என்று அங்கீகரிக்கப்படுகிறவர்கள் முன்னவர்களை விடவும் சிறந்து பொலிவர். (நா. தி. 90)*

**திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.**

# 5. மண்மேல் மாதவன் பூதங்கள் மூவர்

பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம்
நலியும் நரகமும் நைந்த நமனுக்கு இங்கு
யாதொன்றுமில்லை
கலியும் கெடும் கண்டுகொண்மின் கடல்வண்ணன்
பூதங்கள் மண்மேல்
மலியப் புகுந்து இசைபாடி ஆடி உழிதரக் கண்டோம்.
(திருவாய்மொழி 5.2.1)

*பொலிக = வாழ்க; வல் = வலிய; சாபம் = பாவம்; நலியும் = வருத்தும்; நைந்த = அழிந்தன; பூதங்கள் = பக்தர்கள்; உழிதர = உலாவ.*

***பாசுரத்தின் பொருள்:***

*நீங்கள் நீடு வாழ்க! நீடு வாழ்க! நீடு வாழ்க! ஜீவர்களை அநாதிகாலமாய் பாதிக்கும் பாவங்கள் எல்லாம் அழிந்தன. பாவம் செய்தோரை வருத்தும் கொடிய நரகங்களும் நிலைகுலைந்தன. இனிமேல் யமனுக்கு பூவுலகில் ஒரு வேலையும் கிடையாது. கலியுகமே தொலைந்து விடும். நீங்கள் இவற்றை விரைவில் கண்முன் காண்பீர்கள்!*

*மேற்கூறிய நற்செய்திகளுக்குக் காரணம்—*

*கடல் வண்ணன் திருமால் அடியார்களாகிய ஸ்ரீ வைஷ்ணவர்கள் மண்மேல் எங்கும் கூட்டம் கூட்டமாக நிறைந்து இசை பாடிக்கொண்டு, ஆனந்தக்கூத்தாடி இங்குமங்கும் உலாவுவதைக் கண்டோம்.*

'பொலிக, பொலிக, பொலிக!' என்று வைணவரை வாழ்த்தும் நம்மாழ்வாரின் பிரசித்தி பெற்ற இந்தப் பாசுரத்துடன் துவங்கி, நாம் மாதவன் பூதங்களாகிய ஆழ்வார்களின் சரிதைகளையும், திருவேங்கடமுடையானைக் குறித்த அவர்களுடைய அருளிச் செயல்களையும் காண இருக்கிறோம். எங்கு பார்த்தாலும் கொடிய தீவினைகளும், பல்வகைத் துன்பங்களுமே மலிந்து, பூமியே நரகமாகி விட்டதோ எனத்தோன்றும் இக்கலியுகத்தில், அற்புதமான ஒரு ஆன்மீகப் பொற்காலத்தையே நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்தி, நம்பிக்கையூட்டுகிறார் நம்மாழ்வார். வைணவம் உரைவளத்திற் சிறந்தது. இத்திருவாய்மொழிக்கு வைணவ ஆசாரியர் அருளிச்செய்த உரைகளைக் காண்போம்.

**எம்பெருமானார் (ஸ்ரீ ராமானுஜர்) தொடக்க உரை:**

''ஒன்றும் தேவும்'' என்னும் திருவாய்மொழியில் ஆழ்வார் பகவானின் பரத்துவத்தை எடுத்துப்பேச, அதனால் திருந்திய ஸ்ரீ வைஷ்ணவர்கள் கூட்டம் நித்திய சூரிகளும் கண்டு அனுபவிக்கும்படி இருக்கையாலே, அவர்கள் கூட்டத்தைப் பார்த்து மகிழ்ந்து, அவர்களுக்குக் கேடு உண்டாகாதவாறு திருப்பல்லாண்டு பாடுகிறார்.

**ஆளவந்தார் உரை:**

ஆயின் ஆளவந்தாரோ, ''ஆழ்வாருடைய ஸ்ரீ வைஷ்ணவஸ்ரீயைக் காண நித்தியசூரிகள் இங்கே வரவும், அவர்களைக் கண்டு ஆழ்வார் மங்களாசாஸனம் செய்வதே இத்திரு வாய்மொழி'' என்று அருளியதாகத் திருமாலை ஆண்டான் பணிப்பார்.

**திவ்யார்த்த தீபிகை:**

ஸ்ரீ காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் உரை: ஆழ்வாருடைய ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயாவது, ஆழ்வாருடைய உபதேசம் கேட்டுத் திருந்தின ஸ்ரீ வைஷ்ணவர்களின் ஸம்ருத்தியாகிய ஸ்ரீயாம்.

**'ஆழ்வார்கள் அமுத நிலையம்' திருவாய்மொழி உரை:**

'வீற்றிருந்து ஏழுலகும்' என்று தொடங்கும் திருவாய்மொழியில் (ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளைக் குறித்தது

இது) பெருமாளுக்குத் திருப்பல்லாண்டு பாடினார். இங்கு இத்திருவாய்மொழியில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் திருப்பல்லாண்டு பாடுகிறார்.

**ஸ்ரீ மணவாள மாமுனிகள் உரை:**

இவர்தாம் மயர்வற மதிநலம் பெற்றவராகையாலே 'கலியுங் கெடும்' என்று திருமங்கையாழ்வார், உடையவர் (ஸ்ரீ ராமானுஜர்) போல்வார் அவதரித்துக் கலியுக ஸ்வபாவமும் கழியுமென்று மேல்வரும் அம்சத்தை தர்சித்து அருளிச் செய்தாப்போலே.

ஸ்ரீ மணவாள மாமுனிகள் அருளிச் செய்தபடியே, சுவாமி விவேகானந்தரும் முன் யுகங்களில் தோன்றியதைவிட மிக அதிகமாக, சக்திவாய்ந்த ரிஷிகள் இனிமேல்தான் அவதரித்து, உலகின் மூலை முடுக்குகளில் எல்லாம் உலாவப் போவதாகப் பேசியுள்ளார். சநாதன தர்மம் உலகெங்கும் தழைக்கப் போவதை அரவிந்தர் போன்ற பல மகான்கள் அறிவித்துள்ளனர்.

**ஸ்ரீ வேங்கடேச பாகவதம் உரை:**

இங்கே நாம் எடுத்துக்கொண்ட நூல் தலைப்புக்கு ஏற்றபடி உரை காண இயலும். நம்மாழ்வார் காலத்திலே ஏழுமலை வானரங்களும், வேடர்களுமே நடமாடும் காடாக விளங்கியது. ஆயினும் இன்று ஆழ்வார் அருளிச் செய்தபடியே ஸ்ரீ வைஷ்ணவஸ்ரீ மிகுந்து பொலியும் திவ்விய தேசமாகத் திருமலை திகழ்கிறது.

''வினைச் சுடரை நந்துவிக்கும் வேங்கடம்'' என்றே ஸ்ரீ பொய்கையாழ்வார் திருமலையை மங்களாசாஸனம் செய்துள்ளார். 'வேங்கடம்' என்றால் ''பாவ வினைகளைப் பொசுக்கி அழிப்பது'' என்றே பொருள். வேங்கடாத்ரியில் நம் 'வல்லுயிர்ச் சாபம்' விலகிவிடுகிறது! யமனுக்கு இங்கே வேலையில்லாத் திண்டாட்டமே. கலியும் கெடும்படி, கலியுக வரதனாகிய ஸ்ரீ வெங்கடேசன் ஏழுமலையில் எழுந்தருளியுள்ளான். பூலோகத்தில் ஸ்ரீநிவாஸன் தோன்றியதால், நலியும் நரகங்கள் நைந்து போயின. கடல்வண்ணனாகிய திருவேங்கடவனின் பக்தர்கள் ''மண்மேல் மலியப்புகுந்து இசை பாடி ஆடி'' உலாவுவதை ஆழ்வார் அருளியபடியே நாம் கண்கூடாகத் திருமலையில் காண்கிறோம்.

ஆழ்வார்கள், ஸ்ரீராமானுஜர், ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர், ஸ்ரீராமகிருஷ்ணர் போன்ற அவதார புருஷர்கள் தோன்றும்

போதெல்லாம் அங்கே பாவம் குறைந்து, கலியின் கொடுமை தணிந்து, பக்தி நெறி தழைத்துப் பாவிகளும் உய்வடையும் வண்ணம் ஒரு சத்திய யுகமே பிறக்கிறது. இத்தகைய சக்தி வாய்ந்த பக்திசாம்ராஜ்யத்தை முதன் முதலில் தோற்றுவித்தவர்கள் ஆழ்வார்களே. பக்திமார்க்கம் ஆழ்வார்களாலேயே பெரு வளர்ச்சியுற்று எங்கும் தழைத்தது. எனவே ஸ்ரீ வைஷ்ணவர்களை வாழ்த்தும் இத்திருவாய்மொழிப் பாசுரம் மகாபாகவதர்களாகிய முதலாழ்வார்களுக்கே சிறப்பாகப் பொருந்தும். ''பொலிக, பொலிக, பொலிக!'' என்னும் பொன்மொழிகளை முதலாழ்வார்களுக்கே உரியதாகப் பொருள் காண்போம்.

**பொலிக, பொலிக, பொலிக!**

வைதீக மங்களாசாஸனம் ''சாந்தி: சாந்தி: சாந்தி:'' என்று மும்முறை கூறுவது போலவே இங்கும் மூன்று முறை திருப்பல்லாண்டு பாடுகிறார்.

'பொலிக' என்னும் சொல் 'ப' என்கிற எழுத்துடன் ஆரம்பிக்கிறது. ''பொய்கையாழ்வார், பூதத்தார், பேயாழ்வார்'' ஆகிய முதலாழ்வார்களின் திருநாமங்களும் 'ப' என்கிற எழுத்திலேயே பிறந்து பொலிகின்றன! எனவே இங்கு—

''பொய்கையாழ்வாரே பொலிக!
பூதத்தாழ்வாரே பொலிக!
பேயாழ்வாரே பொலிக!'' ,

என்று மும்முறை முதலாழ்வார்களை சிறப்பாக நம்மாழ்வார் இப்பாசுரத்தில் மங்களாசாஸனம் செய்வதாகக் கொள்ளத் தடையில்லை!

**ஆழ்வார் திருவடிகளே சரணம்.**

# 6. முதலாழ்வார்கள் மூவர்

*பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய முதல் மூன்று ஆழ்வார்களும், ''முதலாழ்வார்கள்'' என்று ஒருங்கே பேசப்படுவர். முதலாழ்வார்கள் என்ற திருநாமம் வந்ததன் காரணத்தை, மணவாள மாமுனிகள் ''உபதேச ரத்தின மாலை'' ஏழாம் பாட்டில் அருளிச் செய்துள்ளார்:*

மற்றுள்ள ஆழ்வார்களுக்கு முன்பே வந்துதித்து
நற்ற தமிழால் நூல் செய்து நாட்டை உய்த்த பெற்றிமையோர்
என்று முதலாழ்வார்களென்னும் பெயர் இவர்க்கு
நின்றது உலகத்தே நிகழ்ந்து.

*நற்ற = நல்ல; பெற்றிமை = பெருமை.*

*மற்ற ஆழ்வார்களுக்கு முன்னே இவ்வுலகில் அவதரித்து, நல்ல தமிழ்மொழியில் முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந்தாதி என்னும் திவ்வியப் பிரபந்தங்களை அருளிச் செய்து, நாட்டில் வாழ்பவர்கள் உய்வடையும்படி செய்த பெருமையுடையவர்கள் என்ற காரணத்தால் ''முதலாழ்வார்கள்'' என்ற திருநாமமானது இவர்களுக்கு உலகில் வழங்கப்பட்டு, பிரசித்தி பெற்று நின்றது.*

*முதலாழ்வார்கள் மூவரையும் அ, உ, ம என்கிற மூன்று எழுத்துக்கள் அடங்கிய ''ஓம்'' என்கிற பிரணவம் போலே முதன்மையாகக் கருதுவர்.*

*முதலாழ்வார்களுடைய இயற்பெயர்கள் நமக்குத் தெரியாது. அவர்களுடைய அருளிச் செயல்களே கிடைத்திருக்கின்றன.*

நிஷதங்களில் கூறப்பட்டுள்ள அரிய ஆன்மீக உண்மைகளை
ில் கண்டறிந்த ரிஷிகளின் இயற்பெயர்களும் நமக்கு
நகமாகத் தெரியவரவில்லை. 'யான், எனது' என்னும்
ங்காரம் அற்ற அத்தகைய ஆன்மீகச் செல்வர்களே முதல் மூவர்.
லாழ்வார்களின் காரணப் பெயர்களே நம்மிடையே வழங்கி
கின்றன.

திருவெஃகா என்னும் கச்சி திவ்விய தேசத்தில் சொன்ன
ணம் செய்த பெருமாள் கோயில் பொய்கையில்
தரித்ததால் முதலாழ்வார் 'பொய்கையாழ்வார்' என்னும்
நாமம் பெற்றார். சரோவரத்தில் உதித்ததால் இவர்
ராயோகி' எனப்படுவார். நீருக்குத் தெய்வம் நாராயணன்.
ாய்கை முதலிய நீர்நிலைகளில் தேங்கியிருக்கும் நீரை
பெருமானின் அர்ச்சாவதாரத்திற்கு உவமையாக வைணவத்தில்
ரப்பர். பொய்கை, மழை பெய்த பின்பும் வெகுநாட்களுக்கு
ரத் தேக்கி வைத்து உதவுவதுபோல, பகவான் உலகில்
பதரித்து வெளிப்படுத்தும் ஆன்மீக சக்தியை அவனுடைய
ச்சைநிலை தேக்கிவைத்து, அவதார காலத்திற்குப் பிறகும்
களை இரட்சிக்கின்றது. ஸ்ரீ ராமாவதார சக்தி திருவரங்கன்
லமும், ஸ்ரீ கிருஷ்ணாவதார சக்தி திருவேங்கடவன் மூலமும்
ப்பாக வெளிப்பட்டு, இன்றும் மக்களை உய்விப்பதாகக்
புவர். ஆழ்வார்கள் அர்ச்சை நிலைக்கே முதலிடம்
ரிக்கின்றனர். எனவே அர்ச்சை நிலையைக் குறிக்கும்
ாய்கையே, முதலாழ்வாரின் திருநாமமாகியிருப்பது எவ்வளவு
ாருத்தமானது!

கோடை வெயில் அதிகரிக்கும்போது, கறவை மாடுகளும்
ல்நடைகளும் பொய்கை போன்ற நீர்நிலைகளைக் கண்டதும்
ல் இறங்கி, உண்டும், உமிழ்ந்தும், அமிழ்ந்தும் ஆழங்காற்பட்டு
பகையே மறந்து சுகத்தில் மிதக்கும். அது போலவே விஷய
ங்கள் என்கிற வெயில் உலகை எரிக்கும்போது, மகான்கள்
திலிருந்து விடுபட்டு, எம்பெருமான் என்கிற
ாய்கையிலேயே ஆழ்ந்து, அவனையே அனுபவிப்பர்.
ங்ஙனம் விஷ்ணுபக்தி வெள்ளத்திலே எப்பொழுதும் ஆழ்ந்து
ந்தவர்களே ஆழ்வார்கள். மற்றும், முதலாழ்வார்கள்
ல்நடையாகவே பல திவ்விய தேசங்களுக்கு நடந்து சென்று,
வை மாடுகள் பால் கொடுத்து உதவுவதைப்போல், திவ்வியப்
ரபந்தங்கள் வாயிலாக ஞானப்பாலை மக்களுக்கு ஊட்டி
ப்விக்கச் செய்ததையும், இந்த உவமை நமக்கு நினைவூட்டுகிறது!

*ஆழ்வார் அவதரித்த தாமரைப் பொய்கையை, இறைவனின் இணையடி நிழலுக்கு உவமையாகக் கூறி, அப்பர் சுவாமிகள் பாடியிருப்பது இங்கே இன்புறத்தக்கது:*

**''மாசில் வீணையும் மாலை மதியமும்**
**வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்**
**மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே**
**ஈசன் எந்தை இணையடி நிழலே''.**

*துளிக்கூட தோஷமே இல்லாத வீணா கானம்; பூரண சந்திரனின் பால் போன்ற நிலா; தென்றல் காற்று; வசந்த காலத்தின் மலர்ச்சி; வண்டுகள் ரீங்காரம் செய்து கொண்டிருக்கிற தாமரைப் பொய்கை.*

*இவை இந்திரியங்களுக்கு அகப்படுகிற இன்பங்கள் போல இருந்தாலும், தெய்வீகமான ஆனந்தத்தைத் தருவதால் ஈசுவர சரணாரவிந்தப் பேரின்பத்துக்கு உபமானமாக அடுக்கியிருக்கிறார் அப்பர். 'ஈசன் எந்தை' என்று பொதுப்பட இறைவனைப் பேசியிருப்பதும் இங்கே அனுபவிக்கத் தக்கது.*

*திருநாவுக்கரசரின் பாடல் நமக்கு திருமலை அனுபவத்தை நினைவுபடுத்தி விடுகிறது. மாசில்லாத வீணாகானம் போன்றவையே ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதமும், ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களும். இளவேனிற்காலம், வீசும் தென்றல், பேசும் முழு நிலா - இவை போன்ற திருமலை உடலுக்கும், உள்ளத்திற்கும் 'குளு குளு' என்றிருக்கிறது. சுவாமி புஷ்கரிணியே மூசு வண்டறைப் பொய்கை. ஈசன் என்பது ஸ்ரீ வேங்கடேசன்; 'எந்தை' என்பது நமக்கு 'திருவேங்கடத்து எழில்கொள் சோதி எந்தை தந்தை தந்தை'.*

*சுவாமி புஷ்கரிணி என்கிற பொய்கையில் முழுகிய பிறகே திருவேங்கடவனை சேவிக்க வேண்டும். மாபெரும் வெங்கடேச பக்தராகிய பொய்கைப்பிரான் அவதரிக்கும்போதே பொய்கையில் மூழ்கி, அப்போதே திருமாலைக் கண்டு கைதொழுது, இவ்வாறு அருளிச் செய்துள்ளார்:*

**''கருவரங்கத்துட் கிடந்தே கைதொழுதேன் கண்டேன்**
**திருவரங்க மேயான் திசை''.**

*இரண்டாவதாக அவதரித்த ஆழ்வார் பூதத்தார். 'பூதம்' என்னும் சொல் இந்திரியம், இந்திரியங்களால் அறியக்கூடிய வெளித்தோற்றம், சக்தி வாய்ந்த ஆவி, பக்தன் என்று பல*

விதமாகப் பொருள்படும். விஷ்ணுபக்தியின் மிகவும் சக்தி வாய்ந்த வெளிப்பாடே பூதத்தாழ்வார். நம்மாழ்வார் 'பூதம்' என்கிற சொல்லை 'பக்தன்' என்கிற பொருளில் ''பொலிக பொலிக'' என்னும் திருவாய்மொழியில் பலமுறை பயன்படுத்தியுள்ளார்:

''வண்டு ஆர் தண்ணந்துழாயான் மாதவன் பூதங்கள் மண்மேல்
பண்தான் பாடிநின்று ஆடிப்பரந்து திரிகின்றனவே.'' (5.2.2)
''கரிய முகில்வண்ணன் எம்மான் கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல்
இரியப் புகுந்து இசைபாடி எங்கும் இடம் கொண்டனவே'' (5.2.3)

'மாதவன்' என்றால் இலட்சுமிப் பிராட்டியுடன் கூடியவன், அலர்மேல் மங்கையுறை மார்பனாகிய ஸ்ரீநிவாஸன். முதலாழ்வார்கள் மாபெரும் ஸ்ரீநிவாஸ பக்தர்களாதலால் ''மண்மேல் மாதவன் பூதங்கள் மூவர்'' ஆகின்றனர்! வேங்கடேச பூதங்களுள் (பக்தர்களுள்) வேந்தனாகிய பூதத்தார் கடன்மல்லை என்கிற மகாபலிபுரத்தில் அவதரித்தவர்; எனவே ''கடன்மல்லைக் காவலனே! பூதவேந்தே!'' என்று ஸ்ரீ வேதாந்த தேசிகர் ஆழ்வாரை அழைத்துள்ளார்.

பூதத்தாழ்வாரே 'பூதம்' என்கிற சொல்லைப் பயன்படுத்தி, அதற்குச் சிறந்த விளக்கமும் அருளிச் செய்துள்ளார். இப்பாசுரம் திருமலையை மறைமுகமாக மங்களாசாஸனம் செய்வதாகவும் அமைந்துள்ளது.

வந்தித் தவனை வழிநின்ற வைம்பூதம்
ஐந்தும் அகத்தடக்கி ஆர்வமாய் - உந்திப்
படியமரர் வேலையான் பண்டு அமரர்க்கு ஈந்த
படியமரர் வாழும் பதி.(26)

வந்தித்து = வணங்கி; ஆர்வமாய் = ஆர்வமே வடிவானவர்; படி அமரர் வேலையான் = அமரர்கள் தன்னைக் காண்பதற்காகத் திருப்பாற்கடலில் படிந்தவன். வேலை = கடல். பதி = இங்கே, திருமலை.

பொருள்:

பகவானை அடைவதற்கு விரோதிகளான ஐந்து பூதங்களையும் (ஐம்பொறிகளையும்) வெளியிற் செல்லவொட்டாது அடக்கி, அன்பே வடிவானவர்களாய்

அவனையே புகலாக அடைவர் அடியார்கள். (பூதத்தார் என்ற சொல்லுக்கு இது விளக்கமாகிறது).

பிரம்மன் முதலிய தேவர்கள் நான், நீயென்று ஒருவரையொருவர் உந்தித் தள்ளிக்கொண்டு வந்து வணங்குவது திருப்பாற்கடலில் சயனித்திருக்கும் பெருமானை. நித்யசூரிகளுக்குப் பரிசாக அவன் கொடுத்த பூமி, ஸ்ரீ வைஷ்ணவர்கள் வாழும் திருமலையாகும்.

இத்தகைய திருமலையில் எழுந்தருளியிருக்கும் மாதவன் பூதங்களுக்குத் தலைவராய் மண்மேல் தோன்றி, ''பண்தான் பாடிநின்று ஆடிப்பரந்து'' திரிந்தவரே பூதத்தாழ்வார். இவர் பூதயோகி, பூதத்திருவடி, பூதவேந்தர் என்றும் அழைக்கப்படுவார்.

முதலாழ்வார்களில் மூன்றாமவர் பேயாழ்வார். பகதவனுபவம் கைவரப்பெற்ற மகான்கள் இவ்வுலகில் உணர்வற்ற சடப்பொருள், பாலகன், பித்தன், பேய்பிடித்தவன், ராஜாதிராஜன் போன்ற ஐந்து நிலைகளில் ஒன்றை மேற்கொண்டு உலவுவர் என்கிறார் ஆதிசங்கரர். விஷ்ணுபக்தி தலைக்கேறி, பரமபக்தி என்னும் பித்துப்பிடித்து, உலக நினைவே இல்லாமல் பாசுரங்கள் பாடியும், ஆனந்தக் கூத்தாடியும் திரிந்த மூன்றாவது ஆழ்வார் உலக மக்களால் 'பேயார்' என்றே அழைக்கப்பட்டதில் வியப்பில்லை.

**பேய் என்ற சொல்லின் கருத்து:**

தான் பிடித்த பிடியை நழுவ விடாமலிருப்பது என்பது. இறைவனிடம் இந்த ஆழ்வார் கொண்ட பரமபக்தி இடையறாமல் நிகழ்ந்து வந்ததால் 'பேயார்' என்கிற திருநாமம் இவருக்கு உரியதாயிற்று.

**பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் விளக்கம்:**

பார்ப்பவர்கள் கண்ணில் இவர் 'பேய் பிடித்தவர்' என்னும்படி நெஞ்சழிந்து, கண் சுழன்று, அழுதும், சிரித்தும், தொழுதும், எழுந்தாடியும், மகிழ்ந்து பாடியும், அலறியுமே பொழுதுபோக்கிக் கொண்டிருந்தமையால் 'பேயாழ்வார்' என்ற திருநாமம் பெற்றனர்.

குலசேகர ஆழ்வாரும் தம்மைப் 'பேயன்' என்றே பேசியுள்ளார்:

''பேயரே எனக்கு யாவரும் யானுமோர்
பேயனே எவர்க்கு மிது பேசியென்?
ஆயனே! அரங்கா! என்றழைக்கின்றேன்
பேயனாயொழிந்தேன் எம்பிரானுக்கே''.

''பகவான் அருளால் அவனையறிந்த எனக்கு, பக்தர் அல்லாத அனைவரும் புத்தி கெட்ட பேயர்களே; உலக ஆசைகள் நிறைந்த அவர்களைப் பொறுத்தவரை, அதில் ஈடுபாடற்ற நான் மதிகெட்ட பேயனே. இதைச் சொல்லி என்ன பயன்? ஆயர் குலத்தில் பிறந்த கோபாலா! திருவரங்கா! எம்பிரானிடமே பித்தேறிய பேயனாக நான் கிடக்கிறேன்'' என்கிறார் குலசேகரர்.

பேயாழ்வார் இப்பாசுரத்திற்கு இலக்கணமாகவே திகழ்ந்து பெயரெடுத்தவர் என்று கூறத் தேவையில்லை!

**ஸ்ரீ பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.**

# 7. தொண்டை நாட்டுத் தொண்டர்கள்

இன்றையத் தமிழ்நாட்டின் சென்னை, செங்கற்பட்டு மாவட்டங்கள் அன்று தொண்டைநாடு, தொண்டை மண்டலம் எனப்பட்டது. ''தெண்ணீர் வயல் தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து'' என்பது ஔவையார் வாக்கு. முதல் நான்கு ஆழ்வார்களும் தொண்டை நாட்டிலே தோன்றியதை எண்ணியே தமிழ்ப்பாட்டி பாடினாள் போலும்! ஏனெனில் பொய்கை, கிணறு ஆகிய 'தெண்ணீரிலே', பொய்கையாரும், பேயாரும்; மல்லிகைப் புதர், பிரம்புப் புதர் ஆகிய ''வயலிலே'', பூதத்தாரும், திருமழிசையாரும் அவதரித்து அருளினர். இத்தகைய தெய்வீகச் சான்றோர்கள் தோன்றிய தொண்டை நன்னாடு, இன்றும் ஆன்மீகப் பொன்னாடாகவே பொலிந்து கொண்டிருக்கிறது!

தொண்டை மண்டலத்தின் தலைநகரமோ, பண்டை நாட்களிலிருந்தே தொல்புகழ் பெற்றுத் திகழும் காஞ்சீபுரம். ஏழு மோட்சபுரிகளுள் இதுவும் ஒன்று. வரதராஜப் பெருமாள் தலையாக, பதினான்கு வைணவ திவ்விய தேச மூர்த்தியர் காஞ்சியைச் சுற்றியுள்ள கோயில்களில் எழுந்தருளியுள்ளனர். இதைத் தவிர, காஞ்சியைச் சுற்றியமைந்துள்ள ஸ்ரீ பெரும்புதூரில் ஆசாரியருள் சிறந்த எம்பெருமானாராகிய ஸ்ரீ ராமானுஜரும், பூவிருந்தவல்லியில் திருக்கச்சி நம்பிகளும், தூப்புலில் ஸ்ரீ வேதாந்த தேசிகரும் அவதரித்தருளினர். எனவே ''தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோருடைத்து'' என்று பாடிய ஔவையின் வாய்க்குச் சர்க்கரைதான் போடவேண்டும். ஆசாரியர்களின் விஷயத்திலுமல்லவா பாட்டியின் பாட்டு பலித்துவிட்டது!

நிற்க, காஞ்சியில் 'திருவெஃகா' என்றொரு திவ்விய தேசம் உண்டு. இத்தலத்தில் ''சொன்ன வண்ணம் செய்த பெருமாள்'' (யதோக்தகாரி) திருப்பள்ளி கொண்டுள்ளார். இங்குள்ள சரோவரமே (பொய்கையே), முதலாழ்வார் பொற்றாமரையில் தோன்றிய இடம். எனவே இவர் சரோயோகி, பொய்கையாழ்வார் எனப்படுவார். ''சொன்ன வண்ணம் செய்த பெருமாள்'' பொய்கையில் அவதரித்தவர், பின்னர் ''பெருமாள் செய்த வண்ணம் சொன்ன'' பரமகவியாக விளங்கியதில் வியப்பில்லை! இங்கே 'பெருமாள் செய்த வண்ணம்' என்பது 'நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தானே' என்றபடி ஸ்ரீமந் நாராயணனின் அர்ச்சை நிலைகளையும், அவதாரச் செயல்களையும் குறிக்கும். இவ்விதம் சொன்னவர் பொய்கையார். 'ராம, ராம' என்கிற தாரக மந்திரத்தை 'மரா, மரா' என்று தலைகீழ் பாடமாகச் சொல்லியும் வால்மீகி முனிவர் உய்வடைந்தார். இவ்வண்ணமே, ''சொன்ன வண்ணம் செய்த பெருமாள்'' என்கிற எம்பெருமானின் திருநாமத்தை அப்படியே வார்த்தைக்கு வார்த்தை தலைகீழாகத் திருப்பி ''பெருமாள் செய்த வண்ணம் சொன்ன'' என்று சொன்னால், அதுவே அத்தலத்தில் அவதரித்த ஆழ்வார்க்கும் பொருத்தமாக அமைந்து விடுகிறது!

ஆழ்வார்களில் முதலில் அவதரித்த நாம் சரோயோகியாருக்கும், தேவர்களில் முதலில் தோன்றிய பிரம்மாவுக்கும் உள்ள ஒற்றுமை, வேற்றுமைகள் இங்கு ஒப்பு நோக்கி இன்புறத் தக்கவை. நான்முகன், கிடந்த கோலத்திலிருக்கும் நாராயணனின் நாபிக்கமலத்தில் தோன்றி, அங்கேயே வசிப்பவர். பொய்கைப் பிரானும் கிடந்த கோலத்திலிருக்கும் யதோக்தகாரிப் பெருமாளின் பொய்கைக் கமலத்திலே உதித்தவர். ஆக இருவருமே விஷ்ணு சம்பந்தம் கொண்ட பத்மவாசர்கள்! கமலப் பூவே இருவருக்கும் கர்ப்ப இடம்! பிரம்மா பிறந்தவுடன், 'நாம் யார்? எங்கிருக்கிறோம்?' என்று புரியாது, நான்கு தலைகளையும் நான்கு திசைகளிலும் சுழற்றிச் சுழற்றி, 'திரு திரு' என விழித்துக் கலங்கினார்! 'திரு, திரு' என விழித்ததாலோ என்னவோ திருமகள் திருவருள் பெற்றார். 'தப , தப, தப' என்கிற அசரீரியைக் கேட்டுத் தவம் செய்து, திருவரங்கனைக் கண்டு தொழுது, அவன் ஆணைப்படியே படைப்புத் தொழிலையும் துவங்கினார். பொய்கையார், பிரம்மனைப்போல் கடுந்தவத்தை மேற்கொள்ள வேண்டிய அவசியம் இல்லாமலே, அனாயசமாக எம்பெருமானின்

திருவருளைப் பெற்றுத் தாமும் கருவரங்கத்திலேயே, தாம் தோன்றிய தாமரையிலேயே, திருமாலைக் கண்டு கொண்டார். இவ்விதத்தில் பிரம்மாவை விடவும் ஒருபடி மேலானவர் ஆகிறார் நம் சரோயோகி!

ஆழ்வார் அருளிச்செய்த,

> ''கருவரங்கத்துட் கிடந்தே கைதொழுதேன் கண்டேன்
> திருவரங்க மேயான் திசை''

என்கிற சொற்கள் அவருக்கு மட்டுமின்றி, பிரம்மனுக்கும் அல்லவா நன்கு பொருந்தி விடுகின்றன!

ஸ்ரீமந் நாராயணனைக் கண்டு கைதொழுத பிரம்மா, தம் அனுபவத்திற்குப் போக்குவீடாக நான்கு வேதங்களையும் இன்னும் சொல்லிக்கொண்டேயிருக்கிறார்! நான்முகனால் நான்கு முகங்களாலும், நான்கு யுகங்களிலும், நான்கு வேதங்களாலும் சொல்ல முடியாததை, சரோயோகி நூறே தமிழ்ப்பாசுரங்களில் அன்றே அருளிச் செய்து விட்டார்! இவ்விதத்திலும் சம்ஸ்கிருத பிரம்மாவைவிட, நம் தமிழ் ஆழ்வார் சிறந்து விளங்கி, ''கவிஞர் போரேறு'' என்கிற திருநாமத்தையும் பெற்றுவிடுகிறார்!

பிரம்மாவுக்கும், பொய்கையாழ்வாருக்கும் உள்ள இன்னொரு முக்கியமான ஒற்றுமை காஞ்சிபுரத்தை ஒட்டி அமைந்தது. பொய்கைப் புனிதர் அவதரித்த தலம் திருக்கச்சி. முக்தி தரும் மோட்சபுரிகள் ஏழில் முக்கியமானது கச்சி. எனவே இங்கே பிரம்மா முன்னொரு சமயம் அச்வமேத யாகம் செய்தார். சத்யவிரத க்ஷேத்திரம் என்று புகழ் பெற்றது காஞ்சி. யார் எந்த விரதம் செய்தாலும் அதற்கு பலமடங்கு பலன் தருமிடம் காஞ்சிபுரம். பிரமன் வந்ததாலும் பேரருளாளனாகிய வரதராஜப் பெருமாளை ஆராதித்ததாலும் இதற்குக் காஞ்சியென்று பெயராயிற்று.

''நாராயணனே பரம்பொருள்'' என்பது பிரம்மன் கூறும் வேதங்களில் இலை மறைவு, காய் மறைவாகவே, இரகசியமாக மறைந்து கிடப்பதால், வேதத்திற்குத் தமிழில் ''மறை'' என்று பெயர் ஏற்பட்டது போலும்! இந்த மறைப்பொருளை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் மிகத்தெளிவாக ''வையந்தகளி'' என்று தொடங்கும் நூறு பாசுரங்களில் விளக்கி, புவியோர் உய்யத் தோன்றியவரே பொய்கைப் புனிதர், என்கிறார் ஸ்ரீ சுவாமி தேசிகன்.

''அருள் மிகுத்ததொரு வடிவாய்க் கச்சி தன்னில்
ஐப்பசி மாதத் திருவோணத்து நாளில்
பொருள் மிகுந்த மறை விளங்கப் புவியோர் உய்யப்
பொய்கைதனில் வந்துதித்த புனிதா!''

*பிரமனோ கச்சி நகருக்கு வந்து அச்வமேத யாகம் செய்து புனிதமடைந்தான். ஆழ்வாரோ கச்சிநகர்ப் பொய்கையில் அவதரித்து உலகத்தினரைப் புனிதமாக்கினார். எனவே ''பொய்கைப் புனிதர்'' என்கிறார் வேதாந்த தேசிகர்.*

*''ஜனனீ ஜன்மபூமிஸ்ச ஸ்வர்க்காதபி கரீயஸீ'' என்று ஒரு சம்ஸ்கிருதப் பழமொழி. ''பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் நற்ற வானினும் நனி சிறந்தனவே'' என்று இது தமிழில் பாரதியாரால் கூறப்பட்டுள்ளது. ஆழ்வார்கள் தாம் பிறந்த தமிழ் மண்ணை, சுவர்க்கத்திற்கும் மேலான பரமபதத்திற்குச் சமமாகவே பாடியுள்ளார்கள். முதலாழ்வார்கள் மாபெரும் வேங்கடேச பக்தர்களாதலால், தாம் பிறந்த ஜன்மபூமியை, பூலோக வைகுந்தமாகிய திருவேங்கடத்துடன் சேர்த்தே மங்களாசாஸனம் செய்துள்ளனர். பொய்கையாழ்வார் ஜன்மபூமியாகிய திருவெஃகாவை அவரே இவ்விதம் அனுபவித்துப் பாடியுள்ளார்:*

''வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும் அஃகாத
பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும் - நான்கிடத்தும்
நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தானே
என்றால் கெடுமாம் இடர்''.(77)

*விண்ணகர் = பரமபதம், வைகுந்தம்; அஃகாத = மாறாத; கிடங்கு = அகழி; இடர் = துன்பம்.*

***பாசுரத்தின் பொருள்:***

*திருமால் திருவேங்கடத்தில் கொண்டுள்ளது நின்ற திருக்கோலம்; பரமபதத்தில் அமர்ந்த திருக்கோலம்; வெஃகாவில் கிடந்த திருக்கோலம்; மாறாது மலர்கள் அடர்ந்த அகழிகளையுடைய நீண்ட பொன்னகரமான திருக்கோவலூரில் உலகளந்த பெருமாளாக நடந்த திருக்கோலம். இங்ஙனம் திவ்விய தேசங்களிலே திருமால் எழுந்தருளியிருக்கும் நிலைகளை நாம் சொன்னாலே, நமது துன்பங்களெல்லாம் அழிந்துவிடும்.*

*சரோமுனிவர் இப்பாசுரத்தில் பேசியிருக்கும் திருத்தலங்கள் நான்குமே, அவருடைய வாழ்வில் சிறப்பிடம் பெற்றவை.*

ஆழ்வார் விண்ணகராகிய பரமபதத்தைச் சேர்ந்தவர். அங்கிருந்து நேராக காஞ்சியில் உள்ள திருவெஃகாவில், தாமரை மலரில் அவதரித்தவர். அவர் மிகவும் விரும்பி வழிபட்டுப் பாடிய திருப்பதி வேங்கடம். பூதயோகியையும், பேயாரையும் முதன் முதலில் சந்தித்து எம்பெருமானால் நெருக்குண்ட திருத்தலம் திருக்கோவலூர் - எனவே இதை மட்டும் ''அஃகாத பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகர்'' என்று நீட்டிக் கூறுகிறார். திருமாலால் நெருக்கப்பட்டு, திருக்கோவலூர் இடைகழியில் 'இடர்' உற்றவர், அத்திருப்பதியை நினைத்தாலே இடர் கெடும் என்கிறார்!

முதல்வரைப் புகழ்வது என்பது தமிழ்நாட்டில் இன்று சர்வசாதாரணமாகி விட்டது! எனவே நாம் அடுத்த இரண்டாமவராகிய பூதத்திருவடியைப் பற்றுவோம். ''கலியும் கெடும் கண்டு கொண்மின் கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல்'' என்று நம்மாழ்வார் அருளிச் செய்துள்ளார். கடல் வண்ணனின் பூதமாகிய பூதத்தாழ்வார் மண்மேல் கடன் மல்லையில் அல்லாமல் வேறெங்கு அவதரிப்பது பொருந்தும்?

இன்று மகாபலிபுரம், மாமல்லபுரம் என்று அழைக்கப்படும் பதியே 'திருக்கடன்மல்லை' எனப்பட்டது. பல்லவ மன்னர்கள் காலத்தில் இது தொண்டை மண்டலத்தின் சிறந்த துறைமுகமாக விளங்கியது. இந்த திவ்விய தேசத்தில் திருமால் ஆதிசேஷன்மீது பள்ளி கொள்ளாமல் தலத்திலேயே சயனித்திருப்பதால், இது ''கடல் மல்லைத் தலசயனம்'' என்றே புகழ்பெற்றது. ''மன்னுபுகழ் பூதயோகி மண்மேல் மலரவிருக்கும் இவ்விடத்தில் நாமும் ஏன் மண்மேல் கிடக்கக்கூடாது?'' என்றெண்ணியே எம்பெருமான் பாம்பணையை விட்டு நீங்கினான் போலும்!

பூதத்தாழ்வாரும் தாம் அவதரித்த திருக்கடன்மல்லையை திருவேங்கடத்துடனும், மற்ற திருப்பதிகளுடனும் இணைத்தே மங்களாசாஸனம் செய்துள்ளார்:

**தமர் உள்ளம் தஞ்சை தலையரங்கம் தண்கால்**
**தமர் உள்ளும் தண்பொருப்பு வேலை - தமர் உள்ளும்**
**மாவல்லை கோவல் மதிள்குடந்தை என்பரே**
**ஏவல்ல எந்தைக்கு இடம்.**

தமர் = பக்தர்கள்; உள்ளும் = நினைக்கின்ற; ஏ = அம்பு; ஏவல்ல எந்தை = அம்பு வீசுவதில் சிறந்த ஸ்ரீராமபிரான்.

பாசுரத்தின் பொருள்:

அம்புகள் எய்வதில் வல்லவனான ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி வசிக்கும் இடங்கள்: பக்தர்களது உள்ளம், தஞ்சை மாமணிக்கோயில், தண்கால் என்கிற திருப்பதி, பக்தர்கள் எண்ணித் துதிக்கும் குளிர்ந்த வேங்கடமலை, திருக்கோவலூர், திருமதிள்கள் சூழ்ந்த கும்பகோணம்.

இங்கே பூதத்திருவடி, ''திருமால் அர்ச்சை வடிவில் பல திருப்பதிகளில் எழுந்தருளியிருப்பதோடு சிறப்பாக பக்தர்களுடைய உள்ளக்கோயிலில் அந்தர்யாமியாக ஒளிர்விடுகிறான்'' என்கிறார். உள்ளும், புறமும் அனைத்திலும் வியாபித்து உள்ளவன் நாராயணன்; ''அந்தர்பஹிஸ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:'' என்கிற நாராயண சூக்தத்தின் பொருளை இங்கே ஆழ்வார் அருளிச்செய்துள்ளார்.

தொண்டை மண்டலத்தில் ஆதிகாலத்திலிருந்தே சான்றோர் வாழும் திருத்தலமாகத் திகழ்வது திருமயிலை திருவல்லிக்கேணி. இங்கே ஆதிகேசவப் பெருமாளும், ஸ்ரீநிவாஸரும் அடுத்தடுத்து கோயில் கொண்டுள்ளனர். மயிலை ஆதிகேசவப் பெருமாள் கோயிலின் திருக்கிணற்றிலேயே அல்லிமலரில் மூன்றாவது ஆழ்வாராகிய பேயார் அவதரித்தருளினார். ''கிணறு வெட்ட பூதம் கிளம்பியது போல'' என்றொரு பழமொழி. ஆயினும் பூதத்தார் முந்தைய நாளிலேயே அவதரித்து விட்டதால், மயிலை திருக்கிணற்றில் பேயார் தோன்றியருளினார்! பூதம், பேய் போன்ற மக்களை பயமுறுத்தும் பெயர்களும், ஆழ்வார்கள் சம்பந்தப்பட்டவுடன், வணங்குதற்குரிய திருநாமங்கள் ஆகிவிடுகின்றன!

பேயாழ்வார் அவதரித்த மயிலை 'திருவல்லிக்கேணி' என்கிற திவ்விய தேசத்தைச் சேர்ந்த பகுதியே. இங்கு எழுந்தருளியிருக்கும் வேங்கட கிருஷ்ணனை ''மாமாட மயிலை திருவல்லிக்கேணி கண்டேனே'' என்று திருமங்கை மன்னன் அருளிச் செய்துள்ளார்.

பேயாழ்வார் தாம் அவதரித்த திருவல்லிக்கேணியை இங்ஙனம் மங்களாசாஸனம் செய்துள்ளார்:

ஒருவல்லித் தாமரையாள் ஒன்றிய சீர்மார்பன்
திருவல்லிக் கேணியான் சென்று''.

வல்லி = பூவின் இதழ்.

''திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருக்கும் பார்த்தஸாரதி என்கிற வேங்கடகிருஷ்ணனே எனக்கு சுவாமி. அழகிய இதழ்களையுடைய தாமரைப்பூவை இருப்பிடமாகக் கொண்ட மகாலட்சுமி வந்து பொருந்திய திருமார்பையுடைய ஸ்ரீநிவாஸன் இவன்'' என்கிறார் பேயார்.

திருமலையில் சேவை சாதிக்கும் ஸ்ரீவேங்கடாசலபதியே ஒரு மகரிஷியின் வேண்டுகோளுக்கிணங்கி திருவல்லிக்கேணியில் வேங்கடகிருஷ்ணனாக நிற்கிறான் என்கிறது தலபுராணம். இரு மூர்த்தியரும் ''மாமேகம் சரணம் வரஜ (என்னையே சரணடை)'' என்று கீதை சரமசுலோகத்தில் அருளியபடியே, பக்தர்களுக்குத் தம் திருவடியை ' கைகாட்டுகின்றனர். ஸ்ரீநிவாஸனே திருவல்லிக்கேணியான்.

பேயாழ்வாரும் இரண்டு விதங்களில் தாமே எம்பெருமானைப்போல் 'திருவல்லிக்கேணியான்' ஆகிறார்! மதறாஸில் பிறந்தவன் 'மதறாஸி' எனப்படுவதுபோல், திருவல்லிக்கேணியில் அவதரித்தவர் 'திருவல்லிக்கேணியான்' ஆகிறார். 'கேணி' என்பது 'கிணறு' என்றும் பொருள்படும். அல்லிமலர் பூத்த கேணி அல்லிக்கேணி. திருமயிலை ஆதிகேசவப் பெருமாள் அல்லிக்கேணியில் அவதரித்ததால் ஆழ்வார் சிறப்பாகத் ''திருவல்லிக்கேணியான்'' ஆகிறார்!

வடவேங்கடம் பண்டையத் தொண்டை மண்டலத்தின் வடக்கு எல்லை என்பதை ஒரு பழம்பாடல் தெரிவிக்கிறது:

> ''மேற்குப் பவளமலை வேங்கட நேர்வடக்காம்
> ஆர்க்கும் உவரி அணிகிழக்குப் - பார்க்குள் உயர்
> தெற்குப் பினாகி திகழ் இருபதின் காதம்
> நற்றொண்டை நாடெனவே நாட்டு''.

எனவே தொண்டை நாட்டில் அவதரித்த முதலாழ்வார்கள் அருகிலிருக்கும் திருவேங்கடமுடையானிடம் பேரன்பு பூண்டிருந்தது வியப்பில்லை. இவர்களுடைய அந்தாதிப் பாடல்களில் திருவேங்கடவனைக் குறித்தவை 39; திருவரங்கனைப் பற்றியவை 7. மூவரின் வேங்கடேச பக்திக்கு இது ஒரு அளவுகோல். தொண்டை மண்டலம் தோற்றுவித்த திருவேங்கடத் தொண்டர்கள்!

**ஸ்ரீ பூதத்தாழ்வார் திருவடிகளே சரணம்.**

# 8. முதலாழ்வார்கள் தோற்றமும், ஏற்றமும்

*முதலாழ்வார்கள் அவதரித்த மாதம், நட்சத்திரம் ஆகியவற்றை உபதேசரத்தின மாலை, ஆறாம் பாட்டில் மணவாள மாமுனிகள் அருளிச் செய்துள்ளார்:*

ஐப்பசியில் ஓணம் அவிட்டம் சதயம் இவை
ஒப்பிலவாம் நாள்கள் உலகத்தீர் - எப்புவியும்
பேசுபுகழ்ப் பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார்
தேசுடனே தோன்று சிறப்பால்.

தேசு = ஒளி; ஓணம் - திருவோணம்

*பொருள்:*

*உலகத்திலுள்ளவர்களே! ஐப்பசி மாதத்தில் வரும் திருவோணம், அவிட்டம், சதயம் என்னும் மூன்று திருநட்சத்திர நாட்களும் ஒப்பில்லாதவையாகும். ஏனெனில், உலகெங்கும் பேசப்படுகின்ற புகழையுடைய பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார் ஆகிய மூவரும் மிக்க ஒளியுடனே தோன்றிய சிறப்பால்.*

**தேசுடனே தோன்று சிறப்பால்:**

இங்கு 'பிறப்பால்' என்றும் பாடபேதமுண்டு. 'தேசுடனே' என்றதால் இவர்கள் மனித இயற்கைக்கு மாறாக, வைகுந்தத்திலிருந்து நேரடியாக திவ்விய தேஜசுடன் தோன்றியமை பெறப்பட்டது. ''பிறப்பால் ஒப்பிலவாம் நாட்கள்''

என்று கொண்டால் ஸ்ரீராம, பரத, லட்சுமணர்போல் அடுத்த நாட்களில் ஜன்ம நட்சத்திரங்களில் அவதரித்தார்கள் என்ற நயம் தோன்றுகிறது.

**திருவோணத்தின் சிறப்பு:**

சம்ஸ்கிருதத்தில் "ச்ரவணம்" எனப்படுவதே தமிழில் ஓணம், திருவோணம் என்று வழங்கப்படுகிறது. "ச்ரவணம்" என்றால் கேள்வி, கேட்பது என்று பொருள். ச்ரவணத்திற்குத் தக்கவற்றை அளித்தல் ச்ரவண சம்பந்தமுள்ளவர்க்கே கூடுவது. அதாவது, தம்மிடம் யார் எதை வந்து கேட்கிறார்களோ, அதைக் கேட்டபடியே கொடுக்கும் குணமும், திறமையும், திருவோண நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கே உண்டு. இதை நாம் புரட்டாசி, திருவோண நட்சத்திரத்தில் அவதரித்த திருவேங்கடவனிடம் கண்கூடாகக் காண்கிறோம்! கேட்டதும் கொடுப்பதற்காகவே வெங்கடேசப் பெருமாள் வலது கையை வரத ஹஸ்தமாக காட்டிக் கொண்டிருக்கிறார்.

"ச்ரவணம்" என்பதிலிருந்தே வேதத்திற்கு "ச்ருதி" என்னும் பெயர் வந்தது. கேட்பவர்களுக்கு உரிய பயனையளிப்பது, கேட்கத் தகுந்தது ச்ருதி. ச்ரவண நட்சத்திரத்தில் அவதரித்த பொய்கையார் அருளிச் செய்த நூறு பாசுரங்களையும் கேட்பவர்களுக்கு மோட்சம் கைகூடும். இவருடைய ஸூக்திக்கு (சொல்லிற்கு) ச்ருதி நிலையுண்டு. திருவேங்கடமுடையான் கிருஷ்ணாவதாரத்தில் அருளிச் செய்த கீதைக்கும் ச்ருதி நிலையுண்டு. வேதசாரமானது கீதையும், ஆழ்வார்கள் பாசுரங்களும். திருவேங்கடவனின் மணியே வேதாந்த தேசிகர் என்னும் ஆசாரியராக அவதரித்தது என்பர். "சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான்" என்று பிரசித்தி பெற்ற ஆசாரியரும் புரட்டாசி திருவோணத்தில் அவதரித்தவர். எம்பெருமான், ஆழ்வார், ஆசாரியர் மூவராலும் சிறப்பு பெற்றது திருவோணம்! ஓணம் ஒப்பிலா நாள்!

பன்னிரு ஆழ்வார்களில் முதலாழ்வார்களே பரமபதத்தைச் சேர்ந்தவர்கள் என்று சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றனர். "ஆழ்வார்களிற் காட்டில் பகவத் விஷயத்தினால் உண்டான அவகாஹநத்தாலே (ஆழ்ந்த அனுபவத்தாலே) முதலாழ்வார்கள் மூவரையும் நித்யசூரிகளோ பாதியாக (ஆசார்யர்கள்) நினைத்திருப்பார்கள்" என்று வியாக்கியானச் சக்கரவர்த்தி ஸ்ரீமத் பெரியவாச்சான்பிள்ளை பணித்தருளுவர். பாரில் பிறந்த பின்னரும்

''பற்றுக பற்றற்றான் பற்றினை'' எனப் பொய்யில் புலவன் பணித்தபடி, பரமபதத்தையே பற்றியிருந்ததாலும் இவர்கள் ஆழ்வார்களில் முதன்மை பெற்றவர்களாவர். கேவலம் பிறப்பால் மட்டுமின்றி, ஆன்மீகச் சிறப்பாலும் முந்தியவர்கள்!

இவ்விதம் தேசுடனே தோன்று சிறப்புடைய ஆழ்வார் மும்மூர்த்தியரிடையே அநேக ஒற்றுமைகள் காணப்படுவதில் ஆச்சரியம் ஏதுமில்லை! அவற்றை இனிக் காண்போம்.

**மூவரின் காலநிலை:**

ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தில் ஸ்ரீ மணவாள மாமுனிகள் வரையறுத்தபடி முதலாழ்வார்கள் துவாபர யுகத்தில், அதாவது கி.மு. 4302-ஆம் ஆண்டுக்கு முன் தோன்றியவர்களாகக் கருதப்படுகிறார்கள். எம். ராகவ ஐயங்கார் என்னும் அறிஞரின் ஆராய்ச்சிப்படி இவர்கள் கி.பி. ஐந்தாவது அல்லது ஆறாவது நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள்.

**அடுத்தடுத்து அவதரித்த அச்சுதன்தமர்:**

பொய்கையார் சித்தாத்திரி ஆண்டு, ஐப்பசி மாதம் வளர்பிறை அஷ்டமி திதி, செவ்வாய்க்கிழமை திருவோண நட்சத்திரத்தில் தோன்றினார்.

திருவோணம் விஷ்ணு நட்சத்திரம். ஐப்பசி மாதம் சித்திரை நட்சத்திர நாளிலிருந்து, திருவோண நாள்வரை திருமால் ஆலயங்களில் பிரம்மோத்சவம் நடைபெறும். திருவேங்கடவன் புரட்டாசித் திருவோண நாளன்று அவதரித்தார். எனவே தலைசிறந்த வேங்கடேச பக்தரான பொய்கைப்பிரான் திருவோணத்தில் தோன்றியது பொருத்தமே!

இரண்டாவதாக அவதரித்த பூதத்தாழ்வார் அடுத்த நாள், சித்தாத்திரி ஆண்டு, ஐப்பசி சுக்கில பட்சம், நவமி திதி, புதன்கிழமை, அவிட்ட நட்சத்திரத்தில் தோன்றினார்.

மூன்றாவதாகத் தோன்றிய பேயாழ்வார் அதற்கும் மறுநாள், சித்தாத்திரி ஆண்டு, ஐப்பசி மாதம், சுக்கில பட்சம், தசமித்திதி, வியாழக்கிழமை, சதய நட்சத்திரத்தில் அவதரித்தருளினார்.

இங்ஙனம் முதலாழ்வார்கள் தொடர்ந்து மூன்று நாட்களில் அடுத்தடுத்த ஜன்ம நட்சத்திரங்களில், இராமர், பரதர், இலக்குமணர் போல் ஒருவர் பின் ஒருவராக பூவுலகில்

வியப்பூட்டும் வகையில் அவதரித்ததை 'முப்பெரும் விழா' எனலாம்! ஆச்சரியமூட்டும் அச்சுதன்தமர்!

**பரமபதத்தைச் சேர்ந்த பரந்தாமன்தமர்:**

மூவரின் தோற்றமும் மிகவும் அதிசயமானதே! இவர்கள் எந்தப் பெண்ணின் கருவிலும் தங்கி, சாதாரண மனிதர்களைப்போல் பிறக்காமல்,நேராக வைகுந்தத்திலிருந்து மண்ணில் தோன்றியவர்கள். எனவே மூவரும் பரமபதத்தைச் சேர்ந்தவர்களாகவே போற்றப்படுகின்றனர். இத்தகைய பரமபாகவதர்கள் உலக வாழ்வைச் சற்றும் விரும்பாமல், பிறவியிலிருந்தே பரமபத நாதனையே பற்றி வாழ்ந்தது வியப்பில்லை.

வைணவத்தில் 'நித்ய சூரிகள்' என்று கொண்டாடப்படும் பரந்தாமன்தமரையே பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் 'நித்திய சித்தர்கள்' என்கிறார். உலக நன்மைக்காகவே பூவுலகில் தோன்றும் இவர்கள் சாதாரண ஜீவர்களைப்போல் மாயையின் வசப்படாமல், பிறவியிலிருந்தே ஆன்மீக விழிப்புணர்ச்சியும், பிரேம பக்தியும் கைவரப் பெற்றவர்கள். சாதாரணமாக இவர்கள் எம்பெருமானின் அவதாரங்களுக்கு உதவியாளர்களாக அவர்களுடனேயே தோன்றுவர்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் நித்யசித்தர்களின் உயர்ந்த நிலையை, ஒரு உதாரணத்தின் மூலமாக விளக்குகிறார். வேதத்தில் கூறப்படும் ஹோமப்பறவை பூமிக்கே வராமல் வானத்திலேயே வாழுமாம். இந்தப் பறவை ஆகாயத்தில் வெகு உயரத்தில் முட்டையிடும். விண்வெளிப் பறவையின் முட்டை கீழே விழுந்து கொண்டிருக்கும்போது, ஆகாயத்திலேயே பொரிந்து, குஞ்சு வெளிப்படும். ஹோமக் குஞ்சு பூமியில் விழுந்தால் அடிபட்டு இறக்க நேரிடும் என்பதை உணர்ந்து, உடனேயே வானிலிருக்கும் தன் தாயை நோக்கி மேலே பறக்கும்.

அது போலவே நித்திய சித்தர்களும் பூவுலக வாழ்க்கை அநித்தியமானது என்பதைப் பிறவியிலிருந்தே புரிந்து கொண்டு, இறைவனைக் காண ஆன்மீக சாதனைகளை மேற்கொள்வர். ஹோமக் குஞ்சுகளைப் போல் இவர்களுடைய மனோநிலை, இரத்த ஓட்டம், குண்டலினி சக்தி ஆகிய அனைத்தும் மேல் நோக்கியவையாகவே அமைகின்றன. பரமபதத்தைச் சேர்ந்த நம் பரமகவிகள் மூவரின் வாழ்வும், அருளிச் செயல்களும் இவ்விதமே

அமைந்தன என்று கூறத்தேவையில்லை. நித்திய சித்தர்களின் வாழ்வும், போதனைகளும் சாதாரண மக்களுக்கு பகவானை அடையும் வழியைக் காட்டுகின்றன.

**மலர்களில் உதித்த மாதவன்தமர்:**

திருமாலுக்கும் மலர்களுக்கும் நிறையத் தொடர்பு உண்டு. திருமாலும், திருமகளும் தாமரை மலர்களைக் கையிலேந்தியிருக்கின்றனர். நாராயணனின் நாபிக்கமலத்திலே நான்முகன் நலமுடன் வீற்றிருக்கிறான். மலர்மகளாகிய மகாலட்சுமியோ தாமரையிலேயே தோன்றிய அலர்மேல்மங்கை. தாமரை பக்தியின் சின்னமாகும். பக்தர்களின் இதயக்கமலத்திலே பகவான் பள்ளி கொண்டுள்ளான். ''இயற்கை அன்னை இறைவனின் திருவடிகளில் சமர்ப்பிப்பதற்கென்றே மலர்களைத் தோற்றுவிக்கிறாள்'' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறுவார்.

எனவே பரமபதத்திலிருந்து பார்மீது தோன்றிய பரந்தாமன்தமர் பூக்களின்மீது அவதரிக்காமல் வேறெங்கு தோன்றியிருக்க முடியும்? பொய்கையாழ்வார் பொற்றாமரையிலும், பூதத்தார் மல்லிகைப் புதரின் நடுவே நீலோத்பல (குருக்கத்தி) மலரிலும், பேயாழ்வார் செவ்வல்லி (நெய்தல்) மலரிலும் திருமேனி மலர்ந்தருளினார்கள்.

விஷ்ணு நட்சத்திரத்தில் உதித்த முதலாழ்வாரான பொய்கையார் திருமால் திருக்கரத்தில் ஏந்தியிருக்கும் பெருமை பெற்ற தாமரைப்பூவில் தோன்றியது சரியே! ''சேற்றிலே முளைத்த செந்தாமரை'' என்று பெருமையாகப் பேசுவர். செந்தாமரையிலேயே செகத்துதித்த செல்வரின் சிறப்பை என்னென்பது! உலகச் சேற்றிலே உதித்த ஆன்மீகப் பொற்றாமரையாகவே பொய்கையார் பொலிகிறார். மதுரை பொற்றாமரைக் குளம் சங்கத்தமிழ் தோன்றிய இடம். காஞ்சி பொற்றாமரைக் குளம் ''அருந்தமிழ் நூற்றந்தாதி படி விளங்கச் செய்தான்'' பிறப்பிடம்.

நடப்பது விஞ்ஞான யுகம்; பகுத்தறிவிற்குப் புறம்பான செய்திகளை நம்ப மறுக்கும் காலமிது. எனவே முதலாழ்வார்கள் பரமபதத்திலிருந்து நேராக மலர்களில் குழந்தைகளாகத் தோன்றினர் என்பது இன்றையத் தமிழில் சொல்வதானால் ''காதில் பூ சுற்றுவது'' போன்ற சமாசாரமாகவே தோன்றுகிறது. அதே சமயத்தில் மகான்கள், அவதார புருஷர்கள் எங்கு தோன்றினாலும்

அவர்களைக் குறித்து இத்தகைய அற்புதக் கதைகளும், கருத்துக்களும் தோன்றியிருப்பதையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். இதைப்பற்றி சுவாமி விவேகானந்தர் கூறுகிறார்: "உண்மை என்னவெனில், ஆன்மீகத்தில் தனிச்சிறப்புடைய ஒரு மனிதன் தோன்றுகிறான். அவனைக் குறித்து எல்லாவிதமான அற்புதக் கதைகளும் புனையப்படுகின்றன. ஆனால் இவ்விதம் எழும் புராணங்களும், கதைகளும் அந்த மனிதனின் சிறப்பியல்புகளை ஒட்டியே அமைகின்றன".

விவேகானந்தர் கூறியபடி பார்த்தால், முதலாழ்வார்கள் பூக்களில் அவதரித்தனர் என்பது பகுத்தறிவாளர்கள் ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இல்லை; ஆயினும் இது அவர்களுடைய தெய்வீகத் தன்மையை நன்கு சித்தரிக்கும் வகையில் எழுந்துள்ள ஓர் நம்பிக்கையாகக் கொள்ளத் தடையில்லை. மகாலட்சுமியைப்போல் மலரில் தோன்றியதால், மூவரும் பிறவியிலிருந்தே திருமாலைச் சார்ந்தவர்கள்; சிற்றின்ப வேட்கையுடைய சாதாரண மனிதர்களைப்போல் அல்லாது, இறைவனையே நாடும் பேரின்ப நாட்டம் உடையவர்கள்; திருவேங்கடவன் திருவடிகளில் சமர்ப்பிக்கப்படும் புஷ்பங்களைப் போன்றே தெய்வீக மணம் பரப்பியவர்கள்; சாதாரண மக்கள் ஈக்களைப்போல் அவ்வப்பொழுது அருவருக்கத்தக்க விஷயங்களை அணுகுவார்கள். ஆனால் ஆழ்வார்களைப் போன்ற மகான்கள் பூக்களில் மட்டுமே அமர்ந்து தேனையே பருகும் தேனீக்களைப்போல் எப்பொழுதும் எம்பெருமானையே அனுபவிப்பர். ஆக மொத்தம், முதலாழ்வார்களின் அருமை, பெருமைகளை வெகு அழகாகச் சித்தரிக்கும் விதத்தில் அமைந்திருப்பதால், மாதவன்மதர் மலர்களில் உதித்தனர் என்பது மிகவும் பொருத்தமுடையதே!

மலர்களில் உதித்த மாதவன்தமரை நினைவூட்டும் வகையில் ஒரு திருக்குறள் அமைந்திருப்பது இங்கு இன்புறத்தக்கது:

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்."

"மலரின் கண்ணே சென்றவனது மாட்சிமைப்பட்ட அடிகளைச் சேர்ந்தார், எல்லா உலகிற்கும் மேலாய வீட்டு உலகின்கண் அழிவின்றி வாழ்வார்" என்பது இங்கு பரிமேலழகரின் உரை. அன்பால் நினைவாரது உள்ளக்

கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேரலின் 'ஏகினான்' என்று இறந்த காலத்தால் கூறினார்.

பரமபதத்தைச் சேர்ந்தவர்களும், திருவேங்கடமுடையானின் தலைசிறந்த பக்தர்களுமான முதலாழ்வார்களுக்குப் பொருந்தும் வண்ணம் இந்தக் குறளுக்கு சிறப்புப்பொருள் கூற இயலும்:

மலர்மிசை ஏகினான் = 'புஷ்ப மண்டபம்' எனப்படும் திருமலையின் மீதேறிச் சென்று 'பூவங்கி சேவை' சாதிக்கும் திருவேங்கடவனுடைய,

மாணடி = மாட்சிமை மிக்க பூவார் கழல்களை,
சேர்ந்தார் = சரணடைந்தவர்கள்,
நிலமிசை நீடு வாழ்வார் = வைகுந்தத்தில் அழிவின்றி நித்திய சூரிகளாகிய முதலாழ்வார்களைப் போல் வாழ்வர்.

'மலர்மிசை ஏகினான்' என்பது மலர்மகள் மணாளனாகிய ஸ்ரீநிவாஸனுக்கு மட்டுமின்றி, சிறந்த வேங்கடேச பக்தர்களாகிய முதல் மூவருக்கும் முற்றும் பொருந்துகிறது! இவர்கள் நேரே பரமபதத்திலிருந்து மலர்கள்மீது ஏகியவர்கள் அல்லவா?

பொற்றாமரை மலர்மிசை ஏகினான் = பொய்கையார்
குருக்கத்தி மலர்மிசை ஏகினான் = பூதத்தார்.
செவ்வல்லி மலர்மிசை ஏகினான் = பேயார்.

மலர்மிசை ஏகிய மாதவனின் பரமபாகவதர்களும், தாமே இங்ஙனம் மலர்மிசை ஏகியவர்களுமாகிய முதலாழ்வார்களின் மாணடி சேர்ந்தார் வைகுந்தம் ஏகுவர். தொண்டர்தம் பெருமை அத்தகையது!

**தோற்றத்தில் ஏற்றமுற்ற தேவராசன்தமர்:**

'கருவிலே திருவுடையர் யாம்' எனப் பெருமைப்படுவர் ஸ்ரீ வைணவர். மானிடராகப் பிறப்பது அரிது எனின், மாதவன் தமராகப் பிறப்பது மிகவும் அரிது! கருவிலேயே திருமாலைக் கண்டு கைதொழுதவர்கள் முதலாழ்வார்கள் என்பது அவர்களுடைய அருளிச் செயலிலிருந்து தெரிகிறது. தேவராசப் பெருமாள் எழுந்தருளியிருக்கும் கச்சிநகர்ப் பொய்கையிலே முதலாழ்வார் தோன்றியதால், இங்கே மூவர் 'தேவராசன்தமர்' ஆயினர்.

பொய்கையார் இங்ஙனம் பேசுகிறார்:

''ஒன்று மறந்தறியேன் ஓதநீர் வண்ணனை நான்
இன்று மறப்பனோ? ஏழைகாள்! - அன்று
கருவரங்கத்துட் கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருவரங்க மேயான் திசை.''

ஓதநீர் வண்ணன் = கடல்நீர் போன்ற நீலவண்ணன், திருமால்; ஏழைகாள் = எம்பெருமானை இங்ஙனம் அறிய வாய்ப்பு இல்லாதவர்கள்; கருவரங்கம் = கர்ப்பம்; திசை = பக்கம், விவரங்கள்.

**பாசுரத்தின் பொருள்:**

அன்று கர்ப்பத்தில் கிடந்தபோதே ஸ்ரீ ரங்கநாதனின் இயல்பு, குணம் முதலியவற்றை அவனருளால் அறிந்து, அனையே கை தொழுதேன். கடல்நீர் போன்ற வண்ணமுடைய திருமாலை நான் ஒன்றும் மறக்கமாட்டேன். இவ்வாறு பகவானை நேரில் அறியமாட்டாத ஆன்மீக ஏழைகளே! இன்று நான் எம்பெருமானை மறப்பேனோ?

பூதத்தாழ்வாரும் இவ்விதமே ''கிடந்து கை தொழுதேன் கண்டேன்'' என்று கூறி பூரிப்பு அடைகிறார்:

''இன்றா அறிகின்றேன்? அல்லேன்! இருநிலத்தைச்
சென்று அங்கு அளந்த திருவடியை - அன்று
கருக்கோட்டியுள் கிடந்து கை தொழுதேன் கண்டேன்
திருக்கோட்டி எந்தை திறம்'' (87)

இருநிலம் = பரந்த நிலம், உலகம்; கரு = கர்ப்பம்; கோட்டி = கோஷ்டி, கூடியிருத்தல், கூடும் இடம்; திருக்கோட்டி எந்தை = திருக்கோட்டியூர் என்னும் திவ்விய தேசத்து எம்பெருமான்; திறம் = தன்மை.

**பாசுரத்தின் பொருள்:**

பரந்த உலகைத் திரிவிக்ரமனாக ஆங்காங்கு தானே பரவிச் சென்று அளந்து கொண்ட திருவடியை, அடியேன் இன்றுதான் அறிகின்றேன் என்பதில்லை. முன்பு கர்ப்பத்தில் கிடந்தபோதே திருக்கோட்டியூர் பெருமாளுடைய தன்மையைக் கண்டு அனுபவித்தேன்; அதற்குப் போக்குவீடாகக் கைதொழுதேன்.

''என்னுடைய பேற்றுக்கு ஏற்றம் யாதெனில், இங்ஙனம் தோற்றத்திலேயே, கருவிலிருக்கும்போதே, திருமாலின் திருவடிகளைக் கண்டு தொழுது, பகவதனுபவம் பெற்றேன் என்பதுதான்'' என்று பெருமிதம் கொள்கிறார் பூதத்திருவடி.

''முதலாழ்வார்கள் நம்மைப்போல் கர்ப்பத்தில் தங்கிப் பிறந்தவர்கள் அல்லவே? பூவில் பிறந்த இந்த பூவராகன்தமர் இவ்விதம் பாடியது சரிதானா?'' என்கிற கேள்வி இங்கு எழுகிறது. எந்த மலரில் தோன்றினார்களோ, அதுவே இவர்களுக்கு கர்ப்ப இடம். ''இவ்வுலகில் தோன்றுவதற்கு முன்பே நான் திருமாலின் திருவருள் பெற்றவன்'' என்பதே மூவரின் பெருமை.

**சேனையார் உபதேசித்த ஸ்ரீநிவாஸன்தமர்:**

இங்ஙனம் கருவிலேயே கண்ணனைக் கண்டு கைதொழுத கேசவன்தமர் மூவருக்கும், வைகுந்தநாதனின் கட்டளைப்படி, சேனை முதலியார் (விஸ்வக் சேனர்) பூவுலகில் எழுந்தருளி, ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குரிய பஞ்ச சம்ஸ்காரங்களையும் செய்து, திருமந்திரப் பொருளையும், துவய மந்திரத்தையும் உபதேசித்ததாக வரலாறு. பாமபதத்தைச் சேர்ந்தவர்களுக்கு, பரமபதத்தில் முதலிடம் வகிக்கும் சேனை முதலியார்தானே உபதேசிக்க வேண்டும்?

கருவிலேயே திருமாலைக் கண்ட நித்திய சித்தர்களாகிய ஆழ்வார்களுக்கும், ஆன்மீக ஏழைகளாகிய நமக்கும் இடையே மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேற்றுமையல்லவா இருக்கிறது! இதற்கு பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சிறந்த உதாரணம் கூறுகிறார். சாதாரணமாகச் செடிகொடிகள் முதலில் பூத்து, பிறகே காய்த்துப் பழம் கொடுக்கும். அது போலவே சாதாரண ஜீவர்கள் மிக முயன்று ஆன்மீக சாதனைகளை மேற்கொண்டு, பிறகே பகவதனுபவம் என்கிற ஞானப்பழத்தைப் பெறுவர். அபூர்வமாகச் சில செடிகொடிகள் முதலில் காய்த்துப் பிறகே புஷ்பிப்பதும் உண்டு. இவ்வாறே அவதார புருஷர்களும், நித்திய சித்தர்களும் முன்பே பகவதனுபவம் பெற்று விடுவர்; பிறகே உலக நன்மைக்காக சாதனைகளைச் செய்வர். சேனை முதலியார் உபதேசிப்பதற்கும் முன்னரே, கருவரங்கத்திலேயே, முதலாழ்வார்கள் திருவரங்கனைக் கண்டு கைதொழுதது எங்ஙனம் என்பதற்கு இது விளக்கமாக அமைந்துள்ளது.

**கேடில் விழுப்புகழ் கேசவன்தமர்:**

கேசவனுடைய அடியார்களில் சற்றும் குறைவில்லாத விழுமிய புகழையுடையவர்கள் முதல் மூவர். அதிலும் பேயாழ்வார் பிறவியிலேயே 'கேசவன்தமர்' ஆனவர்! மயிலை ஆதிகேசவப் பெருமாள் கோயில் கிணற்றிலேயே கருவரங்கத்துட் கிடந்தவரல்லவா?

கிருஷ்ணாவதாரத்திற்குப் பிறகே, பாகவத தர்மம் பாரதத்தில் பரவித் தழைத்தோங்கியது என்பர். அதற்குமுன் ஞானம், கர்மம், யோகம் முதலியவையே முக்கியத்துவம் பெற்றிருந்தன. பக்திமார்க்கம் ஆழ்வார்களாலேயே தமிழகத்தில் நன்கு நிறுவப்பட்டுப் பிறகே வடக்கிலும் பரவியது. எனவே கிருஷ்ணாவதாரத்திலேயே ஆழ்வார்கள் மிகுந்த ஈடுபாடு கொண்டு ஆழ்ங்காற்பட்டத்தில் ஆச்சரியம் ஏதுமில்லை. பரபக்தி (பகவானைக் காண வேண்டும் என்கிற ஆவல்), பரஞானம் (பகவானை நேரடியாகக் கண்டு தெளிதல்), பரமபக்தி (பகவானைக் கண்ட பின்பும் மேன்மேலும் காண வேண்டும் என்கிற பேராவல்) ஆகிய உன்னதமான மூன்றுபக்தி நிலைகளுக்கு இலக்கணங்களாகவே முறையே பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகிய மூவரும் திகழ்கின்றனர். ''முதலாழ்வார்கள் மூவரையும் ஒரு மாபெரும் பக்தியுகத்தைத் தோற்றுவித்த மூல புருடர்களான பாகவத மும்மணிகள் என்று கொள்வது மிகப் பொருத்தமாகும்'' என்கிறார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார்.

திருக்கோவலூரில் எம்பெருமான் திருவுள்ளப்படியே ஒருவரையொருவர் சந்தித்த முதலாழ்வார்கள் பல திருப்பதிகளுக்கும் சென்று, மங்களாசாஸனம் செய்து பாகவத தர்மத்தைப் பரப்பினர். மூவரும் தம்முடைய யோகபலத்தால் ''பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு'' பாரில் எழுந்தருளிப் பரந்தாமன் புகழ்பாடி, உலகினரை உய்வித்ததாகக் கூறுவர். இங்ஙனம் கேடில் விழுப்புகழ் கேசவன்தமரில், காலத்தில் மட்டுமின்றிக் கைங்கரியத்திலும் தலையாயவர்கள் நம் ஆழ்வார் மும்மூர்த்திகள்!

**ஸ்ரீ பேயாழ்வார் திருவடிகளே சரணம்**

# 9. ஶ்ரீநீர்வண்ணனின் முப்படைகள்

கடன்மல்லைக் காவலனே பூதவேந்தே
காசினிமேல் ஐப்பசியில் அவிட்டநாள் வந்து
இடர்கடியும் தண்கோவல் இடைகழிச் சென்று
இணையில்லா மூவருமாய் இசைந்தே நிற்க
நடுவில் இவர் ஒருவரும் என்று அறியாவண்ணம்
நள்ளிருளில் மால் நெருக்க நந்தா ஞானச்
சுடர்விளக்கு ஏற்றிய அன்பேதகளியான
தொடை நூறும் எனக்கு அருள்செய் துலங்க நீயே.

**(பிரபந்தசாரம், 3)**

*காசினி = உலகம்; இடர் கடியும் = துன்பத்தை நீக்கும்; தண் = குளிர்ந்த; கோவல் = திருக்கோவலூர் என்னும் திவ்விய தேசம்; இணையில்லா மூவர் = இணையற்ற முதல் மூன்று ஆழ்வார்கள்; மால் = திருமால்; அன்பே தகளியான தொடை = 'அன்பே தகளி' என்று தொடங்கி பூதத்தாழ்வார் அருளிச் செய்த நூறு தமிழ்ப்பாடல்கள்.*

*ஸ்ரீ வேதாந்த தேசிகர் பூதத்தாழ்வாரைப் போற்றி அருளிச் செய்த பிரபந்தசாரப் பாசுரமிது. திருக்கோவலூர் இடைகழியில் முதலாழ்வார்கள் மழைக்கு ஒதுங்கி நின்றபோது, திருமால் அவர்களுக்கு மத்தியில் தோன்றி நெருக்க, முதலாழ்வார்கள் ஞானக்கண்ணால் எம்பெருமானைக் கண்டு, அந்த பகவதனுபவத்திற்குப் போக்குவீடாகத் தலா நூறு பாசுரங்கள் பாடியருளினர்.*

பூதத்தாழ்வாரை, ''கடன்மல்லைக் காவலனே!'' என்று அழைக்கிறார் ஆசாரியர். 'காவலன்' என்பது இங்கே நமக்கு துவார பாலகனை (வாயில் காப்பாளனை) நினைவுறுத்துகிறது. பெருமாள் கோயில் சன்னிதிகளில் இருபுறமும் சங்கு, சக்கரங்களுடன் துவாரபாலகர்கள் கையில் கதாயுதமேந்தி நிற்பது மனக்கண் முன் தோன்றுகிறது! பூதவேந்தர் எனப்படும் இரண்டாவது ஆழ்வார் திருமாலின் கதாயுதத்தின் அம்சமாக அவதரித்தவர். ஸ்ரீ வைஷ்ணவத்தைக் கட்டிக்காத்தவர். எனவே இவரை கடன்மல்லைக் காவலன், பூதவேந்து என்று தேசிகன் இங்கே அழைக்கிறார்.

முதலாழ்வார்கள் மூவருமே திருமாலின் மூன்று திவ்விய ஆயுதங்களின் அம்சங்களாக அவதரித்து, வைணவத்தைக் காத்து, நிலை நிறுத்தியவர்கள். நம் தலைப்புக்கேற்றபடி தேசிகரின் 'காவலன்' பாசுரம் அமைந்துள்ளதால், இங்கே இடம் பெற்றது.

இங்கே தலைப்பு பொய்கையாழ்வார் பாசுரம் ஒன்றை ஒட்டி அமைந்துள்ளது:

''முதலாவார் மூவரே; அம்மூவருள்ளும்
முதலாவான் மூரிநீர் வண்ணன்'' (15)

(மூரிநீர் = விரிகடல், பரந்தநீர்; மூரிநீர் வண்ணன் = கடல்நிறக் கடவுள், விஷ்ணு).

தேவர்களுள் முதலானவர்கள் பிரமன், விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகள். அம்மூவருள்ளும் ஆதிமூலமானவன் திருமாலே.

சரோமுனியின் பாட்டு முதலாழ்வார்களுக்கும் பொருந்துகிறது. ஆழ்வார்களுள் முதலாவார் மூவரே; அம்மூவருள்ளும் முதலிடம் வகிப்பவர் மூரிநீர் வண்ணனாகிய பொய்கையாழ்வார். பரந்த பொய்கையில் உதித்த காரணத்தால் பொய்கைப்பிரானும் 'மூரிநீர் வண்ணன்' ஆகிறார்!

சங்கு, கதை, வாள், சக்கரம், வில் ஆகியவை திருமாலின் ஐம்படைகள் (ஆயுதங்கள்). இவற்றின் அவதாரங்களாகவே முதல் நான்கு ஆழ்வார்களும், திருமங்கையாழ்வாரும் அவதரித்தனர். இவர்கள் எம்பெருமானின் ஆன்மீகப் படைவீரர்களைப்போல் நாடெங்கும் அலைந்து திரிந்து, ஸ்ரீ வைஷ்ணவத்தைத் தீவிரமாகப் பிரசாரம் செய்து பரப்பியவர்கள். எனவே திருமாலின் திறம் மிக்க படைகளாக இவர்களைக் கருதுவது சரியே!.

கௌஸ்துபம், வனமாலை, ஸ்ரீவத்ஸம் ஆகியவை விஷ்ணுவின் திருவாபரணங்கள். இவற்றின் அவதாரங்களான குலசேகரர், தொண்டரடிப்பொடி, திருப்பாணர் ஆகியோர் திருவரங்கத்திலேயே தங்கி ஸ்ரீ வைஷ்ணவத்திரு மிகுந்து பொலிந்தவர்கள். எனவே இவர்களைத் திருமாலின் ஆபரணங்களாகக் கருதுவது முறையே!

இங்கே ஒரு பகுத்தறிவுப் பிரச்னை எழுகிறது: ஆயுதங்கள், ஆபரணங்கள் போன்றவை 'அசித்' - உயிரற்ற சடப்பொருள்கள் அல்லவா? இவை எப்படி 'சித்' ஆக, உயிருள்ள மனிதர்களாகப் பிறக்கமுடியும்? திருமால் சத்-சித்-ஆனந்தன். பரமபதத்தில் பகவானுடன் சம்பந்தப்பட்டவை அனைத்துமே 'சித்' ஆகிறது. எனவே தடையில்லை. விஞ்ஞான ரீதியாகப் பார்த்தாலும், உலகில் முதலில் சடப்பொருள்களே தோன்றின; இவற்றிலிருந்தே பகவான் எவ்வாறோ உயிருள்ள பிராணிகளையும், பிறகு மனிதர்களையும் படைத்தான். பகுத்தறிவிற்கு அப்பாற்பட்ட சமாசாரம் இது!

மகாவிஷ்ணுவின் திருவுள்ளப்படியே எம்பெருமானின் ஐம்படைகளும், ஆபரணங்களும், பிற நித்தியசூரிகளும் பன்னிரு ஆழ்வார்களாக கீழ்க்கண்டவாறு அவதரித்தனர்:

| ஆழ்வார் | திருமாலின் அம்சம் |
|---|---|
| 1. பொய்கையார் | பாஞ்சசன்னியம் (சங்கு) |
| 2. பூதத்தார் | கௌமோதகீ (கதாயுதம்) |
| 3. பேயார் | நாந்தகம் (வாள்) |
| 4. திருமழிசையார் | சுதர்சனம் (சக்கரம்) |
| 5. சடகோபர் | விஷ்வக்சேனர் (சேனை முதலி) |
| 6. மதுரகவி | வைநதேயர் (கருடன்) |
| 7. குலசேகரர் | கௌஸ்துபம் (மணி) |
| 8. விஷ்ணுசித்தர் | கருடன் (வாகனம்) |
| 9. ஆண்டாள் | பூமாதேவி (பிராட்டி) |
| 10. தொண்டரடிப்பொடி | வைஜயந்தி (வனமாலை) |
| 11. திருப்பாணர் | ஸ்ரீ வத்ஸம் (மருவு) |
| 12. திருமங்கை மன்னன் | சார்ங்கம் (வில்). |

முதல் ஆழ்வாராகிய பொய்கையார் பாஞ்சசன்னியம் எனப்படும் திருச்சங்கின் அவதாரமாகக் கருதப்படுகிறார். இச்சங்கு கிருஷ்ணாவதாரத்தின்போது உண்டாகியது. இதைக் குறித்த இதிகாசம்:

கிருஷ்ணன் கம்சனைக் கொன்று தன், பாட்டனாராகிய உக்கிரசேனனுக்கு முடிசூட்டினான். பிறகு அவந்திநகரில் சாந்தீபினி என்னும் அந்தணருடன் குருகுலவாசம் செய்து, சகல சாத்திரங்களையும் கற்றான். சாந்தீபினி முனிவர் கிருஷ்ணனின் அவதார ரகசியத்தை அறிந்தவராதலால், குருதட்சிணையாகக் கடலில் பிரபாச தீர்த்தத்தில் மூழ்கி இறந்து போன தம் மகனை உயிருடன் கொண்டு வந்து தரும்படிக் கண்ணனிடம் கேட்டார். கிருஷ்ணன் கடலில் வாழ்ந்த 'பஞ்சஜனன்' என்னும் அசுரனே அந்தச் சிறுவனைக் கடத்தினான் என்பதை வருணனிடம் கேட்டுத் தெரிந்து கொண்டு, கடலில் மூழ்கி அசுரனைக் கொன்றான். பஞ்சஜனனின் உடல் எலும்புகளிலிருந்து கிருஷ்ணன் தயாரித்த சங்கே 'பாஞ்சஜன்யம்' எனப்படும். இந்தச் சங்கை ஊதிக்கொண்டு, கண்ணன் எமலோகம் சென்று, அந்தணச் சிறுவனை உயிருடன் மீட்டுவந்து, சாந்தீபினி முனிவருக்கு குருதட்சிணையாக அளித்தான்.

கடலில் வசிக்கும் பிராணிகளின் எலும்புகளே அவை இறந்தபின் சங்குகளாகவும், கிளிஞ்சல்களாகவும் மாறுகின்றன என்பது ஒரு பழைய நம்பிக்கை. எனவே கடலில் வாழ்ந்த பஞ்சஜன அசுரனின் எலும்புக்கூட்டை, கண்ணபிரான் 'பாஞ்சஜன்யம்' என்னும் திருச்சங்காக மாற்றியதாகப் புராணம் கூறுகிறது. அசுரனின் எலும்பும் பரந்தாமனின் இடக்கைக்கு சங்காக வந்து சேர்ந்ததும் தெய்வீகமான படையாகி விடுகிறது!

இங்ஙனம் கடல்நீரிலிருந்து கடல்வண்ணனாகிய கண்ணன் கண்டெடுத்த சங்கின் அம்சமாகப் பிறந்த முதல் ஆழ்வார் மீண்டும் பொய்கை நீரில் தோன்றிப் 'பொய்கையார்' என்றே பெயர் பெற்றது பொருத்தமே! முதலாழ்வார்கள் கிருஷ்ணாவதாரத்தில், அதிலும் கிருஷ்ணனின் அர்ச்சை வடிவான திருவேங்கடமுடையானிடத்தில் அளவற்ற ஈடுபாடு உடையவர்கள். எனவே பொய்கையார் கிருஷ்ணனின் பாஞ்சஜன்யமாகவே போற்றப்படுவதில் ஆச்சரியம் இல்லை.

பூஜைகள் அனைத்துமே, சங்கு ஊதிய பிறகே துவங்கப்படும். சங்கு நாதப்பிரம்மத்தைக் குறிக்கிறது. கிருஷ்ணனும் பாஞ்சஜன்யத்தை முழக்கியே பாரதப்போரைத் துவக்கி வைத்தான். எனவே முதலாழ்வார் திருச்சங்கின் அவதாரமாகவே திகழ்வதும் முறையே!

சுவாமி ராமகிருஷ்ணானந்தர் (1863 - 1911) என்னும் மகான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் நேர்சீடர். சுவாமி விவேகானந்தர் நியமித்தபடியே இவர் சென்னை மயிலாப்பூரில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் கிளையை நிறுவினார். ஸ்ரீ ராமானுஜரிடம் அளவற்ற ஈடுபாடுடைய இந்த சுவாமிகள் அவரைப்பற்றி வங்காள மொழியில் ஒரு சிறந்த நூலை எழுதி, வங்காள மக்களுக்கு எம்பெருமானாரின் பெருமையை உணர்த்தியவர். இந்த நூலில் சுவாமி ராமகிருஷ்ணானந்தர், பாஞ்சஜன்யத்தின் அம்சமாக அவதரித்த ஸ்ரீ பொய்கையாழ்வாரைக் குறித்த சிறந்த விளக்கம் ஒன்றை வரைந்துள்ளார்:

''பஞ்சஜனன் என்னும் அசுரனைக் கொன்று, அவனுடைய எலும்புகளிலிருந்து மகாவிஷ்ணு தயாரித்த சங்கே 'பாஞ்சஜன்யம்' எனப்படும். இச்சங்கு விஷ்ணுவிற்கு மிகவும் உகந்தது; ஏனெனில் இதைக் கண்டதும் தான் அசுரர்களையும், தீய உள்ளம் கொண்டவர்களையும் அழிப்பவன், தூய உள்ளம் கொண்ட பக்தர்களின் நண்பன் என்கிற உணர்வு பகவானிடம் மேலோங்குகிறது. எந்த எலும்புக்கூடு அசுரனின் உடலில் இருந்தபோது பகவானையே எதிர்த்துப் பல ஆயுதங்களை ஏவியதோ, அதுவே இப்பொழுது தன்னுடைய இடி முழக்கத்தினால் எம்பெருமானுடைய எதிரிகளின் இதயத்திலுள்ள இரத்தத்தை உறையவைக்கிறது. குருட்சேத்திரப் போரில், பாஞ்சஜன்யத்தின் சிம்மநாதமே கௌரவர்களின் இதயங்களையும், மண்ணையும், விண்ணையும் பிளந்தது. அது போலவே பாஞ்சஜன்யம் இன்றும் விஷ்ணுவின் விரோதிகளிடையே பயத்தை உண்டாக்கி, அவர்களுடைய பலத்தைப் பறிக்கிறது. இவையே திருச்சங்கின் குணங்கள்; இவை எங்கு காணப்படுகின்றனவோ, அங்கு பாஞ்சஜன்யத்தைக் காணலாம். மகானாகிய பொய்கையாழ்வார் இவ்விதம் நாத்திகர்கள், தீயவர்கள் ஆகியோரின் இதயங்களிலே அம்புபோல் பாய்ந்து, தம்முடைய இன்னிசையால் மக்களிடையே பக்தி பரவசத்தை உண்டாக்கியதால், பாஞ்சஜன்யத்தின் அவதாரமாகவே போற்றப்படுகிறார்''.

திருவேங்கடமுடையானின் திருச்சங்கை அதன் அம்சமாகவே அவதரித்தவர் மங்களாசாஸனம் செய்வது விசேஷமல்லவா? ஆழ்வாரின் அற்புதமான சங்கநாதம் -

''எந்தை வேங்கடமென்னும் போதினிலே
இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே''

என்பது போலச் செவிக்கு உணவாக அமைந்துள்ளது:

வகையறு நுண்கேள்வி வாய்வார்கள் நாளும்
புகை விளக்கும் பூம்புனலும் ஏந்தி - திசை திசையின்
வேதியர்கள் சென்று இறைஞ்சும் வேங்கடமே! வெண்சங்கம்
ஊதியவாய் மால் உகந்த ஊர்.

வகையறு = வேறு பலன் கருதாது; புகை = தூபம்; விளக்கு = தீபம்; பூம்புனல் = பூவுடன் கூடிய தூயநீர்; திசை திசையின் = பல திசைகளிலிருந்து.

**பாசுரத்தின் பொருள்:**

இதர தெய்வங்களையும், வேறு பலன்களையும் கருதாமல் சிறந்த கேள்வி ஞானம் வாய்ந்தவர்கள், தினந்தோறும் தூபம், தீபம், புஷ்பங்கள், தூயநீர் இவற்றை ஏந்தித் திருவேங்கடவனை வந்து வழிபடுகின்றனர். இவ்வாறு பல திசைகளிலிருந்து அந்தணர்கள் சென்று வழிபடும் தலம் திருவேங்கடம். மகாபாரதப் போரில் 'பாஞ்சஜன்யம்' என்கிற வெண்சங்கை ஊதிய கிருஷ்ணன் உகந்து எழுந்தருளியிருக்கும் ஊர் இது.

இப்பாசுரம் ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதக் காட்சிகளைக் கண்முன் கொண்டுவந்து நிறுத்துகிறது. ஆழ்வார்கள் காலத்தில் இவ்விதமே திருமலையில் சுப்ரபாதம், தோமாலை சேவை, அர்ச்சனை போன்றவை நடந்தன போலும். பொய்கையாரின் பாசுரத்தை ஒட்டியே ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதத்திலும் ஒரு சுலோகம் அமைந்திருக்கிறது:

''ஏலாலவங்க கநஸார சுகந்த தீர்த்தம்
திவ்யம் வியத்ஸரிதி ஹேமகடேஷு பூர்ணம்
த்ருத்வாத்ய வைதிக சிகாமணய: ப்ரஹ்ருஷ்டா:
திஷ்டந்தி வேங்கடபதேர் தவ சுப்ரபாதம்''

இதன் தமிழாக்கம்:

''ஏல முது நடு லவங்க கணசார மணங்கமழும்
சீலமிகு தெய்வீக திருதீர்த்தம் தலை சுமந்து
ஞாலமுய்ய வேதமொழி நவற்றுணர்ந்த வேதியர்கள்
கோலமிகு கோயிலுற்றார், வேங்கடவா எழுந்தருள்வாய்!

பொய்கைப் புனிதருக்குப் பிறகு இரண்டாவது ஆழ்வாராக அவதரித்த பூதத்தாழ்வார் திருமாலின் "கௌமோதகீ" என்னும் கதாயுதத்தின் தோற்றமாகப் போற்றப்படுகிறார். மிகவும் பலசாலிகளே கதையைச் சுழற்றமுடியும். ஹனுமான், பீமசேனன் போன்றவர்களின் ஆயுதம் கதை. நாத்திகர்களும் மண்டியிட்டு வணங்கும்படி விஷ்ணுசக்தி மிகுந்து பொலிந்தவர் பூதவேந்தர். எனவே இவர் வலிமைமிக்க கதாயுதத்தின் அவதாரமாகக் கருதப்படுகிறார்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் கயையில் எழுந்தருளியுள்ள கதாதரவிஷ்ணுவின் அவதாரமாக உலகில் தோன்றப் போவதை, அவருடைய தந்தை க்ஷுதிராம் சாட்டர்ஜி கயாசிரார்த்தம் செய்தபிறகு கனவில் கண்டறிந்தார். எனவே அவர் தம் மகனுக்கு 'கதாதர்' என்று கயாவிஷ்ணுவின் திருநாமத்தையே சூட்டினார். பிற்காலத்தில் ஒருநாள் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் பெயருக்கேற்பவே கதாயுதத்தைக் கையில் ஏந்திக்கொண்டு, சுவாமி அத்புதானந்தர் என்கிற சீடருக்கு தெய்வீகக் காட்சியளித்தார். தாம் கையில் கதாயுதத்துடன் தோன்றுவதைக் கண்டு அதிசயித்த சீடரிடம் ஸ்ரீராமகிருஷ்ணர், "உலகில் நாத்திக வாதங்களைத் தகர்ப்பதற்காகவே நான் இவ்விதம் கதாதரனாகத் தோன்றியுள்ளேன்" என்று கூறியருளினார். இக்காரணத்திற்காகவே மகாவிஷ்ணுவின் கதாயுதமாகிய நமது பூதத்தாரும் உலகில் அவதரித்தார் என்பதைக் கண்டோம்.

மூன்றாவது ஆழ்வாராகிய பேயார் திருமாலின் 'நாந்தகம்' என்னும் வாளின் அவதாரமாகப் போற்றப்படுகிறார். கத்தி தலைகளை ஒரே வெட்டில் அறுத்து எறிவது போல, மாயை என்னும் வலையை விவேகம் என்னும் வாளினால் வெட்டி வீழ்த்திப் பரந்தாமனை நேரில் கண்டு பரமானந்தம் அடைந்தவர் பேயாழ்வார். ஆன்மீக விழிப்புணர்ச்சி என்னும் கத்தியினால் இவர் ஏழ்பிறப்பும் அறுத்து, ஏழுமலையானின் பூவார் கழல்களைத் தாம் கண்டதை, "இன்றே கழல் கண்டேன் ஏழ்பிறப்பும் யான் அறுத்தேன்" என்று அருளிச் செய்துள்ளார்.

சுவாமி விவேகானந்தரைக் குறித்து ஸ்ரீராமகிருஷ்ணர், "நரேந்திரன் தன்னுடைய விவேகத்தினால் மாயையின் தலைகளை எப்பொழுதும் அறுத்துத் தள்ளிக் கொண்டிருக்கிறான். உலகப்பற்று என்னும் மாயை பத்தடி தூரம் கூட நரேந்திரனிடம் அணுகமுடியாது. உருவிய கத்தியுடன் உலவும் போர்வீரனைப்

போன்றவன் அவன்'' என்று கூறுவார். அவரைப் போன்றே நம் பேயாழ்வாரும், ஞானம், விவேகம், வைராக்கியம், ஆன்மீக விழிப்பு முதலிய சத்துவ குணங்கள் மிகுந்து, பக்தி சாம்ராஜ்யத்தின் மாவீரராக உலகில் உலவியதாலேயே, நாந்தக வாளாகக் கருதப்படுகிறார்.

திருமாலின் ஐம்படைகளை நம் நாந்தக வாள்வீரர் மங்களாசாஸனம் செய்திருக்கிறார்:

கையகனல் ஆழி கார்க் கடல்வாய் வெண்சங்கம்
வெய்ய கதைசார்ங்கம் வெஞ்சுடர்வாள் - செய்ய
படைபரவை பாழி பனிநீருலகம்
அடியளந்த மாயர் அவர்க்கு (36)

கைய = கைகளில் இருந்த; கனல் = சுடர் வீசும்; ஆழி = சுதர்சனச் சக்கரம்; கார்க் கடல்வாய் = கருங்கடலில் வாய்த்த (சங்கு); வெய்ய = வெம்மையான, கொடிய; செய்ய = அழகிய; பரவை = கடல்; பாழி = படுக்கை.

**பாசுரத்தின் பொருள்:**

குளிர்ந்த கடல் சூழ்ந்த உலகைத் தனது திருவடிகளால், திரிவிக்கிரம அவதாரத்தில் அளந்த மாயவன் திருவேங்கடவன். பெருமாளுடைய அழகிய ஆயுதங்கள்: கனல் வீசும் சக்கரம், கருங்கடலில் கிடைத்த வெண்சங்கு, பகைவர்களுக்கு கொடுமை செய்யும் கதாயுதம், கொடிய சார்ங்கம் என்னும் வில், தீப்பொறி பறக்கும் வாள் முதலியன. கடலே இவனுக்குப் படுக்கை.

இங்கே 'உலகளந்த மாயர்' என்பது ஏழுமலையானுக்குச் சிறப்பாகப் பொருந்துகிறது. ''தாள் பரப்பி மண்தாவிய ஈசன்'' என்று நம்மாழ்வார் திருவேங்கடவனைப் பாடியுள்ளார். எல்லோரையும் திருவடியின் கீழிட்டுக்கொண்டும், கானமும் வானரமும் ஆனவற்றுக்கும் முகங்கொடுத்துக் கொண்டும் திருமலைமீது நிற்கிறபடியால் திருவேங்கடமுடையானை உலகளந்த பெருமானாகச் சொல்லப் பொருத்தமுண்டென்பர் ஆசிரியர்கள்.

எம்பெருமான் உலகமளக்க திரிவிக்ரமனாக வளர்ந்தபோது, அவன் திருமேனிபோல் அவன் திருக்கைகளிலிருந்த ஆயதங்கள் ஐந்தும் தங்கள் குணங்களோடு திருமேனிக்குத் தகுமாறு வளர்ந்து அழகாய் விளங்கின என்றபடி, உலகளந்த சோர்வு தீரப்

பாற்கடலில் படுத்திருக்கிறான். இளைப்பாறியதும், திருவேங்கடத்திற்கு வந்து நின்று கொண்டிருக்கிறான்!

தீக்கனல் பறக்கும் சக்கரம், வெப்பம் வீசும் 'வெய்ய' கதை, சார்ங்கம்; உஷ்ணமும், ஒளியும் உமிழும் 'வெஞ்சுடர்' வாள்; இவற்றிற்கும் வேங்கடத்திற்கும் சூடான பொருத்தமுண்டு. 'வேம்' என்றால் வெப்பமான, கொளுத்துகின்ற; 'கடம்' என்றால் பாலை, நீரற்ற மலைப்பிரதேசம். 'வேங்கடம்' என்பது மலைமீது குளிர்ச்சியாக இருப்பினும், கீழே கடும் வெயில் கொளுத்தும் வறண்ட மலைக்கூட்டங்கள் உள்ள நிலப்பகுதியில் அமைந்துள்ளது. எனவே வேங்கடமும் ஐம்படைகளைப் போன்றே வெப்பம் மிகுந்தது. அதே சமயத்தில் மேகம் நிறைந்த திருமலையுச்சி, பாற்கடலைப் போல் குளிர்ந்திருக்கிறது! திருமாலின் வெஞ்சுடர் வாளாகிய பேயாழ்வார் இந்த ஐம்படைப் பாசுரத்தை, 'பயிலும் சுடர் ஒளி மூர்த்தி'யாகிய வேங்கடநாதனுக்கு முற்றும் பொருந்தும் விதத்திலேயே அமைத்துள்ளார்!

**ஸ்ரீ பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்**

# 10. மூவர் கூடுதலும், முகுந்தனைப் பாடுதலும்

அருள் மிகுத்ததொரு வடிவாய்க் கச்சிதன்னில்
ஐப்பசி மாதத் திருவோணத்து நாளில்
பொருள் மிகுத்த மறை விளங்கப் புவியோர் உய்யப்
பொய்கைதனில் வந்து உதித்த புனிதா! முன்னாள்-
இருளதனில் தண்கோவல் இடைகழிச் சென்று
இருவருடன் நிற்கவும் மால் இடை நெருக்கத்
திருவிளக்காம் எனும் வையந்தகளி நூறாம்
செழும்பொருளை எனக்கு அருள் செய்திருந்த நீயே.

*(பிரபந்த சாரம், 2)*

*மறை = வேதம்; தண் = குளிர்ந்த; கோவல் = திருக்கோவலூர்; இருவருடன் = பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய இருவருடன்; மால் = திருமால்; வையந்தகளி நூறாம் = பொய்கையார் அருளிச்செய்த ''வையந்தகளி'' என்று தொடங்கும் நூறு பாசுரங்கள்.*

ஸ்ரீ வேதாந்த தேசிகர் பொய்கைப் புனிதரைப் பாடியுள்ள பாசுரமிது. திருக்கோவலூரில் முதலாழ்வார்கள் சந்தித்த நிகழ்ச்சியை இங்கு விரிவாகக் காண்போம்.

முதலாழ்வார்கள் வாழ்வில் நடந்த முக்கிய நிகழ்ச்சி, அவர்கள் திருக்கோவலூரில் ஒன்று கூடி, திருமாலை நேரில் கண்டு, அந்தாதி பாடியருளியதுதான். அதற்குமுன் சமகாலத்தவர்களாகிய மூவரும் ஒருவரையொருவர் சந்தித்ததில்லை. உலக வாழ்க்கையிலேயே

உழன்று, கட்டுண்டு கிடக்கும் சம்சாரிகளுடன் நாட்டில் வசிக்க விரும்பாத ஆழ்வார் மும்மூர்த்திகள் தனியே காட்டில் தங்கி, வேதகால ரிஷிகளைப்போல் தவ வாழ்வை மேற்கொண்டனர். ஒரு நாளைக்கு மேல் ஓர் ஊரில் தங்கியிராது, திவ்விய தேசங்களுக்கும் அவ்வப்போது யாத்திரையாகச் சென்று திருமாலை வழிபட்டனர். இத்தகைய மாபெரும் பக்தர்களை ஒன்று சேர்க்க எம்பெருமான் திருவுள்ளம் கொண்டான். திருக்கோவலூர் என்னும் தலத்திற்குச் செல்லும் எண்ணத்தை மூவர் மனத்திலும் ஒரே நேரத்தில் உண்டாக்கினான். ஆழ்வார்கள் மூவரும் தனித்தனியாக அத்திருப்பதியை அடைந்து, அங்கு எழுந்தருளியிருக்கும் திரிவிக்கிரமப் பெருமாளை சேவித்தனர்.

அச்சமயத்தில் மேகவண்ணனாகிய திருமால் பெரும் மழையையும், புயலையும் உண்டாக்கினான். திருப்பாவை நான்காம் பாசுரத்தில் ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த வண்ணமே அடைமழை பெய்யத் தொடங்கியது:

"ஆழிமழைக் கண்ணா! ஒன்று நீ கைகரவேல்
ஆழி உள்புக்கு முகந்துகொடு, ஆர்த்து ஏறி.
ஊழி முதல்வன் உருவம்போல் மெய் கறுத்துப்
பாழி அம்தோளுடைப் பற்பநாபன் கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரி போல் நின்று அதிர்ந்து
தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழை போல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோர் எம்பாவாய்."

**பாசுரத்தின் பொருள்:**

பிறர் அறியமுடியாதபடி ஆழமான சுபாவமுடையவனாய், மழையை உண்டாக்கும் தெய்வமே! உன் வள்ளல் தன்மையில் ஒன்றையும் மறைக்காதே! ஆழமான கடலில் புகுந்து, நீரை ஆவியாக அள்ளிக்கொண்டு, முழக்கத்துடன் மேகமாக ஆகாயமெங்கும் ஏறிப் பரவுவாயாக. உலகைப் படைப்பதற்குக் காரணமான திருமாலின் திருமேனிபோல் மேகங்கள் கறுத்து, விசாலமான அழகிய தோள்களையுடைய பத்மநாபனின் வலக்கையில் உள்ள சுதர்சனச் சக்கரத்தைப்போல் மின்னி, அவனுடைய இடக்கையில் உள்ள பாஞ்சசன்னியம் என்னும் வலம்புரிச் சங்குபோல் மாறாமல் முழங்குவாயாக! உலகினர் அனைவரும் வாழும்படியும், மார்கழி நோன்பு நோற்கும்

நாங்களும் மகிழ்ந்து நீராடவும், திருமாலின் சார்ங்கம் என்னும் வில் அம்புமழையைப் பொழிவது போல, நீயும் மழை பெய்விப்பாயாக!

இவ்வாறு ஆண்டாள் அருளியபடியே, திருக்கோவலூரை அடைந்த முதலாழ்வார்கள் மீது மழை பொழிந்தது. ஆண்டாள் பாசுரத்திற்கும், இவர்களுக்கும் மற்றொரு பொருத்தமும் உண்டு! சுதர்சனச் சக்கரம், பாஞ்சசன்னியம், என்கிற திருச்சங்கு, சார்ங்கம் என்கிற வில் ஆகிய திருமாலின் முப்படைகளை ஆண்டாள் மின்னல், இடி, மழையின் வேகம் ஆகியவற்றுக்கு உவமைகளாகச் சொல்கிறாள். திருக்கோவலூர் மழையோ, எம்பெருமானுடைய முப்படைகளின் அவதாரங்களாகிய முதலாழ்வார்கள் மீதே தன் கைவரிசையைக் காட்டியது! பாஞ்சசன்னியப் பொய்கையார்; கதாயுத பூதத்தார்; நாந்தகப் பேயார் ஆகிய மூவரும் அடைமழையில் சிக்கியபோது, ஆண்டாள் மார்கழி நீராடி மகிழ்ந்ததைப்போல் ஆனந்தப்பட்டார்களோ என்னவோ தெரியாது; ஆயினும் மழையில் ஒதுங்குவதற்கு ஒரு புகலிடம் தேடி, இருளில் அலைந்தனர்.

மூவருள் முதல்வரான பொய்கையார் மிருகண்டு என்னும் வைணவருடைய இல்லத்தைக் கண்டுபிடித்து, அவருடைய அனுமதியுடன் அங்கிருந்த குறுகிய இடைகழியில் (இது இன்று ரேழி எனப்படும்) திருமாலின் கிடந்த கோலத்தில், அலைந்து திரிந்த ஆயாசம் நீங்கப் படுத்துக்கொண்டார். அடைமழையிலும் ஒரு புகலிடத்தை அடைய வழிகாட்டிய எம்பெருமானை-

> ''சிந்திப்பார்க்கு இல்லை திருமாலே! நின்னடியை
> வந்திப்பார் காண்பர் வழி''

என நினைத்துக்கொண்டே பொய்கைப்பிரான் திருவரங்கனைப் போல் படுத்ததுதான் தாமதம், ''ஏன் பள்ளி கொண்டீர் ஐயா, பொய்கையாரே?'' என்று கேட்பதுபோல் பூதத்தாரும் அங்கேயே வந்து படுக்க இடம் வேண்டினார்.

உடனே பொய்கையார் ''ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம்'' என்று பெருந்தன்மையுடன் கூறி, அவரைத் தாம் தங்கியிருந்த இடைகழிக்கே எழுந்தருளும்படி அழைத்தார். இரண்டு ஆழ்வார்களும் படுக்கப் போதிய இடமில்லாததால், வராகன், நரசிம்மன் ஆகிய வீற்றிருக்கும் மூர்த்திகளைப்போல் அமர்ந்து கொண்டனர். சற்று நேரத்தில் மூன்றாமவராகிய

பேயாழ்வாரும், அங்கு வந்து இடம் கேட்கப் பொய்கையார், ''இங்கு உள்ள இடத்தில் ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்'' என்று ''முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி அகத்தானாம் இன்சொல் கூறி'' அவரையும் அன்புடன் வரவேற்றார்.

வெளியிலே ஊழிக்காலத்துப் பேய் மழையும், புயல் காற்றும்; ஏற்கனவே மழையில் தெப்பமாக நனைந்து, குளிரில் உதறல் எடுக்கும் உடல்நிலை; இடைகழியிலும் நல்ல மழைச்சாரல் உடலை மேலும் நீராட்டிக் கொண்டிருக்கிறது; போதாக்குறைக்கு இட நெருக்கடி வேறு! முன்பின் தெரியாத வழிப்போக்கர்களுடன் உரசி நிற்க வேண்டியிருக்கிறது. மூவருமே பரதேசிகள். நாளையச் சோற்றுக்கு நாராயணனையே நம்பியிருப்பவர்கள். இந்நிலையிலும் முதலாழ்வார்கள்—

''பொன்னாழி ஏந்தினான் பொன்னடியே சூடுவேற்கு
என்னாகில் என்னே எனக்கு''

எனறபடி சற்றும் தங்களுடைய உலகநிலையைப் பற்றிய நினைவேயில்லாமல், ஒருவரையொருவர் விசாரித்து அறிந்து கொண்டு, திருமால் பெருமையைப் பேசி மகிழ்ந்த வண்ணம் இருந்தனர். இத்தகைய இறையன்பர்கள்—

''செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர்''

என்று கோதை பலசுருதியாகப் பாடியுள்ளாள். எனவே இவர்கள் மத்தியில் திருமாலும் வந்து சேர்ந்ததில் ஆச்சரியமில்லை.

''மூன்று பேர்கள் எங்கு கூடி என்னைப் பற்றி பேசுகிறார்களோ அங்கே நான் (பகவான்) இருக்கிறேன்'' என்கிறார் ஏசுநாதர். ஆழ்வார்கள் இதை நேரிடையாகவே உணர்ந்தனர்.

மூன்றாமவராகிய பேயாழ்வார் வருகைக்குப்பின் மூவரும் திருவேங்கடமுடையானைப் போலவே நின்ற கோலத்தை ஏற்க நேரிட்டது: ஏனெனில் இடைகழி அவ்வளவு சிறியது! ஸ்ரீ வேங்கடாசலபதியை சேவிக்கும்போது இங்ஙனமே பக்தர்கள் இன்று நெருக்கமாக நிற்க நேரிடுகிறது. நெரிசலுக்குப் பிறகே தரிசனம்! முதலாழ்வார்களும் எம்பெருமானை இவ்விதமே அனுபவித்தனர்.

திருமாலின் நான்கு அர்ச்சை நிலைக் கோலங்களைப் பொய்கையாழ்வார் ''நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தானே'' என்று பாடியுள்ளார். திருப்பதி கோவிந்தராஜப் பெருமாள் மேற்கொண்டுள்ளது கிடந்த கோலம்; திருமலை ஆதிவராக மூர்த்தி இருந்த (அமர்ந்த) கோலத்தில் சேவை சாதிக்கிறார். திருமலை வேங்கடவன் ஏற்றுள்ளது நின்ற நிலை. இம்மூன்று நிலைகளையும் தொடர்ந்து இடைகழியில் ஆழ்வார்களும் மேற்கொள்ள நேரிட்டது அதிசயிக்கத்தக்கது! முதலில் பொய்கையார் கிடந்தார்; பூதத்தார் வந்ததும் இருவரும் இருந்தனர்; மூன்றாமவர் வந்ததும் மூவரும் நின்றனர். திருக்கோவலூரில் திரிவிக்கிரமன் உலகளந்த நிலையில் இருப்பது 'நடந்த கோலம்' எனப்படும். பெயருக்கேற்றவாறே கோவலூரில் எம்பெருமான் நடந்தே வந்து ஆழ்வார்களுக்குத் தெரியாமல் அவர்கள் மத்தியிலே புகுந்தான் எனக் கொள்ளலாம்.

நின்றபடி உரையாடிக் கொண்டிருந்த ஆழ்வார்கள் தீடிரென்று தங்களை யாரோ நெருக்குவதை உணர்ந்தார்கள். திருமாலே பிராட்டியோடு தங்களுக்கு மத்தியில் வந்திருப்பதை ஞானதிருஷ்டியின் மூலம் அறிந்த ஆழ்வார்கள் எம்பெருமானை அகக் கண்களால் அறிந்தனர். அந்த பகவதனுபவத்தில் ஏற்பட்ட பேரானந்தத்தை, தெவிட்டாத தீந்தமிழில் உலகினர் உய்யும்பொருட்டு அந்தாதிப் பாடல்களாக மூவரும் அறிவிக்கத் தொடங்கினர். இவ்வாறு நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தின் முதல் முன்னூறு பாசுரங்களும் மூன்று திருவந்தாதிகளாக அன்றிரவில் தோன்றின.

பொய்கைப்பிரான் முதல் திருவந்தாதி 85-ஆவது பாசுரத்தில் இடைகழியில் புகுந்து நெருக்கிய இறைவனைப் பாடியுள்ளார்:

''நீயுந் திருமகளும் நின்றாயால் குன்றெடுத்துப்
பாயும் பனி மறைத்த பண்பாளா!- வாசல்
கடை கழியா, உள்புகாக் காமர்பூங் கோவல்
இடைகழியே பற்றியினி.'' (86)

பனி = குளிர்மழை.

**பாசுரத்தின் பொருள்:**

கோவர்த்தன கிரியைக் கையினால் தூக்கிப் பெய்யும் பெருமழையைத் தடுத்த பண்பாளனே! நீயே திருமகளுடன்

திருக்கோவலூர் இடைகழியில் நின்றாய்; வாசலிலும் வரவில்லை, உள்ளேயும் புகவில்லை. என்னிடம் கொண்ட பிரேமத்தால் அங்கேயே நின்றாய்.

முந்தைய பாசுரத்தில் ஆழ்வார் தமது திருவுள்ளத்தைக் குறித்து, ''பெருமானை அனுபவிக்கவில்லையே'' என்று கூற திருமால் பிராட்டியுடன் இவர் இருந்த இடைகழிக்கே வந்து நின்றான். எம்பெருமான் அலர்மேல் மங்கையுறை மார்பனாகப் பிராட்டியுடன் நின்ற கோலத்தில் வந்திருந்ததால், வந்தவன் வேங்கடவனே எனக்கொள்ளலாம்.

பக்தர்களுடன் கலந்த மகிழ்ச்சியால் திருமால் இடைகழியில் நின்றான். ''காமுகர்கள் உகந்த விஷயத்தினுடைய கண்வட்டம் விட்டுப் போக மாட்டாதாப் போலே'' என்பார் உரையாசிரியர்.

முதலாழ்வார்கள் சந்தித்து, திருமாலைக் கண்டு அருந்தமிழில் அந்தாதி பாடியதை, வில்லிப்புத்தூராரின் திருமகனார் வரந்தருவார் இங்ஙனம் போற்றிப் புகழ்வர்:

''பாவரும் தமிழால் பேர்பெறு பனுவல்
  பாவலர் பாதிநாள் இரவில்
மூவரும் நெருக்கி மொழிவிளக்கு ஏற்றி
  முகுந்தனைத் தொழுத நன்னாடு''

பனுவல் = நூல், அந்தாதி; பாவலர் = பாடவல்லவர்; மூவர் = ஆழ்வார்கள்; நன்னாடு = இங்கு, திருக்கோவலூர்.

இப்பாட்லை ஒட்டியே ''மூவர் கூடுதலும், முகுந்தனைப் பாடுதலும்'' என்று நம் தலைப்பும் இங்கே அமைந்தது.

திருக்கோவலூரை மங்களாசாஸனம் செய்யும் ஒரு பெரிய திருமொழிப்பாசுரம் முதலாழ்வார்களைக் குறிப்பிடுவதாக பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் கூறுகிறார். திருமங்கையாழ்வார் பாடிய ''தாங்கரும் போர்'' என்று தொடங்கும் பாசுரத்திலுள்ள சில வரிகள் இவை.

''அடியவர்க்கு ஆரமுதம் ஆனான் தன்னை...
குழாவரி வண்டு இசைபாடும் பாடல் கேட்டு
தீங்கரும்பு கண்வளரும் கழனி சூழ்ந்த
திருக்கோவலூர் அதனுள் கண்டேன் நானே!'' (2.10.4)

**அடியவர்க்கு ஆரமுதம் ஆனான்:**

அடியவர்கள் என்றது முதலாழ்வார்களை. அவர்கட்கு ''தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகித்'' தித்தித்தவன் இத்தலத்து எம்பிரான்.

**திருக்கோவலூர் தீங்கரும்பு:**

இங்கு தீங்கரும்பாகச் சொன்னது திருக்கோவலூர் திரிவிக்ரமப் பெருமாளை. குழாவரி வண்டிசை பாடும் பாடலாவது, முதலாழ்வார்கள் பாடிய மூன்று திருவந்தாதிகள். இந்த அந்தாதி இசை கேட்டு, திருக்கோவலூர் தீங்கரும்பாகிய திருவேங்கடமுடையான் கண்ணுறங்குமாம். முதலாழ்வார்கள் பாடிய அந்தாதிகளில் மிக அதிகமாகத் திருவேங்கடவன் திருநாமமே அடிபடுவதால் இங்ஙனம் கொள்ளத் தடையில்லை. வண்டுகளை மூன்று ஆழ்வார்களாகக் கொள்ளலாம்.

**ஐதிகம்:**

ஸ்ரீ வேதாந்த தேசிகர் அருளிச் செய்த ''தேஹளீச ஸ்துதி'' ஏழாவது சுலோகத்தில் முதல் மூன்று ஆழ்வார்களைக் கரும்பு பிழியும் சர்க்கரை ஆலையின் மூன்று உருளைகளாகவும், அவர்களால் நெருக்கப்பட்ட திருமாலைத் தீங்கரும்பாகவும், எம்பெருமானின் சௌலப்ய குணத்தைச் சாறாகவும் கூறப்பட்டிருக்கிறது. இந்த அற்புதமான உவமைக்கு மேற்கூறிய திருமங்கையாழ்வார் பாசுரம் அடிப்படையாக அமைந்திருக்க வேண்டும் என்று சுப்பு ரெட்டியார் கருதுகிறார்.

**ஸ்ரீ பூதத்தாழ்வார் திருவடிகளே சரணம்.**

# 11. முதலாழ்வார்கள் தனியன்கள்

*'தனியன்' என்பது தனிப்பாடல், பிரபந்தத்தில் சேராதது. பின் தோன்றிய வைணவ ஆசாரியர் ஒருவரால், பிரபந்தத்தை இயற்றிய ஆழ்வாரின் பெருமையைக் கூறும் வகையில் இயற்றப்பட்ட பாடல்.*

## ஸ்ரீ பொய்கையாழ்வார் திவ்யப்ரபந்தத் தனியன்

**(முதலியாண்டான் அருளிச்செய்தது)**

கைதைசேர் பூம்பொழில் சூழ் கச்சிநகர் வந்துதித்த
பொய்கைப்பிரான் கவிஞர் போரேறு - வையத்து
அடியவர்கள் வாழ அருந்தமிழ் நூற்றந்தாதி
படிவிளங்கச் செய்தான் பரிந்து.

*கைதை = தாழை, வயல்கள்; போர் ஏறு = ரிஷபம் போன்றவர், சிறந்தவர், தலைவர்; வையத்து = பூமியிலே; படி = பூமி; பரிந்து = அனைவரும் மோட்சமடைய வேண்டும் என்னும் அன்புடனே.*

**பொருள்:**

*தாழைகள் (வயல்கள்) நிறைந்த, பூஞ்சோலைகள் சூழ்ந்த காஞ்சிபுரத்தில் கவிகளுள் சிறந்த பொய்கையாழ்வார் அவதரித்தார். பூமியில் வாழும் பக்தர்கள் பகவானை அனுபவித்து உய்வடைய வேண்டும் என்ற பரிவினாலே, அருமையான தமிழில் நூறு அந்தாதிப் பாசுரங்கள் கொண்ட பிரபந்தத்தை அருளிச் செய்தார்.*

**கைதைசேர் பூம்பொழில் சூழ்:**

திருவெஃகா என்னும் திவ்வியதேசத்தின் தீர்த்த மேன்மையாலும் அழகிய பொழில்கள் காஞ்சியில் பொலிகின்றதாம்.

**கச்சிநகர் வந்துதித்த பொய்கைப்பிரான்:**

வந்து = வைகுண்டத்திலிருந்து எழுந்தருளி; திருமாலின் பாஞ்சசன்னியம் என்னும் சங்கின் அவதாரமே பொய்கையாழ்வார்.

**ப்ரபந்தரக்ஷை உரை:**

அந்நகரில் அந்தமில் பேரின்பத்து அடியாரான நித்யசூரிகளில் ஒருவரான பாஞ்சசன்னியாழ்வாரே யதோக்தகாரியான எம்பெருமான் சன்னிதியருகிலே பரமபதநாதன் நியமிக்க யதோக்தகாரியாக (அவன் சொன்னபடி செய்பவராக) அவதரிக்க எழுந்தருளி ஒரு பொய்கையிலே பொற்றாமரையிலே தோன்றினார். ஆகையால் இவர்க்குப் பொய்கையாழ்வார் என வழங்கும் திருநாமம்.

**பொய்கைப் பிரான்:**

பிரான் = ஈசுவரன், பகவான்; 'தலைவன்' எனவும் கொள்ளலாம். மகாலட்சுமி தோன்றிய தாமரையில் அவதரித்தது மட்டுமின்றி, பெரிய பிராட்டியாரைப் போலவே இவரும் பிறர்படும் துன்பம் கண்டு மனமிரங்கி அருள்புரியும் இயல்புடையவர்; எனவே 'பிரான்' ஆனார். பொய்கையில் அவதரித்ததால் குளிர்ந்த மனமுடையவர்; தாமரையில் தோன்றியதால் குளிர்ச்சி, மணம் சேர்ந்தவர்.

**கவிஞர் போரேறு:**

வேதம் போல் கட்டளைகள் இடாமலும், புராணங்கள் போல் தோழனின் உபதேசம் செய்யாமலும், ஆதிகவியான வால்மீகியைப் போல் மனத்தைக் கவரும் தேன்மொழி போன்ற பிரபந்தம் இயற்றினார். அதிலும் சம்சாரத்தில் தள்ளும் சிருங்காரம் போன்றவை இல்லாமல், சாந்தி பிரதானமாய், மகா புருஷார்த்தமான, மோட்சத்தை அளிக்கக்கூடிய பகவதனுபவத்தில் மனத்தைச் செலுத்தும் பாடல்களை அருளிச் செய்ததால் ''கவிஞர் போரேறு'' ஆனார்.

இடைகழியில் எம்பெருமானால் நெருக்கமுற்ற முதலாழ்வார்கள் மூவரில் இவரே முதலில் விரைந்து கவி பாடியதாலும், இவர் நடையைப் பின்பற்றியே மற்ற இருவரும் அருளிச் செய்ததாலும், இவரே கவிஞரில் ஏறு எனப்பட்டார்.

**வையத்து அடியவர்கள் வாழ:**

பக்தர்கள் எங்கும், எப்பொழுதும் வாழ்வாங்கு வாழும் பொருட்டு.

**அருந்தமிழ் நூற்றந்தாதி:**

அருமை தமிழுக்கு மட்டுமின்றி நூற்றந்நாதிக்கும் பொருந்தும். அந்தாதி = அந்தம் + ஆதி. ஒரு பாடலின் கடைசிச் சொல், அடுத்த பாடலின் முதற் சொல்லாக வரும் நூல் அந்தாதியாகும். இங்கே அந்தாதியாகச் சொன்னது சங்கலித் தொடர் போல் பொருளிலும் ஒன்றோடொன்று சேர்ந்தமை குறித்தே.

**படிவிளங்க:**

வேதங்களைக் கற்றும், கர்மம், யோகம் முதலியவற்றை அனுஷ்டித்தும், பரமபதம் சென்றும் பெறப்படுபவை யாவும் இவ்வொரு பிரபந்தத்திலிருந்தே விளங்கும் என்க. படி = மேனி; பெருமானுடைய திருமேனியை நன்கு விளங்கச் செய்தார் என்றுமாம்.

**பரிந்து:**

பகவானிடம் இருந்த பரிவினால் பக்தி பிரவாகமாகச் செய்தார். அல்லது, உலகினர் படும் துன்பத்தைக் கண்டு பரிதபித்துப் பரமகிருபையாலே அதனிடம் பரிந்து செய்தார். இதனால் இவர் ஆப்தர் என்பது தெரிகிறது. ''ஆப்தராவார் தத்துவசாக்ஷாத்காரம் (மெய்ப்பொருள் காட்சி) செய்தவர், பிறர் துயரம் கண்டு துடித்து நீக்க முயல்பவர், அதனால் அறிந்தபடி மறைக்காமல் உபதேசிப்பவர்'' என்கிறது நியாயபாஷ்யம்.

***ஸ்ரீ பூதத்தாழ்வார் திவ்யப்ரபந்த தனியன்:***
***(திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிச் செய்தது)***

என் பிறவி தீர இறைஞ்சினேன் இன்னமுதா
அன்பே தகளி அளித்தானை - நன்புகழ்சேர்
சீதத்தார் முத்துக்கள் சேரும் கடன்மல்லைப்
பூதத்தார் பொன்னங் கழல்.

இறைஞ்சினேன் = வணங்கினேன்; இன்னமுதா = இன்அமுது ஆ = இனிய அமிருதமாகிய; சீதத்தார் = சீதத்து ஆர் = குளிர்ச்சி நிறைந்த; பொன்னங்கழல் = அழகிய திருவடிகள்.

**பொருள்:**

எனது பிறவி நோய் தீருவதற்காகப் பூதத்தாழ்வாருடைய ஆசைப்படக்கூடிய, அழகிய திருவடிகளை வணங்கினேன். இவர் தெவிட்டாத, இனிய அமிருதமாகிய ''அன்பே தகளியா'' என்று தொடங்கும் நூறு அந்தாதிப் பாசுரங்கள் அடங்கிய இரண்டாம் திருவந்தாதிப் பிரபந்தத்தை அளித்தவர். பரஞானத்தால் நல்ல புகழ் வாய்ந்தவர். முத்துக்கள் கடல்கரையில் சேரும் திருக்கடன்மல்லை (மகாபலிபுரம்) என்கிற திவ்விய தேசத்தில் அவதரித்தவர்.

**முத்துக்கள் சேரும் கடன்மல்லை:**

பேரருளாளனான திருமாலும், அத்தகையவருமேயான பூதத்தாழ்வாரும் தோன்றிய திவ்ய தேசமாகையால் கடன்மல்லையில் முத்துக்கள் தாமே சேர்ந்தன எனலாம். முத்துக்களைப்போல் தலைசிறந்த முத்தர்கள் (பக்தர்கள்) அங்கு குவிந்து இருப்பர் எனவும் கூறலாம். முக்தர் (முக்தியடைந்தவர்) என்பது தமிழில் 'முத்தர்' என்றாகும்.

'ஆழ்வார்' என்ற சொல் 'ஆழ்தல்' என்பதிலிருந்தே தோன்றியது. ஸ்ரீமந் நாராயணனுடைய திவ்விய கல்யாண குணங்கள், மகிமைகள் என்னும் திருப்பாற்கடலிலே மூழ்கித் திளைத்து, ஆழங்காற்பட்டு, தரையைக் கண்டு, முத்துக்களைப் போன்ற பாசுரங்களை எடுத்து வந்து நமக்கு வழங்கியவர்களே ஆழ்வார்கள். எனவே இரண்டாம் திருவந்தாதியிலுள்ள நூறு முத்துக்கள் போன்ற அருந்தமிழ்ப் பாசுரங்கள் கரைசேர்ந்த இடமே திருக்கடன்மல்லை.

***ஸ்ரீ பேயாழ்வார் திவ்யப்ரபந்த தனியன்***
***(திருக்குருகைக் காவலப்பன் அருளியது)***

**சீராரும் மாடத் திருக்கோவலூர் அதனுள்**
**காரார் கருமுகிலைக் காணப்புக்கு - ஓராத்**
**திருக்கண்டேன் என்று உரைத்த சீரான் கழலே**
**உரைக் கண்டாய் நெஞ்சே! உகந்து.**

சீராரும் = சீர் ஆரும் = குணங்கள் நிறைந்த, சீர்மை பொருந்திய; அதனுள் = இடைகழி அதனுள்; காரார் = கார் ஆர் = மழைக்காலத்தில் பரவும்; கருமுகில் = நீலமேகம் (போன்ற திருமால்); ஓரா = ஆழ்ந்து ஆராய்ந்து; கழல் = திருவடி; உரை கண்டாய் = உரைப்பாயாக, பேசுவாயாக.

**பொருள்:**

என் நெஞ்சமே! அழகான மாடங்களையுடைய திருக்கோவலூர் என்னும் திவ்விய தேசத்தில், ஓர் இடைகழியில், மழைக்காலத்தில் பரவும் கரிய மேகம் போன்ற நாராயணனை சேவிப்பதற்காகப் புகுந்து, அகக்கண்ணால் அவனை ஆழ்ந்து அனுபவித்து, 'திருக்கண்டேன்' என்று தொடங்கும் திருவந்தாதியைப் பாடியருளிய சிறந்த குணங்கள் வாய்ந்த பேயாழ்வாரின் திருவடிகளையே மகிழ்ந்து பேசுவாயாக.

**ஸ்ரீபேயாழ்வார் திருவடிகளே சரணம்**

# 12. வேங்கடவன்தமர் ஏற்றிய வேதவிளக்கு

மாமயிலைப் பதியதனில் துலா மாதத்தில்
வரும் சதயத்து அவதரித்துக் கோவலூரில்
தூமுனிவர் இருவருடன் துலங்க நின்று
துன்னிய பேரிருள் நீங்கச் சோதி தோன்ற
சேமமுடன் நெடுமாலைக் காணப் புக்குத்
திருக்கண்டேன் என உரைத்த தேவே! உன்றன்-
பாமருவு தமிழ்மாலை நூறு பாட்டும்
பழவடியேனுக்கு அருள்செய் பரம நீயே,
(பிரபந்த சாரம், 4)

*துலா மாதம் = ஐப்பசி; தூமுனிவர் இருவருடன் = பொய்கையார், பூதத்தார் ஆகிய தூய முனிவருடன்; திருக்கண்டேன் என = ''திருக்கண்டேன்'' என்று துவங்கும்; தேவே, பரம = பேயாழ்வார்;*

*ஸ்ரீ வேதாந்த தேசிகர் பேயாழ்வாரைப் போற்றி அருளிய பிரபந்த சாரப் பாசுரமிது. திருக்கோவலூரில் முதலாழ்வார்கள் சந்தித்ததையே பேசுகிறது. அடுத்தடுத்த நாட்களில், அடுத்தடுத்த நட்சத்திரங்களில் அவதரித்த முதலாழ்வார்கள், ஒரே இரவில் அடுத்தடுத்து திருமாலைக் குறித்து தலா நூறு பாசுரங்கள் திருக்கோவலூரில் இயற்றியது குறிப்பிடத்தக்கது.*

*முதலாழ்வார்கள் முதற்பாசுரங்கள் மிகவும் பிரசித்தி பெற்றவை; சொல்லிலும், பொருளிலும் கோர்வையாக*

அமைந்தவை, ஒத்தவை. எனவே ''வையந்தகளி'' என்று தொடங்கும் பொய்கையார் பாசுரம்; ''அன்பே தகளி'' என்று தொடங்கும் பூதத்தார் பாசுரம்; ''திருக்கண்டேன்'' என்று தொடங்கும் பேயாழ்வாரின் முதற்பாசுரம் ஆகியவற்றை இங்கு விரிவாகக் காண்போம்.

## ஆழ்வார்கள் அருளிச்செயல் வேதசாரமானவை

வேதம் உரைத்த சம்ஸ்கிருத ரிஷிகளைக் காட்டிலும் ''உயர்வற உயர்நலம்'' உடையவர்கள் ''மயர்வற மதிநலம்'' அருளப்பெற்ற தமிழ் ஆழ்வார்கள். விசுவாமித்திரர் போன்ற வேதகால ரிஷிகள் பெற்ற ஞானம் தங்கள் சுயமுயற்சியால் வந்தது. இதற்கு மாறாக, ஆழ்வார்கள் பெற்ற ஞானம் பரம்பொருளாகிய நாராயணனின் பரம கிருபையாலே பெறப்பட்டது; எனவே இது குறைவற்ற பரிபூரண ஞானம். வேதங்களில் சரிவர விளக்கப்படாத, சந்தேகம் ஏற்படக்கூடிய விஷயங்களை, ஆழ்வார்களின் பாசுரங்களிலிருந்து தெளிவாக அறியலாம். எனவே ஆழ்வார்கள் பிரபந்தங்களை ஓதி ''தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோம்'' என்று வியந்து பேசுகிறார் ஸ்ரீ வேதாந்த தேசிகர்.

திருக்கோவலூர் இடைகழியில் முதலாழ்வார்கள் ஏற்றிய ஞானத்தமிழ் விளக்கின் ஒளியில் ஈடுபட்டு அவர்களை ஸ்ரீதேசிகன் புகழ்ந்தருளின பாசுரமாவது:

> ''பாட்டுக்குரிய பழையவர் மூவரைப் பண்டொருகால்
> மாட்டுக்கு அருள்தருமாயன் மலிந்து வருத்துதலால்
> நாட்டுக்கு இருள்செக நான்மறை அந்தி நடைவிளங்க
> வீட்டுக்கு இடைகழிக்கே வெளிகாட்டும் இம்மெய்விளக்கே''.

பழையவர் = முதலாழ்வார்கள்; பண்டு ஒருகால் = முன்னொரு முறை; மாடு = ஆத்மா, ஜீவன், பசு; மலிந்து = அதிகமாக; இருள்செக = அஞ்ஞான இருள் நீங்க; நான்மறை அந்தி = வேதாந்தம்; நடை = வழி; வெளி = உபாயங்கள்.

**ப்ரபந்தரக்ஷை உரை:**

மனிதர்களை மட்டுமின்றி மாடுகளையும் காக்க வேண்டுமென்று ஆயனாய் அவதரித்த மாயன் பரமகாருணிகன் தனக்கு மாடு = செல்வமாய், கௌத்துவ மணியாகின்ற சர்வ சம்சாரி சேதனர்களுக்கும் அருள் புரிய, அந்தணர் மாடான வேதம்

கொண்ட அச்சத்தை நீக்கி அருள் செய்ய நினைத்து ஒரு மாயை செய்வானாய் பண்டொருகால் மூவரை மலிந்து நெருக்கி வருத்தினான். அம்மூவராவார் ஆழ்வார்களிலே பழையவரானவர்... வடமொழியில் வால்மீகியைப் போல் செந்தமிழில் சிறப்புற்ற இவர்களிடையில் தான் புகுந்து இவன் நெருக்க, இவனுடைய சௌசீல்யத்திலும், சர்வ ஜன ரக்ஷணதீக்ஷையிலும் ஈடுபட்டு, மூன்று வேதாந்தங்களாலும் ஓதப்பட்ட தத்துவ ஹித புருஷார்த்தங்களாம் மூன்றை மூன்று ரஹஸ்யங்களின் பொருள்களைக் கூறவந்தன போலுள்ள மூன்று திவ்ய ப்ரபந்தங்களான திருவந்தாதிகளாலே வெளியிட்டனர் என்றபடி. இதனால் வீட்டின் இடைகழியில் வைக்கப்பட்ட விளக்கு வீட்டின் உட்புறங்களையும், வெளிப்புறங்களையும் விளக்குமாப் போலே, இம்மெய்விளக்குகள் மறைகளில் (வேதங்களில்) மறைந்துள்ள பொருள்களை விளங்கச் செய்தன.

பெண்ணையின் கரையிலே தோன்றிய கரும்பு போன்ற கண்ணனாம் அர்த்தப்ரம்மமானது இவ்வாழ்வார் மூவரில் நெருக்குண்டு, மூன்று ப்ரபந்தமென்னும் சப்தப்ரம்மமான சர்க்கரையாக மாறி, அவன் திருவடித் தாமரைத் தேனுக்கு தித்திப்பை மிகுத்துகிறது என்றனர் ஸ்ரீ தேசிகன்.

சகல வேதங்களின் சாரமானது வேதமாதா எனப்படும் காயத்ரீ மந்திரம். அதற்கும் தாயாயிருப்பது திருவெட்டெழுத்தாகிய நாராயண மந்திரம். அதற்கும் மூலமாயிருப்பது 'ஓம்' என்னும் பிரணவ மந்திரம்.

''நான்மறை அந்தி நடை விளங்க'' முதலாழ்வார்கள் அருளிச்செய்த திருவந்தாதிகளின் முதற் பாசுரங்களை, காயத்ரீ, எட்டெழுத்து, பிரணவ மந்திரங்களை உள்ளடக்கியவைகளாக விளக்க, கீழே முயற்சி செய்யப்பட்டுள்ளது. மேற்கூறிய மந்திரங்கள் அனைத்தும் மூன்று பதங்களாகப் பிரியக் கூடியவையாதலால், ஒவ்வொரு ஆழ்வார் பாசுரமும் ஒரு பதத்தைக் கூறுவதாக, கீழ்க்கண்டவாறு பொருள் கூறப்படும்:

| ஆழ்வார் பாசுரம் | பொய்கையார் வையந்தகளி | பூதத்தார் அன்பேதகளி | பேயார் திருக்கண்டேன் |
|---|---|---|---|
| பிரணவம் | அ | உ | ம |
| உலகம் | பூ: | புவ: | ஸுவ: |

| வேதம் | ரிக் | யசுர் | சாம |
|---|---|---|---|
| சாதனை | ச்ரவணம் | மனனம் | சாட்க்ஷாத்காரம் |
| பக்திநிலை | பரபக்தி | பரஞானம் | பரமபக்தி |
| திருமந்திரம் | ஓம் | நமோ | நாராயணாய |
| வேங்கடேச மந்திரம் | ஓம் | நமோ | வேங்கடேசாய |
| காயத்ரீ | தத் ஸவிதுர் வரேண்யம் | பர்கோ தேவஸ்ய தீமஹி | தியோ யோ ந: ப்ரசோதயாத் |
| நாராயண காயத்ரீ | நாராயணாய வித்மஹே | வாசுதேவாய தீமஹி | தன்னோ விஷ்ணு ப்ரசோதயாத் |

**பொய்கையாரின் "வையந்தகளி"**

வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக - செய்ய
சுடர் ஆழியான் அடிக்கே சூட்டினேன் சொல்மாலை
இடராழி நீங்குகவே என்று.

வையம் = பூவுலகம்; தகளி = அகல் (விளக்கு); வார் = நீண்ட; வெய்ய = வெப்பமான; செய்ய = சிவந்த; ஆழியான் = சுதர்சன சக்கரத்தை ஏந்தும் திருவேங்கடவன்; இடர் ஆழி = துன்பக்கடல்

**பாசுரத்தின் பொருள்:**

பூவுலகத்தை அகல் விளக்காகவும், நீண்ட கடலை நெய்யாகவும், வெப்பம் வீசும் கிரணங்களையுடைய சூரியனை விளக்காகவும் கொண்டு, இந்தச் சொல் மாலையை அமைத்தேன். சம்சாரம் என்னும் துன்பக்கடல் நீங்க வேண்டும் என முடிவு செய்து, இந்த சொல் மாலையை, சிவந்த சுடர்களை வீசும் சுதர்சனச் சக்கரத்தைக் கையிலேந்திய திருமாலாகிய திருவேங்கடமுடையானின் திருவடிகளிலே அலங்காரமாகச் சூட்டினேன்.

**வையந்தகளி விளக்குபவை:**

அகாரம், ஓம், பூ:, ரிக், தத் ஸவிதுர் வரேண்யம், நாராயணாய வித்மஹே.

**வையம்:**

நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களில் முதலில் தோன்றிய பாசுரமிது. 'ஓம்' என்பதை தமிழில் 'வோம்' என்று எழுதினாலும் உச்சரிப்பு அநேகமாக ஒன்றே; 'வையம்' என்பதை'வோம்' என்பதன் திரிபாகக் கொள்ளலாம். ஓங்காரத்திலிருந்து பிறந்ததே வையம் (உலகம்).

'வையம்' என்கிற சொல் வைகுந்தம், வெங்கடேசன் என்பவை போலவே வகாரத்தில் துவங்குகிறது. பொய்கையார் வேங்கடேச பக்தராகையால் வகாரத்தை முதலிட்டுப் பாடினார் போலும்.

'வையம்' என்றால் உலகம், பூவுலகு என்று பொருள். ருக் வேதத்திலிருந்து பூ: என்னும் சப்த விசேஷம் தோன்றியது என்பர். எனவே வையந்தகளி ருக் வேதம், பூ: இரண்டையும் குறிப்பதாகக் கொள்ளலாம்.

**அகாரம்:**

'ஓம்' என்கிற ப்ரணவம் அ, உ, ம என்று விரியும். வையம், வார்கடல், வெய்ய கதிரோன் போன்ற ஸ்தூலப் பொருட்களடங்கிய சகல ஜகத்துக்கும் காரணன் நாராயணன். இதுவே பாசுரத்தின் சாரம். அகாரம் பகவானாகிய நாராயணனின் முதல் திருநாமம்; எழுத்துக்களுக்கெல்லாம் காரணமாயிருக்கும். இரட்சிப்பதைக் குறிக்கும் 'அவ்' என்னும் வேர்ச் சொல்லிலிருந்து தோன்றியது. ஆகையால் அகாரத்தின் பொருளான நாராயணன் சர்வரட்சகன் என்பது பெறப்படும். வையத்தை உள்ளிருந்து இயக்கிக் காப்பாற்றுபவன் திருமால் என்பதை வையந்தகளி விளக்குவதால், இது அகாரார்த்தமாக அமைந்தது எனலாம்.

**சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொல்மாலை:**

'சூட்டினேன்' என்பதில் 'நான்' என்னும் சொல் மறைந்துள்ளது; ''நான் சூட்டினேன்'' என்று கூறத் தேவையில்லை. 'நான்' என்று கூறும் மகாரப் பொருளான ஜீவாத்மா, அகாரப் பொருளான நாராயணனுக்கு அடிமை என்கிற சேஷத்வத்தை ''சுடராழியான் அடிக்கே சூட்டினேன்'' என்பது கூறுகிறது. ப்ரணவத்திலுள்ள உகாரம் ஏவகாரம், தமிழில் 'ஏ' என்பது போன்றது. ''நாராயணனுக்கே நான் அடிமை'' என்பதே அ, உ, ம என்று விரியும் ஓங்காரத்தின் உட்பொருள். இதையே வையந்தகளி கூறுகிறது. ஏவகாரம் 'அடிக்கே' என்பதில் உள்ளது.

*இடராழி நீங்குகவே என்று:*

இடராழி = துன்பக்கடல், சம்சார வாழ்க்கை, அஞ்ஞான இருள், உலக ஆசைகளில் சிக்க வைக்கும் தமோ குணம், பாவங்கள். ''இடராழி நீங்குக'' என்பது வேங்கட பதத்தின் பொருளை நேரடியாக விளக்குகிறது. வேம் + கடம் = வேங்கடம். வேம் = எரிக்கப்படுகின்ற, நீக்கப்படுகின்ற, கடம் = பாவங்கள், இடராழி. இடராழியை நீக்குவது வேங்கடம்.

''இடராழி நீங்குக'' என்பது வேங்கட பதத்தின் பொருளாக அமைந்திருப்பதால், சுடராழியான் அடியை, திருவேங்கடவனின் அடியாகக் கொள்ளத் தடையில்லை. உலகனைத்தையும் தன் அடிக்குள் வைத்துத் திருமலையில் நிற்பதால் திருவேங்கடவனின் திருவடிக்குத் தனிச்சிறப்புண்டு. நம்மாழ்வாரும் ''திருவேங்கடத்தானே! புகலொன்றில்லா அடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே'' என்று ஏழுமலையானின் திருவடிகளிலேயே சரணமடைகிறார். ''வேங்கடவன் திருமலையை விரும்புமவன் வாழியே!'' என்கிறது பொய்கையாழ்வாரின் வாழித்திருநாமம்.

**பிரகலாதனின் ஒன்பதுவித பக்தி சாதனைகள்:**

மகாபாகவதராகிய பிரகலாதன் பகவானை நேரில் கண்டு பேரின்பமடைவதற்கு, ஒன்பது விதமான பக்தி சாதனைகளை நாம் கடைபிடிக்க வேண்டுமென்று விளக்குகிறார்:

**ச்ரவணம் கீர்த்தனம் விஷ்ணோ: ஸ்மரணம் பாதசேவனம்**
**அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம் ஸக்யம் ஆத்மநிவேதனம்.**

வையந்தகளி, அன்பேதகளி என்னும் முதலிரண்டு ஆழ்வார்களின் பாசுரங்கள் பிரகலாதன் கூறும் ஒன்பதுவித பக்தி சாதனைகளைக் குறிப்பிடுகின்றன; ''திருக்கண்டேன்'' என்னும் மூன்றாவது ஆழ்வாரின் பாசுரம் பகவானை நேரில் கண்ட பேரின்ப நிலையை விவரிக்கிறது.

''வையந்தகளி'' பாசுரத்தில் ''சொன்மாலை'' என்பது விஷ்ணோ: ச்ரவணம் (பகவானைப் பற்றிக் கேட்டல்), கீர்த்தனம் (அவன் புகழ் பாடுதல்); ''சுடராழியான் அடிக்கே சூட்டினேன்'' என்பது ஸ்மரணம் (பகவானை சதா நினைவு கூறுதல்); ''அடிக்கே'' என்பது வந்தனம், தாஸ்யம் (அடிமையாய் இருத்தல்),

*பாதஸேவனம்; சொன்மாலை சூட்டினேன் என்பது அர்ச்சனம் (பூஜித்தல்); ஆகியவற்றைக் குறிப்பிடும் வகையில் அமைந்துள்ளன.*

***காயத்ரீ மந்திரம்:***

ஓம் பூர்புவஸ்ஸுவ:
தத் ஸவிதுர் வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீமஹி
தியோ யோ ந: ப்ரசோதயாத்.

*பூ: புவ: ஸுவ: ஆகிய மூன்று சொற்கள் பூலோகம், புவர்லோகம், சுவர்க்கம் ஆகிய மூவுலகங்கள்.*

*ய: (யோ) = யார்; ந: = நம்முடைய; திய: = அறிவை; ப்ரசோதயாத் = தூண்டுகிறாரோ; தத் = அந்த; தேவஸ்ய = சுடருடைய; ஸவிதுர் = கடவுளின்; வரேண்யம் = மேலான; பர்க: = ஒளியை; தீமஹி: = தியானிப்போமாக.*

***காயத்ரீயின் பொருள்:***

*யார் நம் அறிவைத் தூண்டுகிறாரோ, அந்த சுடர்வீசும் கடவுளின் மேலான ஒளியைத் தியானிப்போமாக.*

*பிரம்ம காயத்ரீ அல்லது சூரிய காயத்ரீ எனப்படும் இதுவே பல்லாயிரம் ஆண்டுகளாக பாரத நாட்டின் தேசீயப் பிரார்த்தனையாக இருந்து வருகிறது. இதற்கு ரிஷி விசுவாமித்திரர்; தேவதை, ஸவிதா (சூரியன், பரமாத்மா).*

***தத் ஸவிதுர் வரேண்யம்:***

*வையந்தகளியில் பொய்கையாழ்வார் 'ஸவிதா'' என்பதை நேரடியாகத் தமிழில் 'கதிரோன்' என்று குறிப்பிட்டுள்ளதால், இப்பாசுரம் காயத்ரீ மந்திரத்தின் முதற்பதத்தை விளக்குவதாகக் கொள்ளலாம். ''தேவஸ்ய ஸவிதுர்'' (சுடருடைய கடவுளின்) என காயத்ரீயில் வருவதை ஆழ்வார் ''சுடர் ஆழியான்'' எனக் கூறுவதோடு ஒப்பிடலாம். ''தத் ஸவிதுர் வரேண்யம்'' என்பதே ரிக்வேதமானது.*

***விஷ்ணு காயத்ரீ:***

*மிகவும் பிரசித்தி பெற்ற காயத்ரீ மந்திரத்தையொட்டி, பற்பல இந்துமத தெய்வங்களுக்கும் உரிய காயத்ரீ மந்திரங்கள் தோன்றின. மஹா நாராயண உபநிஷதத்தில் விஷ்ணுவிற்குத் தரப்பட்டுள்ள நாராயாண காயத்ரீ இது:*

''நாராயணாய வித்மஹே, வாசுதேவாய தீமஹி
தன்னோ விஷ்ணு ப்ரசோதயாத்''

**பொருள்:**

நாராயணனை அறிவோமாக. அதற்காக, வாசுதேவனை தியானிப்போமாக. அந்த தியானத்தில், விஷ்ணு நம்மைத் தூண்டுவாராக.

**நாராயணாய வித்மஹே:**

உலகினர் நாராயணனை அறிந்து உய்வடைய வேண்டுமென்றே பொய்கையார் 'வையந்தகளி' என்று தொடங்கி நூறு பாசுரங்கள் அருளிச் செய்தார். ''சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொன்மாலை'' என்கிற அடியில் ''நாராயணனை அறிவோமாக'' என்னும் ஆழ்வாரின் நோக்கம் தெரிகிறது.

**வையந்தகளியின் இயற்கை வர்ணனை:**

காயத்ரீ மந்திரம் சூரியோதம், உச்சி, அஸ்தமனம் ஆகிய மூன்று சந்தி காலங்களிலும் ஜபிக்கப்படும். பொய்கையார் வைணவத்தின் விடிவெள்ளி போன்றவர். வையந்தகளி சூரியோதயத்தை வர்ணிப்பதுபோல் அமைந்துள்ளது.

திருவேங்கடமுடையானே, வேங்கடகிருஷ்ணன், பார்த்தஸாரதி என்கிற திருநாமங்களுடன் எழுந்தருளியிருக்கும் திவ்விய தேசம், சென்னையிலுள்ள திருவல்லிக்கேணி. முதலாழ்வார்கள் மூவரும் திருமழிசையாழ்வாருடன் இங்கு வந்து எம்பெருமானை சேவித்ததாகக் கூறுவர்.

திருவல்லிக்கேணியில் புகழ்பெற்ற மெரீனா கடற்கரையில் பொய்கையாழ்வாருடன் நாம் நின்று கொண்டிருப்பதாகக் கற்பனை செய்து கொள்வோம்! விடிகாலை, சூரியன் உதயமாகும் நேரம். நம் காலடியில் கடல்மண், வையம், பூமி. சற்று நிமிர்ந்து பார்த்தால் வார்கடல், விரிந்து, அலைபாயும் சமுத்திரம். கடல்பரப்பின் எல்லை வளைந்து தென்படுகிறது. மெதுவாக சூரியன், இளஞ்சிவப்பு நிறத்துடன், கடலின் மறுகோடியில் எழுகிறது. இந்த அற்புதமான இயற்கைக் காட்சியைத்தான் ஆழ்வார் சிறந்த உவமையாகப் பயன்படுத்தியுள்ளார்.

நம் காலுக்கடியிலுள்ள பூமி, மண்ணாலான அகல் விளக்கைப் போலுள்ளது; அதற்கு மேலேயுள்ள கடல், உருக்கிய நெய்போல் இளமஞ்சள் நிறத்துடன் காணப்படுகிறது. அதற்கும் மேலே, உதய சூரியன் விளக்கைப்போல் ஒளி வீசுகிறது. இந்த இயற்கைக் காட்சியில் ஒன்று கவனிக்க வேண்டும், திரி இல்லை! எனவே ''வையந்தகளி'' பாசுரத்திலும் திரி இல்லை; ஆனால் அடுத்து பூதத்தார் பாடிய ''அன்பே தகளி'' பாசுரத்தில் திரி உண்டு! எனவே ''வையந்தகளி'' விடிகாலையில் செய்யப்படும் சந்தியாவந்தனம் போன்றது.

## ஸ்ரீ வெங்கடேச சுப்ரபாதம்

பொய்கைப் பிரானுடன் நாம் மேற்கூறியபடி கண்டு அனுபவித்த சூரியோதயக் காட்சியுடன்தான், நாம் அனைவரும் மிக விரும்பிக் கேட்கும் ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதமும் துவங்குகிறது! காயத்ரீ மந்திரத்தின் ரிஷியான விசுவாமித்திரரே பாலசூரியனைப் போன்ற ஸ்ரீ ராமச்சந்திரனை, ''கௌசல்யா சுப்ரஜா ராம, பூர்வா சந்த்யா ப்ரவர்த்ததே'' (கோசலையின் உத்தம புத்திரனான ராமனே! கிழக்கில் சூரியன் உதயமாகிவிட்டது) என்று எழுப்பியதாக வால்மீகி ராமாயணம் கூறுகிறது. உலகிற்கு காயத்ரீயை உபதேசித்த விசுவாமித்திர ரிஷியே, ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதத்தின் முதலடியையும் நமக்கு வழங்கியிருக்கிறார்! தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச் செய்த திருப்பள்ளியெழுச்சியும்—

> ''கதிரவன் குணதிசைச் சிகரம் வந்து அணைந்தான்
> கன இருள் அகன்றது காலையம்பொழுதாய்''

என்று சூரியோதய வர்ணனையுடன் துவங்குவதும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

''பூர்வா சந்த்யா ப்ரவர்த்ததே'' என்பதை ''வையந்தகளியா, வார்கடலே நெய்யாக, வெய்ய கதிரோன் விளக்காக'' என்றும்; ''கௌசல்யா சுப்ரஜா ராம'' என்பதை ''செய்ய சுடராழியான்'' என்றும் ஆழ்வார் அருளிச் செய்திருப்பதாகக் கொள்ளலாம். வையந்தகளி ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதமாகிவிடுகிறது!

***பூதத்தாரின் "அன்பே தகளி":***

*பொய்கையாழ்வார் நூறு பாசுரங்கள் பாடி முடித்ததும், பூதத்தாழ்வார் ''அன்பே தகளி'' என்று பாடத் துவங்கினார்:*

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா - நன்புருகி
ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு
ஞானத்தமிழ் புரிந்த நான்.

*ஆர்வம் = பரபக்தி, பகவானது இயல்பு, குணங்கள் போன்றவற்றை நேரே காண வேணும் என்கிற ஆசை; இன்பு = இனிமை; நன்பு = ஞானம், ஞானமயமான ஆத்மாவைக் குறிப்பது.*

***பொருள்:***

*நாராயணனாகிய திருவேங்கடவனிடம் ஏற்பட்ட அன்பை அகலாகவும், பரபக்தி என்னும் ஆர்வத்தை நெய்யாகவும், இனிமையான பிரேமபக்தியால், உருகும் பகவத் சிந்தனையைத் திரியாகவும் கொண்டு, ஞானமயமான ஆத்மா கரைந்து கிளர்ந்தெரியும் ஞானதீபத்தை ஏற்றினேன், ஞானத்தை அளிக்கும் தமிழ்ப் பாசுரங்களை இயற்றிய நான்.*

***பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் விளக்கம்:***

*இந்த (பொய்கையாரின் வையந்தகளி) பாசுரத்தின் மகிமையால் அந்த இடைகழியில் பளிச்சென்று ஏதோ ஒரு திரை விலகி எப்படியோ ஒளியும் வந்து விடுகின்றது. புறத்தே கவிந்து கிடக்கும் இருளும் நீங்கி விடுகின்றது. அதே சமயத்தில் பூதத்தாழ்வாரும் ஞான விளக்கொன்றை ஏற்றுகின்றார். அன்பை அகலாகவும், பொங்கி வரும் ஆர்வத்தை நெய்யாகவும், சிந்தையைத் திரியாகவும் கொண்டு ஞான விளக்கை ஏற்றுகின்றார் பூதத்தார். இந்த விளக்கினால் அகத்தே மண்டிக்கிடந்த உள் இருட்டும் நீங்கி விடுகின்றது. உடனே அந்தப் பேயாழ்வார் நான்காவது ஆளைக் கண்டுபிடித்து விடுகின்றார்.*

***"அன்பே தகளி" விளக்குபவை:***

*அன்பேதகளி, உகாரம், நமோ (நம: பதம்), ''பர்கோ தேவஸ்ய தீமஹி'' என்கிற காயத்ரீ மந்திரத்தின் இரண்டாவதுபதம், வாசுதேவாய தீமஹி என்னும் பதம் ஆகியவற்றை விளக்குவதாக மேலே பட்டியலிட்டுக் காட்டினோம். இவற்றை இங்கு சற்று விரிவாகக் காண்போம்.*

*உகாரம்:*

உகாரம் ஏவகாரத்தின் அர்த்தத்திலே வந்துள்ளது. ஏவகாரம் என்பது தமிழில் 'ஏ' என்பது போன்றது. அ, உ, ம் என்று பிரியும் ஓங்காரத்தின் நடுவிலுள்ளது உகாரம். அகாரம், சர்வேசுவரனாகிய நாராயணனையும், மகாரம் ஜீவாத்மாவையும் குறிக்கின்றன; இவ்விரண்டும் ''நாராயாணனுக்கு ஜீவாத்மா அடிமை'' என்று பொருள்படும். இதில் உகாரம் ஏவகாரத்தைச் சேர்க்கிறது — ''நாராயணனுக்கே ஜீவாத்மா அடிமை'' என்று அடித்துக் கூறுகிறது. அன்பே தகளியில், ஆழ்வார் ''நாரணற்கு'' என்று கூறியிருப்பதை ''நாராயணனுக்கே, நாராயணனுக்கு மட்டுமே'' என்று பொருள் கொள்ளவேண்டும். எனவே அன்பேதகளி, உகார பத அர்த்தத்தை விளக்குகிறது எனலாம். உகாரத்தால் அந்நியசேஷத்வம் கழிக்கப்படுகிறது.

லக்ஷ்மியை நாராயணன் திருமார்பில் தரிக்கிறான். பிராட்டிக்கு 'உ' என்று திருநாமம். ''நாரணற்கு'' என்பதால் பிராட்டிக்கும் சேர்த்தே ஞானத்தமிழ் பாடியிருக்கிறார் பூதத்தார் என்று கூறத் தேவையில்லை. அடுத்துப் பாடிய பேயாழ்வார் ''திருக்கண்டேன்'' (லக்ஷ்மிப் பிராட்டியைக் கண்டேன்) என்றே துவங்குவதால் இது உறுதியாகிறது.

**நம: பதம்:**

''ஓம் நமோ நாராயணாய'', ஓம் நமோ வேங்கடேசாய'' என்னும் மந்திரங்களின் இரண்டாவது பதம். ம: என்றால் ''எனது'' என்கிற மமகாரம், ஆத்மா தனக்குரியது என்னும் செருக்கு. 'ந' என்றால் ''இல்லை'', மமகாரத்தை இல்லை என்கிறது. அகங்கார, மமகாரங்களே (யான், எனது என்னும் செருக்கு) ஆத்மாவுக்கு விரோதி.

அன்பே தகளியில், ''நாரணற்கு ஞானத்தமிழ் புரிந்த நான்'' என்று வருவதால் நான், எனது என்பதெல்லாம் நாராயணனுக்கே அடிமை என்பது தெளிவாகிறது. இது நம: பதார்த்தமாக உள்ளது எனலாம்.

நமப்பதம் சப்தத்தாலும், அர்த்தத்தாலும் உபாயத்தை அறிவிக்கிறது. நாராயணனே உபாயம் என்பது இதன் பொருள். இது ஸ்வசேஷத்தையும், பகவத் சேஷத்வத்வத்துக்கு இசையாமையையும் கழிக்கிறது (சேஷத்வம் = அடிமையாய் இருத்தல்).

**பர்கோ தேவஸ்ய தீமஹி:**

காயத்ரீ மந்திரத்தின் இரண்டாவது பதம். தேவஸ்ய = சுடருடைய (ஸவிது: = கடவுளின்; வரேண்யம் = மேலான) பர்க: ஒளியை; தீமஹி: = தியானிப்போமாக; ''சுடருடைய கடவுளின் மேலான ஒளியை தியானிப்போமாக'' என்பதே இதன் பொருள்.

அன்பேதகளியில், ஞானச்சுடர் = தேவஸ்ய, ஒளியுடைய; நாரணற்கு = ஸவிது:, கடவுளின்; விளக்கேற்றிய = பர்க;, ஒளியை.

''அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா - நன்புருகி''

என்னும் முதலிரண்டு அடிகள் = தீமஹி, தியானிப்போமாக என்று நேரடியாகப் பொருள்படுவது இன்புறத்தக்கது.

''பர்கோ தேவஸ்ய தீமஹி'' என்பதன் விளக்கமாகவே ''அன்பே தகளி'' அமைந்திருக்கிறது என்றால் மிகையாகாது.

**வாசுதேவாய தீமஹி:**

இது விஷ்ணு காயத்ரீயின் இரண்டாவது பதம். ''வாசுதேவனை தியானிப்போமாக'' என்று பொருள். மஹாநாராயண உபநிஷத்தில் வரும் நாராயண காயத்ரீக்கு உரையெழுதிய பட்டபாஸ்கரர், ''வாசுதேவன்'' என்பதற்கு ''எல்லா ஜீவராசிகளிலும் அந்தர்யாமியாக வசிப்பவன்'' என்று பொருள் கூறுகிறார்.

அன்பேதகளியில், பூதத்தாழ்வார் தமது இதயக்குகையிலே அந்தர்யாமியாக எழுந்தருளியிருக்கும் வாசுதேவனையே தியானித்து, ஞானச்சுடர் விளக்கேற்றினார் என்க.

**பிரகலாதன் விவரிக்கும் பக்தி சாதனைகள்:**

வையந்தகளியில் ''சுடராழியானடிக்கே சூட்டினேன்'' என்றார். திருவடியைப் பேசியதால் இது தாஸ்யம் ஆயிற்று. அன்பேதகளியில், ''நாரணற்கு'' என்றுள்ளது, திருவடி கூறப்படவில்லை. மற்றும், அன்பு, ஆர்வம், இன்புருகு சிந்தை ஆகிய சொற்கள் ''ஸக்யம்'' (பகவானிடம் நட்பு) என்னும் நெருங்கிய உறவைக் கூறுவது போலுள்ளன. ''நன்புருகி'' என்பது ஞானமயமான ஆத்மா பகவதனுபவத்தில் உருகுவதைக் குறிப்பிடுவதால், இது ''ஆத்ம நிவேதனம்'' ஆயிற்று.

எனவே வையந்தகளி பிரகலாதன் கூறும் சாதனைகளில் முதல் ஏழையும், அன்பேதகளி கடைசி இரண்டையும் பற்றிப் பேசுகின்றன.

**ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு:**

இதற்குப் ''ப்ரபந்தரக்ஷை'' உரை: நாரணன் விஷயமான விளக்கு நாராயண சப்தத்தின் பொருளான அவனது ஸ்வரூப ரூபகுண விபவாதிகளிலெங்கும் பரவுகின்றது பற்றி ''ஞானச்சுடர் விளக்கு'' என்றது. ஞானச்சுடர் என்பதற்கு ப்ரஞானமென்ற விளக்கு என்ற பொருள் முன்னோர் இசைந்ததன்று. ப்ரஞானம் நாரணனின் அனுக்ரஹத்தாலே தானே வருவதாம். அதை ஏற்றுவது வேறொருவராகார். அதற்கு வேண்டும் பரபக்தியை ஏற்றுகிறார் எல்லார் நெஞ்சிலும் ஆழ்வார். ''ஏற்றினேன்'' என்று இறந்த காலமாக ப்ரபந்தத்தின் தொடக்கத்திலேயே அருளினது ப்ரபந்தத்தை எம்பெருமான் நன்கு முடித்தருள்வது திண்ணமெனக் கண்டதனால் என்க.

பொய்கையாரின் ''வையந்தகளி'' பாசுரமும், பூதத்தாரின் ''அன்பே தகளி'' பாசுரமும் தகளி, நெய், விளக்கு ஆகியவற்றுடன் பக்தர்களுக்குக் கலங்கரை விளக்கம் போல் வழிகாட்டுகின்றன. இவ்விரண்டு ஒளிவீசும் பாசுரங்களையும் இங்கே ஒப்புநோக்குவோம்.

| **வையந்தகளி:** | **அன்பேதகளி:** |
|---|---|
| 1. புறவிளக்கு; சூரியனை விளக்காக்கியது. | அக விளக்கு; ஆத்மாவை விளக்காக்கியது. |
| 2. புறவிருளைக் களைகிறது. | அக இருளை அகற்றுகிறது. |
| 3. திரி இல்லாமலே விளக்கேற்றினார்! | சிந்தையையே திரியாகத் திரித்து விளக்கேற்றினார்! |
| 4. மறைமுகமாக ''சுடர் ஆழியான்'' என்றார். | நேரடியாக ''நாரணற்கு'' என்றார். |
| 5. பரபக்தியைக் கூறுகிறது; எனவே 'அடிக்கே' என்றார். | பரஞானத்தைக் கூறுகிறது; 'ஞானச்சுடர்' என்றார். |
| 6. தமிழ் பற்றிப் பேசவில்லை. | ''ஞானத்தமிழ்'' என்று தமிழ்த்தாய் வாழ்த்தாகவும் துவங்கினார். |

### பேயாழ்வாரின் "திருக்கண்டேன்":

பூதத்தாழ்வார் "அன்பேதகளி" என்று தொடங்கி நூறு பாசுரங்கள் பாடி முடித்ததும், மூன்றாவது ஆழ்வாராகிய பேயார் "திருக்கண்டேன்" என்று கம்பீரமாகத் துவங்கிப் பாடலானார்:

> திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
> அருக்கன் அணிநிறமும் கண்டேன் - செருக்கிளரும்
> பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
> என்னாழி வண்ணன்பால் இன்று.

திரு = ஸ்ரீ, மஹாலட்சுமி, பெரியபிராட்டியார்; அருக்கன் = சூரியன்; செரு = போர்; கிளரும் = கிளம்பும்; ஆழி = சுதர்சனச் சக்கரம்; புரிசங்கம் = வலம்புரிச் சங்கு, பாஞ்சசன்னியம்; ஆழிவண்ணன் = கடல்நிறக்கடவுள், விஷ்ணு.

### பொருள்:

என்னுடைய கடல்வண்ணனான ஸ்ரீநிவாஸனிடம் இன்றைய தினம் பெரிய பிராட்டியாரை சேவிக்கலானேன். பொன்னிறமான திருமேனியைக் கண்டேன். பிரகாசிக்கும் சூரியன் போன்ற அழகிய நிறத்தையும் கண்டேன். போர்க்களத்தில் சீறியெழுந்து செயல்படும் அழகிய சுதர்சனச் சக்கரத்தையும் கண்டேன். மற்ற திருக்கையில் வலம்புரிச் சங்கையும் சேவிக்கப் பெற்றேன்.

### ஆழ்வார்கள் அமுத நிலையம் உரை:

எல்லா உலகங்களும் சரீரமாகக் கொண்ட பெருமானைக் காணும் காட்சியிலே எல்லாவற்றையும் கண்ட ஆழ்வார் அன்பின் மிகுதியாலே அவனுடைய பெருமைக்குக் காரணமான சிலவற்றை "அது கண்டேன், இது கண்டேன்" என்கிறார்.

### பேராசிரியர் சுப்பு ரெட்டியார் உரை:

பேயாழ்வார் முதன் முதலாகப் பெரிய பிராட்டியாரின் அருள் வடிவத்தைக் காண்கின்றார்; பொன்மேனியையுடைய அன்னையாருடன் கூடிய எம்பெருமானின் மரகதத் திருமேனி இப்போது பொன்மேனியாகவே காட்சியளிக்கிறது. மரகத மலையில் உதித்து ஒளிவீசி வரும் இளஞாயிறு போலத்தோன்றி இருவரது ஒளியையும் — பொன் ஒளியும், மரகத ஒளியும் கலந்து ஒளிர்கின்ற அந்தக் கலப்பு ஒளியையும் — காண்கின்றார்; 'திகழும் அருக்கன் அணிநிறமும் கண்டேன்' என்பதால் இது பெறப்படுகின்றது. "இருவர் சேர்த்தியால் பிறந்த முதாய

சோபை'' என்பது பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியான விளக்கம்.

**'திருக்கண்டேன்' விளக்குபவை:**

மகாரம், ஸுவர்லோகம், சாமவேதம், காரண சரீரம், சத்துவகுணம், சாட்க்ஷாத்காரம், ஆனந்தம், ஈசுவரன், புருஷார்த்தம், ''தியோ யோ ந: ப்ரசோதயாத்'' என்னும் காயத்ரீ மந்திரத்தின் மூன்றாவது பதம், தன்னோ விஷ்ணு ப்ரசோதயாத், நாராயணாய, வேங்கடேசாய.

**மகாரம்:**

அ, உ, ம் என்று பிரியும் 'ஓம்' என்கிற பிரணவ மந்திரத்தின் மூன்றாவது எழுத்து. மகாரம் 'மந' என்ற தாதுவிலே தோன்றியது. இதற்கு ஞானம் என்று அர்த்தம். இதனால் ஆத்மா ஞானமயமானது என்றதாயிற்று. 'மநு' என்ற தாதுவும் மகாரத்துக்குக் காரணம். இதற்கு அறிதல் என்று பொருள்.

மகாரம் இருபத்தைந்தாம் எழுத்து. இதனால் இருபத்து நான்கு தத்வங்களான ப்ரக்ருதியைக் காட்டிலும், இருபத்தைந்தாம் தத்வமான ஆத்மா வேறுபட்டவன்; ஆனந்தமயமானவன் என்பது பெறப்படும்.

'திருக்கண்டேன்' பாசுரம் ஜீவாத்மா (இங்கே ஆழ்வார்) பரம புருஷார்த்தமாகிய பகவதனுபவத்தை நேரடியாக அறிந்து, ஆனந்தமடைவதாகக் கூறுவதால், மகாரத்தை விளக்குவதாயிற்று.

**சாமவேதம், ஸுவர்லோகம்:**

சாமவேதத்திலிருந்து ஸ்வ: என்னும் சப்த விசேஷம் பிறந்தது. ஸுவ: என்பது சுவர்க்க லோகம். எண்ணத்தைக் கடவுள்பால் செலுத்துவதே சுவர்க்க லோகமாகிறது. ஸ்ரீமந்நாராயணனை தரிசிப்பதே நிலையான சொர்க்க அனுபவம். 'திருக்கண்டேன்' இதையே விவரிக்கிறது. வைகுண்ட ஏகாதசியன்று பெருமாளைக் காணச் செல்லும் வழி ''சொர்க்கவாசல்'' எனப்படுவதை நாம் அறிவோம்.

சத்துவ குணம் மேலோங்கிய நிலையிலேயே ஸமாதி நிலையை மனம் அடைந்து, ஜகத்காரணனாகிய ஈசுவரனைக் கண்டு, பரமானந்தம் அடைய முடியும். இதுவே பகவத் சாட்க்ஷாத்காரம், மோட்சம் என்கிற புருஷார்த்தம். 'திருக்கண்டேன்'பாசுரம் சத்துவகுணம், காரணம், சாட்க்ஷாத்காரம்

(நேரில் இறைவனைக் காணுதல்), ஆனந்தம், ஈசுவரன், புருஷார்த்தம் ஆகியவற்றின் விளக்கமாகவே அமைந்திருக்கிறது என்பது நன்கு விளங்குகிறது.

**தியோ யோ ந: ப்ரசோதயாத்:**

''யார் நம்முடைய அறிவைத் தூண்டுகிறாரோ'' என்னும் பொருளுடைய காயத்ரீ மந்திரத்தின் மூன்றாவது பதம்.

**தன்னோ விஷ்ணு ப்ரசோதயாத்:**

அந்த தியானத்தில்; ந: = நம்மை; விஷ்ணு, ப்ரசோதயாத் = தூண்டுவாராக. இது விஷ்ணு காயத்ரீ மந்திரத்தின் மூன்றாவது பதம்.

ஈசுவரனாகிய மகாவிஷ்ணு பக்தனுக்கு இரங்கி, அவனது அறிவைத் தூண்டி, அருள் புரிந்தால்தான், எம்பெருமானுடைய திருக்காட்சி கிட்டும். இவ்விதமே ஆழ்வார் பகவதனுபவம் பெற்று 'திருக்கண்டேன்' பாடினார் என்க.

**நாராயணாய, வேங்கடேசாய:**

''ஓம் நமோ நாராயணாய,'' ''ஓம் நமோ வேங்கடேசாய'' என்னும் மந்திரங்களின் கடைப்பதம். நாராயண = நார + அயந. 'நார' என்றால் 'அழியாத பொருள்களின் கூட்டம்; அயந = ஆதாரம். நாரங்களுக்கெல்லாம் அந்தர்யாமியாய் வியாபித்து ஆதாரமாய் இருப்பவன் நாராயணன். நாராயணாய என்பது நான்காம் வேற்றுமை, பிரார்த்தனைப் பொருளில் வந்தது.

''ஓம் நமோ நாராயணாய'' என்னும் திருமந்திரம் ''சர்வகாரணனாய் சர்வரக்ஷகனான எம்பெருமானுக்கே உரியவனான நான் சர்வசேஷியான அந்நாராயணனுக்கே எல்லா அடிமைகளையும் செய்யப் பெற வேணும்'' என்று பொருள்படும் பிரார்த்தனை.

'திருக்கண்டேன்' பாசுரம் நாராயணன், பக்தர்களுக்கு எளியவனாய் தன்னை வெளிப்படுத்திக் காட்டுவதை விவரிக்கும் வகையில் அமைந்துள்ளதால் ''நாராயணாய'' என்பதன் விளக்கமாக உள்ளது எனலாம்.

திரு = அலர்மேல் மங்கை, மகாலட்சுமி, ஸ்ரீ; ஆழிவண்ணன்பால் = கடல்வண்ணக் கடவுளிடம்; கண்டேன்

என்பதால் ''ஸ்ரீநிவாஸனைக் கண்டேன்'' என்றாகிறது. ஸ்ரீமந்நாராயணன் சௌலப்யனாய் நமக்கெல்லாம் மிக எளியவனாகிக் காட்சி கொடுக்கும் அர்ச்சை நிலையே ஸ்ரீ வேங்கடேசன். எனவே ஸ்ரீநிவாஸ பத விளக்கமாக ''திருக்கண்டேன்'' அமைந்துள்ளது.

**விஷ்ணுவின் ஐவகை நிலைகள்:**

உலகங்களை நிர்வகிக்கும் பொருட்டு, ஸ்ரீமந்நாராயணன் பரத்வம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரம் என்று ஐவகை நிலைகளில் எழுந்தருளியிருக்கிறான். ''திருக்கண்டேன்'' பாசுரத்தில் பேயாழ்வார் ஐந்து முறை ''கண்டேன்'' என்று பேசியிருப்பதால், எம்பெருமானின் ஐவகை நிலைகளையுமே கண்டிருப்பார் என்றே தோன்றுகிறது. கீழ்ப்பாசுரங்களில் ஆழ்வார் எம்பெருமானின் ஐவகை நிலைகளையும் பன்முறை பேசியிருப்பதும் இங்கு நினைவு கூறத்தக்கது. திருவேங்கடத்தை மங்களாசாஸனம் செய்யும் ஒரு பாசுரத்தில் பேயாழ்வார் எம்பெருமானின் ஐந்து நிலைகளையும் குறிப்பிடுகிறார்.

பாற்கடலும் வேங்கடமும் பாம்பும் பனிவிசும்பும்
நூற்கடலும் நுண்ணூல தாமரைமேல் - பாற்பட்
டிருந்தார் மனமும் இடமாகக் கொண்டான்
குருந்தொசித்த கோபாலகன்.

*பாற்கடல் = திருப்பாற்கடல் = வியூக நிலை.*
*வேங்கடம் = அர்ச்சாவதார நிலை.*
*பனிவிசும்பு = வைகுந்தம் = பரத்வ நிலை.*
*மனம் = அந்தர்யாமித்வ நிலை.*
*கோபாலகன் = விபவம் (அவதார நிலை).*

எனவே ''திருக்கண்டேன்'' பாசுரமும் விஷ்ணுவின் ஐந்து நிலைகளையும் கூறுவதாகக் கீழே காண்போம்:

**திருக்கண்டேன்:**

திருநாட்டில் (வைகுந்தத்தில்) திருமகளுடன் திருமால் திருமாமணிமண்டபத்தில் எழுந்தருளியிருப்பதைக் கண்டேன்; பரத்வநிலை.

**பொன்மேனி கண்டேன்:**

பொன் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீ வேங்கடாசலபதியின் திருமேனியைக் கண்டேன்; அர்ச்சாவதார நிலை. ஸ்ரீயின் சேர்த்தியாலும் பொன்மேனி எனலாம்.

**அருக்கன் அணிநிறமும் கண்டேன்:**

சர்வ வியாபியாகிய சூரியனின் அழகிய ஏழு நிறங்களைக் கண்டேன்; எல்லா உயிர்களிலும் சூரிய நாராயணன் வியாபித்திருக்கும் அந்தர்யாமித்வ நிலை.

**பொன்னாழி கண்டேன்... என்னாழி வண்ணன்பால் இன்று:**

ஆழி = சக்கரம், கடல்; கடல் வண்ணனைக் கண்டதாகக் கூறுவதால், திருப்பாற்கடல் நாதனைக் குறிக்கிறது. இது வியூக நிலை.

**புரிசங்கங் கைக்கண்டேன்:**

பாஞ்சசன்னியம் ஊதிய பார்த்தஸாரதியைக் கண்டேன். அவதார நிலை.

**த்வய மந்திரம் அல்லது மந்த்ர ரத்னம்:**

> ''ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே;
> ஸ்ரீமதே நாராயணாய நம:''

என்பதே ஸ்ரீவைஷ்ணவத்தில் பிரசித்தி பெற்ற துவயமந்திரம். இரண்டு வாக்கியங்களால் ஆன துவயத்தை ஆசாரியர்கள் அனைவரும் ஆதரித்து, மந்த்ர ரத்னம் என்று பாராட்டினர்.

ஸ்ரீ என்றால் திரு, மகாலட்சுமி, பெரிய பிராட்டியார். எனவே ''ஸ்ரீயுடன் கூடிய நாராயணனின் திருவடிகளையே சரணமாகப் பற்றுகிறேன்; ஸ்ரீயுடன் கூடிய நாராயணனுக்கே தொண்டு செய்ய விரும்பி, வணங்குகிறேன்'' என்பதே துவயத்தின் பொருள். பூர்வ (முதல்) வாக்கியம் உபாயம் (வழி) எது என்பதையும், உத்தர (இரண்டாவது) வாக்கியம் உபேயம், ப்ராப்யம் (குறிக்கோள்) என்ன என்பதையும் காட்டுகின்றன.

## த்வயத்தின் மகிமை

ஸ்ரீ என்னும் மகாலட்சுமித் தாயார் அனைத்து ஜீவர்களுக்கும் அன்னை, கருணையே வடிவானவள், பக்தர்களுக்கு உடனே மனமிரங்கி, அருள்புரியும்படி, நாராயணனிடம் புருஷகாரம் (சிபாரிசு) செய்பவள். இவளுடைய பரிந்துரையை, பகவானால் தட்டிக் கழிக்க இயலாது. எனவே துவயமந்திரத்தை ஜபித்து, பிராட்டியை முன்னிட்டுச் சரணடைவதே, சுலபமாக உய்வடைய வழி. பிராட்டியே உபாயம் (வழி), பிராட்டியே உபேயம் (குறிக்கோள்). எனவே இவளை 'புருஷகார பூதை' என்பர்.

## திருவந்தாதிகள் துவயமந்திர சாரமானவை

முதலாழ்வார்களின் முதற்பாசுரங்கள் கீழ்க்கண்டவாறு துவய மந்திர சாரமானவை:

| ஆழ்வார் பாசுரம் | பேயார் திருக்கண்டேன் | பூதத்தார் அன்பேதகளி | பொய்கையார் வையந்தகளி |
|---|---|---|---|
| ஆழ்வார் வாக்கு | திரு | நாரணற்கு | அடிக்கே சூட்டினேன் |
| பூர்வ வாக்கியம் | ஸ்ரீமந் | நாராயண | சரணௌ சரணம் ப்ரபத்யே |
| உத்தர வாக்கியம் | ஸ்ரீமதே | நாராயணாய | நம: |

திருக்கண்டேன் பாசுரத்தில் வரும் 'திரு', ஸ்ரீமந், ஸ்ரீமதே என்பதையும்; அன்பேதகளியில் வரும் 'நாரணற்கு', நாராயண, நாராயணாய என்பதையும்; வையந்தகளியில் வரும் 'அடிக்கே சூட்டினேன்' என்பது 'சரணௌ (அடிகளை) சரணம் ப்ரபத்யே', நம: என்பதையும் குறிக்கும் வகையில் அமைந்துள்ளன. எனவே மூன்று இரத்தினங்கள் போன்ற இப்பாசுரங்களிலும், மந்திர இரத்தினமான துவயம் பரிமளிக்கிறது!

இதைத் தவிர முதலாழ்வார்கள் பற்பல பாசுரங்களில் 'திரு' என்று ஸ்ரீயுடன் சேர்த்தே ஸ்ரீநிவாஸனைப் பாடியிருக்கிறார்கள்.

## ஸ்ரீநிவாஸன் துவயமந்திர வடிவினன்

திருமலைக் கோயிலில் பிராட்டிக்குத் தனி சன்னிதி கிடையாது. ஸ்ரீநிவாஸனின் திருமார்பிலேயே அலர்மேல் மங்கைத்

தாயார் நித்தியவாசம் செய்கிறாள். திருமலையப்பன் அம்மையப்பன்! இதனால்தான் இவனை வழிபடுபவர்களுக்கு, கைம்மேல் பலன் உடனடியாகக் கிடைத்துவிடுகிறது! ஸ்ரீநிவாஸனை 'பாலாஜி' (பாலா என்பது தாயாரின் திருநாமம்) என்றாலே வடநாட்டில் தெரியும். அர்ச்சாவதார ரத்தினமான வேங்கடரத்தினம் மந்திர ரத்தினமான துவயவடிவினன் என்பதை ஆழ்வார் ரத்தினங்கள் மூவரும் நன்கு அறிந்திருந்தனர்! ஸ்ரீநிவாஸன் சிறப்பாக துவயமந்திரம் பொலியும் திருவடிவம் கொண்டவன் என்பதாலேயே முதலாழ்வார்கள் விஷ்ணுவின் அர்ச்சை நிலையில் இவனுக்கே முதலிடம் கொடுத்துப் பாடியிருக்கிறார்கள். பிழைக்கத் தெரிந்தவர்கள்!

**பரபக்தி, பரஞானம், பரமபக்தி:**

பொய்கையாரின் ''வையந்தகளி'' என்று தொடங்கும் முதல் திருவந்தாதி பரபக்தியையும்; பூதத்தாரின் ''அன்பே தகளி'' எனத்துவங்கும் இரண்டாம் திருவந்தாதி பரஞானத்தையும்; பேயாழ்வாரின் ''திருக்கண்டேன்'' என்று துவங்கும் மூன்றாம் திருவந்தாதி பரமபக்தியையும் சொல்வதாக சிலர் கொள்வர்.

**பேராசிரியர் சுப்புரெட்டியார் விளக்கம்:**

'பரபக்தி' என்பது எம்பெருமானை நேரில் காணவேண்டும் என்கிற ஆவல்; அவனை நேரில் காணல் 'பரஞானம்'. பின்பு மேன்மேலும் இடையறாது அனுபவிக்க வேண்டும் என்னும் ஆவல் 'பரமபக்தி'.

இவற்றை மற்றொரு விதமாகவும் பண்டைய ஆசிரியர்கள் விளக்குவர்:

எம்பெருமானோடு கலந்தபோது சகிக்கும்படியாகவும், பிரிந்தபோது துக்கிக்கும்படியாகவும் இருக்கும் நிலை 'பரபக்தி'.

எம்பெருமானுடைய முழுநிறைவு நேர்காட்சி 'பரஞானம்'.

அவனுடைய அனுபவம் பெறாவிடில் நீரைவிட்டுப் பிரிந்த மீன்போல மூச்சு அடங்கும்படி இருத்தல் 'பரமபக்தி'.

## முதலாழ்வார்களும், நமது நிலையும்

பரபக்தி, பரஞானம், பரமபக்தி ஆகிய மூன்று நிலைகளையும் முதலாழ்வார்கள் மட்டுமின்றி திருவேங்கடமுடையானின்

பக்தர்கள் அனைவருமே தகுதிக்கேற்றபடி சிறிதளவாவது அனுபவிக்கிறார்கள் எனலாம்!

சம்சார வாழ்க்கையில் உழன்று கொண்டிருந்தாலும், திருமலையின் பெருமையையும், ஏழுமலையானின் மகிமையையும் பூர்வஜன்ம புண்ணியத்தால் நாம் கேட்கிறோம். பூலோக வைகுந்தமாகிய திருமலைக்குச் சென்று ஸ்ரீநிவாஸனை தரிசிக்க வேண்டும் என்கிற ஆவல் நமக்கு எழ, ''திருவேங்கடம் அடை நெஞ்சமே!'' என்று திருமங்கையாழ்வாரைப் போல் உற்சாகத்துடன் கிளம்புகிறோம். இது லேசான பரபக்தி!

பிறகு திருமலைக்குச் சென்று, எப்படியாவது முண்டியடித்துக் கொண்டு, ஸ்ரீவேங்கடேசனை நொடிப்பொழுதாவது நேரில் காண்கிறோம். இது லேசான பரஞானம்!

ஆயினும் திருவேங்கடமுடையானை ஒருமுறை காண்பது திருப்தியளிப்பதில்லை. பின்பு மேன்மேலும் அவனை இடையறாது கண்டு அனுபவிக்க வேண்டும் என்கிற ஆவல் எழுகிறது. இது லேசான பரமபக்தி!

## ஞானம், பக்தி, சாக்ஷாத்காரம் (இறைக்காட்சி)

மூன்று திருவந்தாதிகளும் முறையே ஞான, பக்தி, சாக்ஷாத்காரங்களைப் பற்றியவை என்று பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்திருக்கிறார். 'ஞானச்சுடர்' என்பதற்கு 'பரமபக்தியாகிற விளக்கு' என்றது அவருரை. மூன்றாம் திருவந்தாதி அவதாரிகையிலும்—

''ஞானத்தைச் சொல்லுகிறது வையந்தகளி; ஞான விபாகமான பக்தியைச் சொல்லுகிறது அன்பே தகளி. பக்தியாலே சாக்ஷாத்கரித்தபடி சொல்லுகிறது இதில் (திருக்கண்டேன்)'' என அவர்தாமே அருளியுள்ளார்.

**ப்ரபந்தரக்ஷை உரை:**

இங்ஙனம் ஞான, பக்தி, ஸாக்ஷாத்காரங்களை இவர்கள் அருளிச் செய்கிறார்கள் என்றதைக் கொண்டு, ''பொய்கையாழ்வாருக்கு சாஸ்திரஞானம் மட்டுமேயுள்ளது. பூதத்தாழ்வாருக்கு அத்துடன் பக்தியும் சேர்ந்தது. பேயாழ்வாரே சாக்ஷாத்காரம் செய்தவர்' என்ற பாகுபாடு கொள்ள வேண்டா. மூவரும் மூன்றுமுள்ளவராயினும், அம்மூன்றும் முறையே

வரவேண்டியவை யாகையாலே நமக்கு அம்முறையை அறிவிக்கக் கருதி, அவரவர் அடைவதாக அவற்றை அருளினார்கள் என்பதே தத்துவம்.

திரிவிக்ரமன் திருவடியினின்று பெருகிய கங்கை மூன்றாகப் பிரிந்தது போல், அவன் விஷயமான இவர்களின் ப்ரபந்தம் மூன்று பிரிவுற்றதென்றார் ஸ்ரீதேசிகன்.

**ஆழ்வார்கள் அமுத நிலையம் உரை:**

இப்ரபந்தக் கர்த்தாக்கள் மூவராயினும் பொருள் ஒற்றுமை பற்றி இம்மூன்றும் ஒரு ப்ரபந்தமாகவே அமைகிறது. ஒரு வ்யாகரணத்திற்குப் பாணிநீ, காத்யாயனர், பதஞ்சலி ஆகிய மூவரும் கர்த்தாக்கள் ஆனாப்போலே, இப்ரபந்தங்களுக்கும் இம்முனிவர் மூவரும் கர்த்தாக்கள் என்று உரையாசிரியர் பணித்துள்ளார்.

**வேங்கடவன்தமர் ஏற்றிய வேதவிளக்கு:**

முதலாழ்வார்கள் ஸ்ரீநிவாஸப் பிரியர்களாகையால் அவர்களை 'வேங்கடவன்தமர்' எனலாம். அவர்கள் ஏற்றிய வையந்தகளி, அன்பேதகளி விளக்குகள் ''நான்மறை அந்தி நடை விளங்கச்'' செய்வதால் வேதவிளக்குகள் ஆயின.

திருமலைக்கே 'வேதகிரி' என்றொரு பெயருண்டு. ''வேங்கட வெற்பென விளங்கும் வேதவெற்பே'' (வெற்பு = மலை) என்று ஸ்ரீ தேசிகனும் அருளிச்செய்தார்.

திருவேங்கடவனையே ''உணர்வாரார் உன் பெருமை?... வேங்கடத்தாய்! நால்வேதப் பண்ணகத்தாய்!'' என்று ஸ்ரீ பொய்கையாரும்,

> ''வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும்
> பாதத்தான் பாதம் பயின்று''

என்று பூதத்தாரும், பேயாரும் பாடியுள்ளனர். வேதகிரி என்னும் குன்றின் மேலிட்ட வேத விளக்கே வேங்கடவன்.

இவற்றைக் கருதியே இங்கே, ''வேங்கடவன்தமர் ஏற்றிய வேதவிளக்கு'' என்னும் தலைப்பு அமைந்தது!

**ஸ்ரீ பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.**

# 13. வானரம் வணங்கும் வேங்கடம்

சமீப காலம்வரை, திருமலை என்றாலே வேங்கடேச பக்தர்களுக்கு அங்கே குரங்குகள் செய்யும் அட்டகாசங்களே நினைவுக்கு வரும்! வானர சேஷ்டைகளை நினைத்தே திருப்பாணாழ்வார் 'மந்திபாய் வடவேங்கடமாமலை' என்று மங்களாசாஸனம் செய்திருக்கிறார் போலிருக்கிறது. குரங்குகள் ஏழுமலையில் குதித்துக் களிப்பூட்டிய காலம் இன்று அநேகமாக மலையேறிவிட்டது எனலாம். குரங்குகளுக்கு பதில் குடில்களே திருமலையில் எங்கும் தென்படுகின்றன.

பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் பதினேழாவது நூற்றாண்டில் வாழ்ந்தவர். மாபெரும் ரங்கநாத பக்தரான இவர் திருவரங்கக் கலம்பகம், திருவரங்கத்து அந்தாதி, திருவரங்கத்து மாலை என்கிற சிறந்த நூல்களை இயற்றினார். திருவேங்கடவன் இவர் கனவில் தோன்றித் தன்னையும் பாடும்படி கட்டளையிட, அய்யங்கார் ''அரங்கனைப் பாடிய வாயால் குரங்கனைப் பாடுவேனோ?'' என்று அட்சியம் செய்தார். இதனால் கோபம் கொண்ட ஸ்ரீநிவாஸப் பெருமாள், 'கண்டமாலை' என்னும் கொடிய நோயை விளைவிக்க, அய்யங்கார் வேங்கடவனைப் பாடியதாக வரலாறு. இவர் 'திவ்விய கவி' எனப்படுவர்; இவர் இயற்றிய எட்டு நூல்கள் 'அஷ்டப்பிரபந்தம்' எனப்படும்.

'குரங்கன்' என்றே வேங்கடவனை அலட்சியம் செய்த திவ்வியகவி, அதற்குப் பரிகாரமாக வேங்கடத்துக் குரங்குகளையே பாடி, வானத்தை வரம்பாக உடையது திருமலை என்று போற்றியுள்ளார். அற்புதமான கவிதை. 'கவி' என்று ஆண்

குரங்கிற்குத் தமிழில் பெயரும் உண்டு; 'கபி' என்னும் வடசொல், கவி என்றாகும்.

'திருவேங்கடத்து மாலை' என்னும் நூலில் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் காட்டும் வானரக் காட்சிகளைக் காண்போம்.

**"மண்மூலம் தா என்று மந்திகடுவற்குரைப்ப**
**விண்மூலம் கேட்டேங்கும் வேங்கடமே."** (25)

*மண்மூலம் = கிழங்கு; விண்மூலம் = மூல நட்சத்திரம்; மந்தி = பெண்குரங்கு. கடுவன் = ஆண்குரங்கு.*

*திருமலையில் வாழும் பெண்குரங்கு, தன் காதலனிடம் "மண்மூலம் தா!" என்று கேட்கிறது. அதாவது, "மண்ணிலிருக்கும் கிழங்கை அகழ்ந்தெடுத்து, எனக்கு உணவாகக் கொடு" என்கிறது. இதை 'விண்மூலம்', வானத்திலுள்ள மூல நட்சத்திரம் கேட்டு, தன்னைத்தான் மந்தி பிடித்துக் கொடுக்கச் சொல்வதாக நினைத்து, பயத்தால் நடுங்குகிறது.*

*திவ்விய கவியின் வருணனை, திவ்வியமான வருணனை! மூல நட்சத்திரத்தின் வரை உயர்ந்து வானளாவ நிற்கிறது திருமலை. எனவேதான் குரங்கு கேட்பது நட்சத்திரத்திற்குத் தெளிவாகக் கேட்டு விடுகிறது. 'ஆண்மூலம் அரசாளும்' என்பர். ஆண் குரங்கு மூல நட்சத்திரத்தில் அவதரித்தது போலும்! வேங்கடத்துக் கடுவன் நட்சத்திர நாயகர்களான தேவகணங்களும் அஞ்சத்தக்க அசாத்திய வலிமை படைத்தது என்பதும் தெரிகிறது!*

*மாம்பழம் போல் தித்திக்கும் இன்னொரு திருமலைக்காட்சியையும் திவ்விய கவி தீட்டியுள்ளார்:*

**"வாவுகவின் மந்திநுகர் மாங்கனிக்குக் கற்பகத்தின்**
**மேவுகவி கைநீட்டும் வேங்கடமே"** (42)

*வாவு = தாவிச்செல்லும்; கவின் = அழகிய; மேவு = பொருந்திய; கவி = கபி, ஆண்குரங்கு.*

*திருவேங்கடத்தில் பெண் குரங்கு மாமரத்தில் பழுத்துத் தொங்கும் தேமாங்கனியைப் பறித்து, தாவிச் செல்கின்றது. இதை தேவலோகத்தில் கற்பகத் தருவில் உட்கார்ந்திருக்கும் ஆண்குரங்கு பார்த்துவிடுகிறது; தனக்குத் தருமாறு அங்கேயிருந்து கையை நீட்டுகின்றது!*

திவ்விய கவி இங்கே மறைமுகமாகக் கூறுவது: திருமலை, தேவலோகம் வரை உயர்ந்து நிற்கிறது. கற்பக மரத்தின் பழத்தைவிட, வேங்கடத்தில் மந்தி பறித்த மாம்பழம் சுவையானது, பரம போக்யமானது. எனவே தேவலோகத்தையும் விட உயர்ந்தது பூலோக வைகுண்டமாகிய திருமலை.

'குரங்கன்' என்று ஏழுமலையானை இகழ்ந்தவர், அவன் அருளைப் பெற்றதும், அரங்கனை விடவும் உயர்வாகப் புகழ்ந்து பாடிவிட்டார் போல் தோன்றுகிறது. 'வானர வம்பன்' என்பது போல் வேங்கடவனை நிந்தனை செய்த பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் 'வான வரம்பன்' ஆகவே அவனை வந்தனையும் செய்து விடுகிறார்! அரங்கனுக்கும், வேங்கடவனுக்கும் இடையே மூர்த்திபேதம் இல்லை என்பதை நேரடியாக உணர்ந்தவர் நம் திவ்விய கவி.

அய்யங்காரின் திவ்விய கவிதை மாந்தோப்பில் இரண்டு மாங்கனிகளைப் பறித்துச் சுவைத்த நம்முடைய 'மனம் என்னும் மாயக்குரங்கு' அடுத்து ஆழ்வார்களின் பக்திப்பூங்காவில் தாவிக் குதிக்கிறது! பக்தி ரசம் சொட்டும் ஞானப்பழங்கள் நாலாயிரத்தின் ஜன்மபூமிக்கு அல்லவா வந்துவிட்டோம்? வந்த இடத்தில் வேண்டிய சரக்கிற்குப் பஞ்சமேயில்லை என்பதை அறிந்து, இதற்குமுன் ஆடிய களைப்புத் தீர, நம் மனக்குரங்கு சற்றே கண்ணயர்கிறது, பூதத்திருவடி என்னும் கற்பக மரத்தின் கிளையில். பளபளவென்று பொழுதும் புலர்ந்து விடுகிறது. இனி நம் மனக்குரங்கு என்ன செய்ய வேண்டும் என்பதை பூதத்தாழ்வாரே கூறுகிறார். ஆழ்வார் கூறுவதிலிருந்து நாம் வந்திருக்கும் இடம் திருமலையே என்பதையும் தெரிந்து இன்புருகு சிந்தையராகிறோம்!

## ஸ்ரீ பூதத்தாழ்வார்

**போது[1] அறிந்து வானரங்கள் பூஞ்சுனை புக்(கு) ஆங்கு அலர்ந்த**
**போது[2] அரிந்து கொண்டு ஏத்தும் போ(து) உள்ளம் - போதும்**
**மணிவேங் கடவன் மலரடிக்கே செல்ல**
**அணிவேங் கடவன் பேர் ஆய்ந்து. (72)**

போது[1] = விடியற்காலம், பொழுது; போது[2] = மலர்; அரிந்து = கொய்து; போதுள்ளம் உள்ளமே போ, புறப்படு; பேர் = திருநாமம்.

*பாசுரத்தின் பொருள்:*

திருமலைக் குரங்குகள் பொழுது விடிந்ததை அறிந்து, சுவாமி புஷ்கரிணி, பாபநாசம் அருவி, பூஞ்சுனைகள் போன்ற தீர்த்தங்களில் புகுந்து நீராடும். அப்போதே நீர்நிலைகளில் அன்றலர்ந்த புத்தம்புதிய பூக்களைப் பறித்துக்கொண்டு ஸ்ரீ வேங்கடேசனுக்கு சமர்ப்பித்துத் துதி செய்யும். என் மனமென்னும் மாயக்குரங்கே! நீயும் புறப்படுவாய். உலகத்திற்கு மணிமகுடம் வைத்ததுபோல் திகழும் திருமலையிலுள்ள ஸ்ரீ வேங்கடேசனின் சஹஸ்ரநாமங்களை ஓதிக்கொண்டு, திருவேங்கடவனுடைய திருவடித் தாமரைகளிலே சென்று சேரும்படியாக பூக்களை சமர்ப்பிக்கக் கடவாய்!

திருமலை வானரங்கள் அதிகாலையில் ஏழுமலையானை வணங்கி நிகழ்த்தும் ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாத சேவையை ஆழ்வார் அழகாகப் பாடியுள்ளார். ஆஞ்சநேயர் அவதரித்த அஞ்சனாத்ரி ஏழுமலைகளில் ஒன்று. சமீபத்தில் இம்மலைமீது அனுமாருக்குப் பெரிய சிலை வைக்கப்பட்டிருக்கிறது. எனவே அஞ்சனாத்ரி வானரங்கள் சிறிய திருவடியாகிய அனுமன் அடிச்சுவட்டில் வேங்கடராமனை வழிபடுவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. ஆழ்வார் அருளியபடியே, இன்று ஸ்ரீ வேங்கடேசன் சன்னிதிக்கு நேர் எதிரே, கோயிலுக்கு வெளியில், ஆஞ்சநேயரே கைகூப்பியபடி காட்சியளிக்கிறார்.

புனிதமான நம் பாரதபூமியில் பிறந்த குரங்கு, பசு, நாய் யானை போன்ற விலங்குகள் கூட கோயில்களிலும், மகான்கள் முன்பும் பயபக்தியுடன் நடந்து கொண்டதாக வரலாறுகளிலும், புராணங்களிலும் படிப்பதோடன்றிக் கண்கூடாகவும் நம்மில் பலர் பார்த்திருக்கிறோம். ஸ்ரீ ரமண மகரிஷியின் கையிலிருந்து குரங்கு பழத்தைப் பிரசாதமாகப் பெறும் புகைப்படம் இங்கு நினைவுக்கு வருகிறது.

அலைபாயும் நம் மனக்குரங்கிற்கு ஆழ்வார் சிறந்த உபதேசம் செய்துள்ளார். திருப்பதிக்குச் சென்றுதான் திருவேங்கடவனை சேவிக்க முடியும் என்பதில்லை. நாம் எங்கிருந்தாலும், காலையில் நீராடி, சுப்ரபாதம் முதலிய துதிபாடி, மானசீகமாகவே பகவான் திருவடிகளில் புஷ்பாஞ்சலி செய்து அவனை தியானிக்கலாம். இத்தகைய மானசீக பூஜையும், ஜபமுமே மிகச்சிறந்தன என்று சாஸ்திரங்கள் அனைத்துமே கூறுகின்றன. எனவே ஆழ்வார்

''சிந்தனை செய் மனமே, ஸ்ரீநிவாஸனை தினமே'' என்கிற கருத்தை இப்பாசுரத்தில் அருளிச் செய்துள்ளார். இதையொட்டியே ''வானரம் வணங்கும் வேங்கடம்'' என்கிற தலைப்பும் இங்கே எழுந்தது!

அடுத்து பேயாழ்வார் இரண்டு அற்புதமான திருமலை வானரக் காட்சிகளைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறார். இவையே திவ்விய கவியின் மேற்கூறிய பாடல்களுக்கு முன்னோடியாக அமைந்தவை. இப்பொழுது பூதத்தாழ்வார் என்னும் மாமரத்திலிருந்து நம்முடைய மனக்குரங்கு, பாய்ந்து ''பிடித்தாலும் பிடித்தான், புளியங்கொம்பாய்ப் பிடித்தான்'' என்று சொல்வார்களே, அதுபோலப் பேயாழ்வார் என்னும் ஆன்மீக புளியம்கொம்பைப் பிடித்து விடுகிறது!

## ஸ்ரீ பேயாழ்வார்

தெளிந்த சிலாதலத்தின் மேல் இருந்த மந்தி
அளிந்த கடுவனையே நோக்கி - விளங்கிய
வெண்மதியம் தா என்னும் வேங்கடமே! மேலொரு நாள்
மண்மதியில் கொண்டு உகந்தான் வாழ்வு. (58)

தெளிந்த = பளபளப்பான; சிலாதலம் = கற்பாறையின் தலம்; இங்கே படிகப்பாறை; மந்தி = பெண்குரங்கு; அளிந்த = அன்புடைய; கடுவன் = ஆண் குரங்கு; மதியம் = சந்திரன்; மண் மதியில் கொண்டு = பூமியை புத்தி சாதுர்யத்தினால் ஏற்றுக்கொண்டு.

**பாசுரத்தின் பொருள்:**

பளபளப்பான படிகப்பாறையின் மீது உட்கார்ந்திருக்கும் பெண்குரங்கு, தன்னிடம் காதல் கொண்ட ஆண் குரங்கை நோக்கி ''ஒளி வீசும் வெண்மையான பூர்ணசந்திரனைத் தா!'' என்று கேட்குமிடமே வேங்கடம். முன்னொரு காலத்தில், மூன்றடி மண்ணை புத்திசாதுர்யத்துடன் கேட்டு, மகாபலி சக்கரவர்த்தியிடமிருந்து அதை இன்னும் அதிசாமர்த்தியமாக உலகங்களையே மூன்றடியால் அளந்து எடுத்துக்கொண்டு திருப்தியடைந்த உலகளந்தப் பெருமாள் வாழுமிடம் இது!

**ப்ரபந்தரக்ஷை உரை:**

மந்திக்குச் சந்திரன் எதற்காக? கண்ணாடி போல பளபளப்பான வஸ்து என்றால் குரங்குக்கு அதில் ப்ரீதி (பிரிய

உண்டாவது இயற்கை. 'விளங்கிய வெண்மதியம்' என்ற அடைமொழியின் கருத்தைப் பெரிய வாச்சான்பிள்ளை கூறினது - ''சந்திரனுடைய மேற்புறமாகையினாலே களங்கமற்று உஜ்வலமாயிருந்துள்ள சந்திரமண்டலத்தை'' என்றவாறு. திருமலை சந்திரமண்டலத்திற்கு மேல் வளர்ந்திருப்பது என்றபடி. அளிந்த = ப்ரணயகலஹம் (ஊடல்) நீங்கத்தான் ஏதேனும் செய்ய விரும்பியது ஆண்குரங்கு. மதியின் கொண்டு = கேட்டதிலும் சாதுர்யம், கொண்ட வகையிலும் சாதுர்யம்.

வெண்மதியம் தா:

ஆஞ்சநேயர் அஞ்சனாத்ரி என்னும் திருமலையின் மீது பிறந்தவுடனேயே சூரியனைப் பழம் என்று நினைத்து அதைப்பிடிக்க ஆகாயத்தில் தாவினார். திருமலையில் பிறப்பவர்களின் ஆற்றல் அத்தகையது. ''நீயும் அதே மலையில் பிறந்து, அதன் மீதே வாழ்கிறாய். அனுமனைப்போல் சூரியனைப்பிடிக்கும் சக்தி இல்லாவிட்டாலும், உன்னால் குறைந்தபட்சம் வெகு அருகிலுள்ள சந்திரனையாவது பிடித்துத் தர முடியாதா?'' என்று ஆண்குரங்கிற்கு பலப்பரீட்சை வைக்கிறது மந்தி. இதைக்கேட்ட சந்திரன் நடுங்குகிறான், ''குரங்கு கையில் கிடைத்த பூமாலைபோல நம் கதியும் அதோகதி ஆகிவிடுமோ?'' என்று பயந்து. திருமலையின் உயர்வும், மகத்துவமும் அத்தகையது!

''வெண் மதியம் தா'' என்னும் பேயாழ்வாரின் கருத்தை மூலமாகக் கொண்டே, பிள்ளைப்பெருமாள் அய்யங்காரும்,

''மண்மூலம் தா என்று மந்தி கடுவற்குரைப்ப
விண்மூலம் கேட்டேங்கும் வேங்கடமே''

என்று பாடினார்.

திருமலையின் குரங்குகளுக்கே சந்திரனையும், மூலநட்சத்திரத்தையும் பிடித்துத் தரும் ஆற்றல் உண்டென்றால், அங்கெழுந்தருளியிருக்கும் வேங்கடவனுக்கு எத்தகைய சர்வசக்தி இருக்க வேண்டும்? எல்லா உலகங்களையும் காலால் அளந்து ''மண் மதியில் கொண்டு உகந்தான்'' ஆகத்தானே அவன் இருக்கமுடியும்? இவ்விதமே அற்புதமாகப் பாசுரத்தை முடித்திருக்கிறார் பேயார்! அனுமார் ஒரே தாவலாக இலங்கையைத் தாண்டியதுபோல, மந்தி, கடுவன் காட்சியை

விவரித்த ஆழ்வாரின் மனம் ஒரே அடியில் மலையுச்சிக்குப் போய்த் திருவேங்கடமுடையானையே சிக்கெனப் பிடித்து விடுகிறது! சந்திரனையும், சூரியனையும் பிடித்து என்ன பயன்? இவையனைத்தையும் படைத்த ஏழுமலையானின் திருவடிகளைப் பிடிப்பதுதானே பிறவிப்பயன்? இதை ஆழ்வார்களைப்போல் செய்கிறவர்களே வாழ்வில் உகப்படைவர் என்பது 'உகந்தான் வாழ்வு' என்பதிலிருந்து அறியக்கிடக்கிறது. மண்மதியிற் கொண்டுகந்தான் வாழ்வு = திருமலையப்பனின் திருவடி மண்ணை மதியிற் கொண்டு உகப்பவர்களின் வாழ்வே வாழ்வு.

கண்ணாடிபோல் மின்னும் வெண்ணிலாவில் தன்னுடைய முகத்தழகைப் பார்த்துக் கொள்ள விரும்பி ''வெண்மதியம் தா'' என்று குரங்கு கேட்டதை மேற்பாசுரத்தில் கண்டோம். கண்ணாடிபோல் முகம் காட்டும் நீர்நிலையில் தன் முகத்தை ஆண்குரங்கு பார்த்தால் என்ன செய்யும்? இதைக் கீழ்ப்பாசுரத்தில் ஆழ்வார் பாடுகிறார்.

## ஸ்ரீ பேயாழ்வார்

பார்த்த கடுவன் சுனைநீர் நிழல் கண்டு
பேர்த்து ஓர் கடுவன் எனப்பேர்ந்து - கார்த்த
களங்கனிக்குக் கைநீட்டும் வேங்கடமே! மேனாள்
விளங்கனிக்குக் கன்று எறிந்தான் வெற்பு (68)

பேர்த்து = அப்புறப்படுத்த முயன்று; பேர்ந்து = தானே அசைந்து; கார்த்த = கரிய; களங்கனி = களாக்காய், பழம்; மேனாள் = மேல் நாள், முன்னொரு நாள்; விளங்கனி = விளாம்பழம்; கன்று = இங்கு கன்று வடிவில் வந்த வத்ஸாசுரன்; வெற்பு = மலை.

**பாசுரத்தின் பொருள்:**

திருவேங்கடமலையிலுள்ள சுனைநீரில் ஓர் ஆண் குரங்கு தன்னுடைய நிழல் தெரிவதைப் பார்த்து, அதைத் தன் எல்லையில் புகுந்து ஆக்கிரமிக்க முயலும் இன்னொரு ஆண்குரங்கு என்று நினைத்துத் துரத்தியடிக்க முயல்கிறது! பயனில்லாமல் போகவே தானே அங்கிருந்து நகர்ந்து விடுகிறது. அப்பொழுது ஓர் களாப்பழம் நேரிலோ, நீரில் நிழலாகவோ தோன்ற அதைப் பறிப்பதற்குக் கடுவன் தன் கையை நீட்டுகிறது. முன்னொரு காலத்தில் விளாம்பழத்தைப் பறிப்பதற்காக, வத்ஸாசுரன் என்கிற கன்றை விட்டெறிந்த கிருஷ்ணனுடைய மலை இது.

திருமலைச் சுனைநீர் பளிங்குபோல் முகம் காட்டுமளவிற்கு சுத்தமானது. அதில் தத்ரூபமாகத் தெரிந்த தன் உருவத்தைப் பார்த்த ஆண்குரங்கு பிரமித்துவிட்டது. களங்கனியைப் பறிக்கக் கைநீட்டிய குரங்கை விவரித்த ஆழ்வாருக்கு உடனே, கன்று வடிவில் தன்னைக் கொல்வதற்கு வந்த வத்ஸாசுரனை எறியக் கைநீட்டிய கண்ணனின் நினைவு வந்து விடுகிறது.

**விளங்கனிக்குக் கன்று எறிந்தான் வெற்பு:**

அசுராவேசங்கொண்டு, கோபர்களைக் கொல்லக் காத்திருந்த விளம்பழங்களை வீழ்த்தினான்; அதற்காக கன்று வடிவில் வந்து ஒளிந்து கொண்டிருந்த வத்ஸாசுரனை, எறிதடியாக, மலைப்பிஞ்சாகப் பயன்படுத்தினான் கிருஷ்ணன், ஒரே கல்லில் இரண்டு மாங்காய் அடிப்பதுபோல! விளங்கனியை அடித்த வேங்கடகிருஷ்ணனுக்குக் களங்கனி பிரியமென்று நினைத்தே திருமலைக் கடுவன் அதைப் பறிக்கக் கைநீட்டியது போலும்!

பேயாழ்வாரின் பாசுரத்திலுள்ள சிறந்த கருத்தைக் கைநீட்டிப் பறித்துக் கொள்கிறார் திவ்விய கவி பிள்ளைப்பெருமாள் அய்யங்கார். பறித்தவர்—

**''வாவுகவின் மந்திநுகர் மாங்கனிக்குக் கற்பகத்தின்**
**மேவுகவி கைநீட்டும் வேங்கடமே''**

என்று தம்முடைய கவித்திறத்தையும் சேர்த்தே பாடுகிறார்.

''வானவர்களும், வானரங்களும் வேங்கடவனை வந்து வணங்கியதாக முன்னோர்கள் கூறியிருப்பது போல் எதுவும் நம் கண்ணுக்கு இன்று தெரியவில்லையே!'' என்று இளைய தலைமுறையினர் ஏங்குவது நியாயமே. திருமலைக்கு நடந்து செல்பவர்கள் நடுவே வானரங்களின் விளையாட்டையாவது ஆங்காங்கு இன்றும் காணலாம். பேருந்துப் பயணிகள் பார்ப்பது பாறைகளையே! இத்தகைய மக்களின் ஏக்கத்தைப் போக்கவே முன்கூட்டியே பாக்கள் ஆக்கியிருக்கின்றனர் இன்கவி பாடிய நம் பரமகவிகள்.

**ஸ்ரீபூதத்தாழ்வார் திருவடிகளே சரணம்**

# 14. வேடர் வில்வளைக்கும் வேங்கடம்

வேடர் என்பவர்கள் காட்டிலே வேட்டையாடியே பிழைப்பவர்கள். குறவர் எனப்படுபவர்கள் இவர்களை விடச் சற்று நாட்டுடன் அதிகத் தொடர்பு உடையவர்கள் எனலாம். குறவர்கள் தினைப்பயிரிடுவது, பிரம்பு அறுத்துக் கூடைகள் பின்னுவது, மலையில் கிடைக்கும் தேன், கிழங்கு போன்றவற்றை விற்பது ஆகியவற்றைச் செய்து பிழைப்பர். வேடர்களும், குறவர்களும் வேங்கடத்தில் வில் வளைத்த காட்சிகளை ஆழ்வார்கள் பாடியிருக்கின்றனர்.

மலையும், மலைசார்ந்த இடமும் தமிழில் 'குறிஞ்சி' என வழங்கப்படும். எனவே வேங்கடம் குறிஞ்சி நிலத்தைச் சேர்ந்தது. ''இத்தகைய இடத்தின் கருப்பொருளாகிய குறவர், யானை, குரங்கு, பாம்பு போன்றவற்றை ஆழ்வார்கள் குறிப்பிட்டுச் சொல்லும் அழகு அவர்களுடைய கவித்திறனைக் காட்டுவதுடன் நம்மையும் கவிதை அநுபவத்தின் கொடுமுடிக்குக் கொண்டு செலுத்துகின்றது'', என்கிறார் பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார்.

பொய்கையாழ்வார் ஒரு பாசுரத்தில் வேங்கடமலையின் குறவர், யானை, பாம்பு ஆகியவற்றை இணைத்துப் பாடுகிறார். இப்பாட்டில் பேசப்படும் பொருட்கள் யாவுமே திருமாலுடன் விசேஷத் தொடர்பு கொண்டவை என்பதும் இதன் சிறப்பு.

## ஸ்ரீ பொய்கையாழ்வார்

ஊரும் வரியரவம் ஒண்குறவர் மால்யானை
பேர எறிந்த பெருமணியை - காருடைய

மின்னென்று புற்றடையும் வேங்கடமே! மேலசுரர்
எம்மென்னும் மாலது இடம். (38)

ஊரும் = ஊர்ந்து செல்லும்; வரி = கோடு; அரவம் = பாம்பு; மால் யானை = பெரிய யானை; ஒண் = அழகிய, சிறப்பு வாய்ந்த; மணி = மாணிக்கம்; கார் = மேகம்; மின் = மின்னல்; எம்மென்னும் = எம்முடையது என்று கொண்டாடும்; மாலது = திருமாலுடைய.

**பாசுரத்தின் பொருள்:**

திருவேங்கடம் என்னும் திவ்ய தேசத்தில் வாழ்வதால் சிறப்புடைய குறவர்கள் தங்கள் தினைப்புனங்களில் பட்டி மேயும் யானையைத் துரத்துவதற்காகப் பரண்களில் இருந்தபடியே பெரிய, பெரிய மாணிக்கக் கட்டிகளை அதன்மேல் வீசுகின்றனர். அப்பொழுது அங்கு ஊர்ந்து சென்று கொண்டிருக்கும் மலைப்பாம்புகள் யானைமீது பொழியும் மாணிக்க மழையைக் காண்கின்றன; யானையை மேகமாகவும், இரத்தினங்களை மின்னல்களாகவும் எண்ணி மயங்குகின்றன. மின்னலுடன் இடிதோன்றும் என்று மிரண்டு, பாம்புகள் தங்கள் புற்றுக்களில் புகுந்து கொள்கின்றன.

**ஒண்குறவர் எறிந்த பெருமணி:**

திருமலை வேங்கடேசனிடமிருந்து எந்நேரமும் மகத்தான ஆன்மீக அலைகள் எழுந்து உலகெங்கும் பரவுகின்றன. இங்கே பூசிப்பவர், தியானிப்பவர், வாழ்பவர் அனைவருமே தங்களையறியாமல் இதனால் உயர்ந்த மனநிலைகளை அடைந்து, ஆனந்தத்தை அனுபவிக்கின்றனர். அத்தகைய ஆனந்த நிலையம் இது. இத்தகைய சக்திவாய்ந்த திவ்ய தேசத்தில் தொடர்ந்து வாழ்வதால், அங்குள்ள குறவர்களும் சத்துவ குணம் மேலோங்கியவர்களாக ஆகி விடுகின்றனர். விலைமதிக்க முடியாத மாணிக்கங்களும், இரத்தினங்களும் அவர்களுக்கு சற்றும் இலட்சியமில்லை! யானையை அடிப்பதற்கு கற்களுக்கு பதில் மாணிக்கக் கட்டிகளையே உபயோகிக்கின்றனர். மண்ணும், மணியும் இவர்களுக்கு ஒன்றே. ''ஓடும் பொன்னும் ஒக்கவே நோக்கும்'' சமயக்குரவர்களையும் விஞ்சிவிடுவர் போலிருக்கிறதே நம் திருமலைக்குறவர்கள்! எனவே ஆழ்வார் இவர்களை 'ஒண்குறவர்' எனகிறார். ஒண் = ஒளிவீசும். மகா தேஜஸ் வீசும் குறவர்கள் இவர்கள். கிருஷ்ணன் தங்களிடையே அவதரித்ததால் சிறப்புற்ற ''அறிவொன்றும் இல்லாத

ஆய்க்குலத்து'' கோபர்களைப் போன்றே, ஸ்ரீ வேங்கடாசலபதி திருமலைக் குறவர்களிடையே குறிஞ்சிநிலத் தலைவனாக உறைவதால் இவர்களும் ஆழ்வாரால் உயர்வாகப் பேசப்படுகின்றனர்.

**பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் உரை:**

'ஒண்குறவர்' என்பது அழகிய குறவர்கள், சிறந்த குறவர்கள் என்று பொருள்படும். 'ஒண்மையாவது இவர்கள் பாட்டன்-பூட்டனிலே ஒருத்தன் பூமியிலே இறங்கினான் என்றும் பழியின்றிக்கே இருக்கை' என்பது வியாக்கியானம். அஃதாவது, வழி வழியாகத் திருப்பதி மலையை விட்டுக் கீழே இறங்காமல் அங்கேயே பெயராது வாழும் சிறப்பு அந்தக் குறவர்கட்கே உரியது என்று கூறி ஆழ்வாரின் கருத்தை விளக்குவர் பெரியவாச்சான் பிள்ளை. அக்குறவர்கள் கற்களுடன் மாணிக்கக் கற்களையும் எறிவர் என்பது வெறும் உயர்வு நவிற்சியன்று; அவர்களுடைய மதிப்பீட்டில் கல்லும், மாணிக்கமும் ஒன்றே என்பது குறிப்பு.

**பெருமணி:**

பெரிய மாணிக்கம். குறவர்கள் வீசியெறியும் இது, திருவேங்கடவனுக்கும் பொருந்தும். கருநிறம், விலைமதிப்பின்மை, ஒளிவீசுதல், பெறுவதற்கு அருமை போன்ற தன்மைகள் கொண்டதால் எம்பெருமானுக்கு மாணிக்கத்தை உவமையாகக் கூறுதல் மரபு. 'அண்ணல் மாயன்' என்று தொடங்கும் பாசுரத்தில் (3-3-3) நம்மாழ்வார் திருவேங்கடவனை ''கண்ணன் செங்கனிவாய்க் கருமாணிக்கம்'' என்று குறிப்பிடுகிறார். திருமலைக்கும் 'சிந்தாமணிகிரி' என்கிற மணியான திருநாமமுண்டு. வேண்டியதைத் தருபவர் திருமலையாழ்வார்! மணிவண்ணனுக்கு ஏற்ற மணிமலை!

**மால்யானை:**

மால் = இங்கு, 'பெரிய' என்று பொருள்படும். மற்றபடி 'மால்' என்றால் திருமால். இதற்கு வ்யாமோகமே (பிரேமையே) வடிவானவன், தன்னை ஆச்ரயித்தவர்கள் (பற்றியவர்கள்) விஷயத்தில் பெரும் பித்தன், பக்தவத்ஸலன் என்று பொருள். இவ்விதமே யானையும் தன்னைப் பற்றிய பாகன் முதலியோரிடத்திலே மிகுந்த அன்பு செலுத்தும்; இத்துடன் கருநிறம், நெடிய உருவம், காண்பவர்க்கு எப்பொழுதும்

களிப்பூட்டுதல் போன்றவற்றால் யானையைத் திருமாலுக்கு உவமை கூறுவதும் மரபாகிறது. எனவே ஆழ்வார் மால், யானை ஆகிய இரு பதங்களையுமே சேர்த்து அர்த்தபுஷ்டியாக 'மால்யானை' என்று அழகுற அமைத்திருப்பது, கற்கக் கற்க களிப்பூட்டுகின்றது!

**ஊரும் வரி அரவம்:**

ஊர்ந்து செல்லும், கோடுகளை உடைய பாம்பு. இதற்கும் திருமலைக்கும் நிறைய சம்பந்தம் உண்டு. திருமலையே ஆதிசேஷன், அரவணை என்பர். எனவே திருமலையாழ்வார்க்கு அரவகிரி, சேஷகிரி, சேஷாத்ரி என்கிற திருநாமங்களுண்டு. சேஷாசலத்தின் மீது பேருந்தில் நாம் ஊர்ந்து செல்லும்போது, பாதையும் 'ஊரும் வரி அரவம்' போன்றே வளைந்து, வளைந்து செல்கிறது! போகும் வழி 'ஊரும் வரி அரவம்' என்றால், போகும் ஊரும் அரவகிரி.

**காருடைய மின்:**

யானையைக் கார்மேகமென்றும், குறவர்கள் அதைத் துரத்த வீசிய மணியின் ஒளியை மின்னலென்றும் நினைத்து பயந்து பாம்பு புற்றை அடைகிறது. யானை, மேகம், மணி ஆகிய மூன்றுமே திருமாலுக்கு உவமைகளாகக் கூறப்படுபவை; மூன்றையும் ஒரே இடத்தில் ஒன்றாகக் கண்டு மயங்குகிறது அரவம். மயக்குபவன் மாயோன், திருமால்; அவனுக்கு உவமையாகக் கூறப்படும் பொருள்களும் இவ்விதமே மயக்கும் தன்மையுடைன போலும்! மேகங்கள் எப்பொழுதும் தவழ்ந்து கொண்டிருப்பது திருமலை; அதன் மீது மேக வண்ணனாகிய வேங்கடவன் நின்று கொண்டிருப்பது பொருத்தமே! இவனுக்கு ஸ்ரீ ஆண்டாள் மேகவிடுதூதும் அருளிச் செய்துள்ளாள்.

மின்னலைப் போல் ஒளிர்பவள் பொன்னிறமுடைய மகாலட்சுமி. கார்மேகத்தினிடையே மின்னல் ஜொலிப்பது போல, பிராட்டியுடன் கூடிய 'அலர்மேல் மங்கையுறை மார்பன்' திகழ்வதை, 'திருக்கண்டேன், பொன்மேனி கண்டேன்' என்று பேயாழ்வார் பாடியுள்ளார். எனவே 'காருடைய மின்' என்பது ஸ்ரீதரன், மாதவன், லட்சுமி நாராயணன், சீதாராமன், ராதாகிருஷ்ணன், ஸ்ரீநிவாஸன் போன்ற பிராட்டியுடன் கூடிய திருமாலைக் குறிக்கிறது.

**புற்றடையும் வேங்கடமே!**

''காருடைய மின்'' என்று பயந்து திருமலையில் பாம்பு மாத்திரமா புற்றை அடைந்தது? மின்னல் போல் ஒளிரும் திருமகளைப் பிரிந்த, கார்மேக வண்ணனாகிய வைகுந்தவாசனும் அல்லவா சேஷாசலத்தில் பிரம்மதேவனால் படைக்கப்பட்ட திந்திரினி (புளிய) மரத்தின் கீழிருந்த புற்றை அடைந்ததாக ஸ்ரீ வேங்கடேச புராணம் கூறுகிறது!

இரத்தினத்தைக் கண்டு பயந்து திருமலையில் பாம்பு புற்றையடைந்தது. ரத்னாகரன் என்கிற வேடன் நாரதரிடம் மந்திரம் பெற்று, தன்னைச் சுற்றிலும் எறும்புப் புற்று எழும்படி தவம் செய்ததால் 'வால்மீகி' என்று பெயரடைந்ததாக வரலாறு கூறுகிறது. வால்மீகி முனிவருக்கு ஏதாவது கைம்மாறாக இராமபிரான் செய்ய வேண்டாமா? ஒருவன் செய்ததை அப்படியே செய்வது, முன் செய்தவனுக்குப் பெருமையைக் கூட்டும். எனவே பார்த்தார் பெருமாள். நாமும் வால்மீகியைப் போல் சிறிது காலம் புற்றுக்குள் கிடப்போம் என்றெண்ணிப் புற்றடைந்தார் வேங்கடத்தில். எம்பெருமானைப் பின்பற்றியே நாமும் புற்றுக்குள் எறும்புகள் ஆயிரக்கணக்கில் செல்வது போல, வேங்கட மலைமீது ஊர்ந்து செல்கிறோம்.

**மேலசுரர் எம்மென்னும் மாலது இடம்:**

மேல = மேம்பட்டவர்களான; சுரர் = தேவர்கள், நித்யசூரிகள். இவர்களெல்லாம் ''ஸ்ரீநிவாஸன் எங்களுடையவன்'' என்று அபிமானித்துக் கொண்டாடும் இடமே திருமலை. இது போலவே நம்மில் பலரும் கொண்டாடுகிறோம் என்பதே கஷ்டகாலமான இந்தக் கலியில் நாம் செய்யும் நல்ல காரியங்களில் சிறந்தது; தவறாமல் பலன் தருவது; 'மேலசுரர் எம்மென்னும் மாலது இடம்' என்பது இன்றும் உண்மை; நித்ய சூரிகளே திருமலையில் பற்பல வடிவங்களையெடுத்து உலவுகின்றனர் என்று பெரியோர் பணிப்பர்.

**'ஆழ்வார்கள் அமுத நிலையம்' உரை:**

''திருவேங்கடத்தில் வாழும் குறவர், அரவம், யானை, அதன்மேல் எறியும் மணி யாவும் பெருமானைப்போல் சிறப்புடையன'' என்கிறார் ஆழ்வார்.

*'திவ்யார்த்த தீபிகை' உரை:*

திருவேங்கட மலையே நித்யசூரி நிர்வாஹகனான எம்பெருமான் திருவுள்ளம் உவந்து எழுந்தருளியிருக்கும் இடம் என்கிறார். திவ்யதேசங்களிலுள்ள சராசரங்கள் (அசையும், அசையாப் பொருட்கள்) முற்றும் மெய்யன்பர்கட்கு உத்தேச்யமாய் (உகந்தவையாய்) இருக்கும். ஸ்ரீ குலசேகர ஆழ்வார் தம்முடைய பிரபந்தத்திலே நான்காம் திருமொழியிலே ''வேங்கடத்துக் கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே'' என்று தொடங்கித் திருமலையில் பலவகைப் பிறவி பிறக்க குதூஹலித்து, கடைசியாக ''திருவேங்கடம் என்னும் எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனும் ஆவேனே'' என்று தலைக்கட்டுகிறார். அதற்கேற்ப, இக்குலசேகர ஆழ்வாரைப் போன்ற ஆர்வம் உடைய மஹான்களே திருமலையில் பாம்பாகவும், குறவராகவும், யானையாகவும், புற்றாகவும் பிறந்திருப்பார்கள் ஆகையாலே அப்பொருள்களையும் எம்பெருமானைப் போலவே உத்தேச்யமாகக் கொண்ட இவ்வாழ்வார் இப்பாசுரத்தாலே தம்முடைய எண்ணத்தை வெளியிடுகிறார் என்க.

திருமலை கோபர்களாகிய குறவர்கள் தினைப்புனம் காப்பதை பொய்கைப் பிரான் பாடிவிட்டார்; நாம் திருவேங்கடத்தின் கோபிகைகளான குறமகளிர் 'பௌர்ணமி நிலவில் பனிவிழும் இரவில்' விளையாடுவதைப் பாடுவோம்' என்று அருளிச் செய்கிறார் ஸ்ரீ பேயாழ்வார்:

## ஸ்ரீ பேயாழ்வார்

குன்று ஒன்றினாய குறமகளிர் கோல் வளைக்கை
சென்று விளையாடும் தீங்கழைபோய் - வென்று
விளங்குமதி கோள்விடுக்கும் வேங்கடமே! மேலை
இளங்குமரர் கோமான் இடம். (72)

குன்று = இங்கே, திருமலை; கழை = மூங்கில்; மதி = சந்திரன்; கோள் = ராகு; மேலை = மேலான பரமபதத்திலிருக்கும்; இளங்குமரர் = பிராயம் எப்போதும் இருபத்தைந்தேயுள்ள நித்யசூரிகள்; கோமான் = தலைவன்.

பாசுரத்தின் பொருள்:

திருமலையிலேயே என்றும் வசிப்பவர்கள் அழகி வளைகளையணிந்த கைகளையுடைய குறத்திகள். இவர்க அழகிய மூங்கில்கள் வளரும் இடத்திற்குப் போய் விளையாட்ட ஏறி அவற்றை வளைப்பர்; அதனால் சந்திர மண்டலம் வரை ஓங் வளர்ந்த மூங்கில்கள் அசைந்து, சந்திரனைப் பீடித்திருக்கு ராகுவை வென்று அப்புறப்படுத்தி, அதை கிரகணத்தினின் விடுவித்து, மீண்டும் முழு நிலவாக பிரகாசிக்கச் செய்யு இத்தகைய வேங்கடமே, நித்ய யுவர்களாகவே இருக்கு நித்யசூரிகளின் தலைவனான ஸ்ரீவேங்கடாசலபதியி உறைவிடம்.

திவ்யார்த்த தீபிகை உரை;

திருமலையை விட்டு ஒரு நொடிப்பொழுதும் கீ இழிந்தாலும் குலப்பழியாம் என்று திருமலையை விடாதே அங்கே நித்தியவாஸம் பண்ணுகின்ற குறத்திகள் அவர்கள் ஊஞ்சலாடுகை முதலான விளையாடல்களுக்காக மூங்கில் மரங்களிலே ஏறியிருப்பதுண்டு. அப்படிப்பட்ட மூங்கில்களானவை, சந்திரனை க்ரஹிக்கின்ற ராகுவைக் குத்தி அப்புறப்படுத்தி அச்சந்திரனை மகிழ்விக்கின்றனவாம்.

இப்பாட்டுக்கு மற்றும் பல வகையாகப் பொருள் கூறுவர். விளையாடுகின்ற குறத்திகளின் கோல் வளைக்கையானது சென்று நல்ல மூங்கிற்செறிவை நீக்கி, சந்திரன் இங்கு புகப்பெறாமையால் பெற்றிருந்த இடரை நீக்கும் என்றுமாம். அன்றியே குறத்திகளின் வளைகளின் ஒளியானது சந்திர ஒளி புகுரப்பெறாத மூங்கிலிருளை அகற்றி, வெளிச்சமாக்கி, சந்திரன் மருவையும் போக்கும் என்றுமாம்.

மேலையிளங்குமரர்:

நித்ய சூரிகள், என்றும் பன்னிரண்டு வயது வாய்ந்திருப்பர் எனவும் கூறுவர்.

ஆழ்பொருள்:

சந்திர மண்டலம் வரை உயர்ந்தது திருமலை என்கிறார். சந்திரனின் கஷ்டத்தை நீக்கி, அதைக் கவ்விக்கொண்டிருந்த இராகுவை விரட்டியடித்து அபாயத்திலிருந்து திருமலை

காக்கிறது. இதனால் பக்தர்களை அபாயத்திலிருந்து விடுவித்து விளங்கச் செய்வதும் திருமலையே என்பது கூறப்பட்டது.

திருமலைக் குறவர்களைப் பற்றிய மற்றொரு பேயாழ்வார் பாசுரம்:

முடிந்த பொழுதில் குறவாணர் ஏனம்
படிந்து உழுசால் பைந்திணைகள் வித்த - தடிந்து எழுந்த
வேய்ங்கழை போய் விண் திறக்கும் வேங்கடமே!
மேலொருநாள்
தீங்குழல் வாய்வைத்தான் சிலம்பு. (89)

முடிந்த பொழுதில் = ஆயுட்காலம் முடிந்த நிலையிலுள்ள; குறவாணர் = குறசாதியர், குறவர் தலைவர்கள்; ஏனம் = பன்றி; படிந்து உழு = தோண்டி உழுத; சால் = கட்டியுதிர்ந்து பதமான மண்ணிலே; வித்த = விதைக்க; வேய்ங்கழை = மூங்கில் தடிகள்; சிலம்பு = மலை.

**பாசுரத்தின் பொருள்:**

மரணமடையும் நிலையிலுள்ள கிழவர்களான குறவர் தலைவர்கள் திருமலையில் புதிய தினை விதைகளை விதைக்கின்றனர். எங்கே எனில், காட்டுப்பன்றிகள் தங்கள் செருக்காலே மூங்கில்கள் வேரோடு விழும்படி கோரைப்பற்களினால் மண்ணை அகழ்ந்து உழுத நிலங்களிலே! இங்ஙனம் அறுபட்டாலும், நிலத்தின் வளத்தாலும், திருமலையின் மகிமையாலும் மூங்கிற் கழைகள் மீண்டும் தடித்து வளர்ந்து, ஆகாயத்தைப் பிளந்து நிற்கின்றன வேங்கடத்தில். முன்பொரு நாள் மதுரமான புல்லாங்குழலைத் தன் பவளச்செவ்வாயில் வைத்து ஊதிய கண்ணபிரானுடைய திருமலை இது!

**'ஆழ்வார்கள் அமுத நிலையம்' உரை:**

திருவேங்கடமலையில் வாழும் குறவர்களோடும், திருவேங்கடமுடையானோடும் வாசியறத் தமக்கு விருப்பமாயிருத்தலை விளக்குகிறார் ஆழ்வார்.

**'திவ்யார்த்த தீபிகை' உரை:**

திருமலையின் நிலவளத்தையும், ஒக்கத்தையும் (உயரத்தையும்) ஒரு சமத்காரமாகப் பேசுகிறார். இதில் தேன் திரட்டுதல், வேட்டையாடி மிருகங்களைப் பிடித்து வருதல்

முதலியன குறவர்களின் தொழிலாகும்; இத்தொழில்கள் நல்ல வயதிலுள்ள குறவர்கட்குச் செய்ய இயலுமேயன்றி, கிழக்குறவர்கட்குச் செய்ய இயலா. ஆகவே அவர்கள் கிருஷியினால் (உழவினால்) ஜீவிக்கப் பார்ப்பார்கள்; அது தன்னிலும் தாங்களே உழுது பயிரிடுதலும் அவர்கட்கு இயலாது. கலப்பை பிடித்து உழமாட்டாத 'முடிந்த பொழுதில் குறவாணர்' ஆதலால்.

**'ப்ரபந்த ரக்ஷை' உரை:**

வயதான குறவர்கள் தாங்கள் பூமியைப் பதம் செய்ய முடியாதவர்களானாலும் பன்றிகள் வேருணவுக்காகப் பூமியை எங்கும் தோண்டுவதால் அதுவே பண்சால் உழுத பூமிபோல் பண்பட அனுகூலமாகிறது. ஆங்காங்குள்ள மூங்கில்களும் வேர் அறுக்கப்பட்டு விழுந்துவிடுகின்றன. இனி அங்கு மூங்கில் வளராதென வைத்து, அவர்கள் விதைக்கிறார்கள். ஆயினும் பூமியின் வளத்தால் அறுக்கப்பட்டு விழுந்த மூங்கில்களும் வானளாவ வளர்கின்றன. இங்ஙனம் ஸாரமான திருமலையே திருமாலின்மலை என்றபடி.

**தீங்குழல்:**

குறவர்களும் பன்றிகளும் சுயநலம் கருதி மூங்கில்களை முறித்தாலும் அவை வானளாவ வளர்கின்றன. அதற்கு வேங்கடத்தில் இருத்தலே காரணம். வேங்கடமுடையான் வேய்ங்குழல் ஊதுகின்றவனாகையால் அவன் திருமேனி ஸம்பந்தம் பெற்ற புல்லாங்குழலின் சாதியிற் பிறந்த மூங்கில்களுக்கு உண்டாம் தீங்கெல்லாம் தானே முடிகிறது. ஆக எம்பெருமானை ஆச்ரயித்தாரை (பற்றியவரைச்) சார்ந்தார்க்கு அயலார் அபகாரம் செய்ய இயலாது என்றதாயிற்று.

திருவேங்கடத்தில் மூங்கில் வளர்வது திரிவிக்கிரமாவதாரம் வளர்ந்தது போலவே!

**தீங்குழல் வாய்வைத்தான் சிலம்பு:**

கோவர்த்தன மலையின் அருகே இருந்துத் தீங்குழல் ஊதி கோபிகளையும், கோக்கள் (பசுக்கள்), மிருகங்கள், செடி கொடி மரங்கள், கந்தர்வர் முதலானோரான எல்லாப் பிராணிகளையும் தனக்கு வசமாக்கிக் கொண்ட எம்பெருமான் கீதையின் முடிவிலே, ஆயுள் முடிவுக்குள்ளே முடிந்தபோது நாம் அவனை ஆச்ரயிருக்க

வேண்டுமென்று உபதேசித்தருளின பொருளை இப்போதும் அர்ச்சையில் விளக்குவது திருவேங்கடமே. ஆகையால் அதுவே அவனது மலையாம்.

**நம் உரை:**

குறவர்களும், பன்றிகளும் வெட்டித்தள்ளினாலும், திருமலை மூங்கில்கள் கிருஷ்ணனுக்குக் குழல் தந்த புண்ணியத்தால் ஓங்கி வளர்கின்றன; காற்றிலே அசைந்து 'ஊய், ஊய்' என்று ஓசை எழுப்புகின்றன. ''புல்லாங்குழல் கொடுத்த மூங்கில்களே, எங்கள் புருஷோத்தமன் புகழ் பாடுங்களேன்'' என்பது போல் மதுரகீதம் பாடுகின்றன! முன்பொரு நாள் மதுரமாக கீதையைப் பாடிய வேணுகோபாலனே திருமலையில் ஸ்ரீநிவாஸனாக நிற்பதால் அவனே இவ்விதம் வேணுகானம் செய்கிறானோ, என்று நாம் சற்று அசந்துவிடுகிறோம்.

இப்பாசுரம் மூன்று அவதாரங்களை நினைவூட்டுகிறது. 'ஏனம் (பன்றி) படிந்துழுசால்' என்பது முன்பு ஆதிவராகப் பெருமாள் நிலத்தை அகழ்ந்தெடுத்ததை நினைவுறுத்துகிறது. இவர் திருமலையில் சுவாமி புஷ்கரிணி தீர்த்தக்கரையில் எழுந்தருளியிருப்பதால் திருமலைக்கு 'வராக கிரி' என்றொரு பெயருமுண்டு. இத்தகைய வராக க்ஷேத்திரத்தில், காட்டுப்பன்றிகள் தங்கள் செருக்கால் மூங்கில்கள் சரியும்படி நிலத்தை உழுவது எவ்வளவு பொருத்தமாகிறது! மூங்கில்கள் மீண்டும் வானளாவ வளர்வது, உலகளந்த திரிவிக்கிரமனை நினைவூட்டுகிறது. வானையே அளப்பதுபோல் உயர்ந்த மலையில் நிற்பதால், திருவேங்கடவனைத் திரிவிக்ரமன் என்பது பொருந்தும் என்று பணிப்பர் பெரியோர். இதுவே கிருஷ்ணாவதாரத்தில் குழல் ஊதியவனின் மலையுமாகும்.

அடுத்து, திருமழிசையாழ்வார் திருமலை வேடர்களையும், குறவர்களையும் பாடும் இரு பாசுரங்களைக் காண்போம். இவர் பார்க்கவ முனிவருக்கு மகனாய் அவதரித்து, பிரம்பு அறுக்கும் குறவர் சாதியிற் வளர்ந்தவர் என்று கூறுவர்.

## ஸ்ரீ திருமழிசையாழ்வார்

வைப்பன் மணிவிளக்கா மாமதியை மாலுக்கு என்று
எப்பொழுதும் கைநீட்டும் யானையை - எப்பாடும்
வேடு வளைக்கக் குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே!
நாடு வளைத்து ஆடுதுமேல் நன்று.

வேடு = வேடர்; நாடு = நாட்டு மக்கள்; வளைத்து ஆடுதுமேல் = பிரதட்சிணம் செய்து வணங்குதல்.

**பாசுரத்தின் பொருள்:**

''சிறந்த சந்திரனைத் திருவேங்கடமுடையானுக்கு மங்களதீபமாக சன்னிதியில் வைப்பேனாக'' என்றெண்ணித் திருமலை யானை அதைப் பிடிப்பதற்கு எப்போதும் துதிக்கையை உயரத்தூக்கியபடியே உள்ளது. யானையைப் பிடிக்க வேடர்கள் அதை நாற்புறமும் சுற்றி வளைத்துக் கொள்கிறார்கள். அங்குள்ள குறவர்கள் யானையைக் காக்க வேடர்களை எதிர்த்து (வேடர்களுடன் சேர்ந்து யானையை அடிக்க, என்றும் கூறுவர்) வில்லை எடுப்பர். நாட்டு மக்கள் அனைவரும் அத்திருமலையைச் சூழ்ந்து, பிரதட்சிணம் செய்து வணங்குவது நன்று.

**'திவ்யார்த்த தீபிகை' உரை:**

திருமலை சந்திரமண்டலத்தை எட்டியிருக்கிறதென்று அதன் ஓக்கம் (உயரம், பெருமை) வெளியிடப்பட்டதாம். இதனால், மலைகளில் சந்திரன் மிக்க ஸமீபத்தில் இருப்பதாகக் காணும் மலைப்பிராணிகள் அவனைக் கைக்கொள்ள விரும்பி பல முயற்சிகள் செய்வது இயல்பு. யானை சந்திரனைப் பிடிக்க முயற்சி செய்வது வெளிக்குத் தெரியுமேயன்றி இன்ன காரியத்திற்காக அதனைப் பிடிக்க முயல்கிறது என்பது தெரியமாட்டாதே; திருமலையப்பனுக்கு நந்தாவிளக்காக வைப்பதற்குப் பிடிக்க முயல்கிறதென்று ஆழ்வார் எங்ஙனே அறிந்தார்? என்று சிலர் கேட்கக்கூடும்; திருமலையில் பிறக்கப்பெற்ற பெருமையினால் அவ்யானைக்கு இப்படிப்பட்ட நற்கருத்தே இருக்கத்தகும் என்று திருவுள்ளம் பற்றினர் என்க. அன்றியும் ''வாயுந்திரையுகளும்'' என்கிற திருவாய்மொழியிற்படியே, பிறர் செய்யும் காரியங்களை எல்லாம் தாம் செய்யும் காரியங்கள்போல் பகவத் விஷய ப்ராவண்யத்தால் செய்வனவாகவே கொள்வது மெய்யன்பர்களின் வழக்கமாகும். ஆழ்வார் சந்திரனைப் பார்க்கும்போது ''இவன் திருவேங்கடமுடையானுக்கு நந்தாவிளக்காக அமையத்தகும்'' என்று தோற்றவே, இத்தோற்றமே அவ்விடத்து யானைக்கும் இருந்ததாகக் கொண்டு கூறுதல் பொருந்தியதே.

**'ப்ரபந்த ரக்ஷை' உரை:**

இங்கு (திருமலையில்) எல்லாம் எம்பெருமானின் கைங்கர்யத்தில் ஈடுபட்டவை. யானை சந்திரனைக் கண்டு கைநீட்டுவது, அதை நந்தாவிளக்காக நம் திருமாலுக்கு

அமைக்கலாம் என்கிற நோக்கத்தினால். ''இப்படி கைங்கர்யபரமான யானையை ஏன் வில்லெடுத்து வருத்துகின்றனர். அது நன்றோ?'' என்னில் - யானைப்பிடிக்க வளைத்து வரும் வேடரை விலக்கக் குறவர் வில்லெடுக்கின்றனர் என்க. அப்போது பாகவத விரோதிகளை வெல்ல முயல்வது என்ற நன்மையாம். அங்குள்ள வேடர்கள் மட்டும் அவ்வாறு நடப்பரோ என்னில், அவர்கள் புறம்புள்ளவரே, அங்குள்ளவரல்லர் என்க. இனி வேடர்களும், குறவர்களும் யானையைப் பிடிக்கின்றனர் என்றே கொண்டாலும், யானை சந்திரனை இந்த நோக்கத்துடன் பார்க்கிறது என்பதை அவர் அறியார். யானையைப் பிடித்து வசப்படுத்தினால் எம்பெருமான் ஸன்னிதியில் கைங்கர்யத்திற்கு அதைப் பயன்படுத்தலாம் என்பது அவர்கள் கருத்து எனலாம்.

நித்ய விபூதியிற்போலே திருமலையிலுள்ள ஜங்கம ஸ்தாவர பூதங்கள் (செடி கொடி, விலங்குகள்) எல்லாம் திருமாலின் விபூதியாய் அவனது கைங்கர்யத்திலே ஈடுபட்டவை என்று அதன் பெருமையை (இப்பாசுரத்தில்) அனுபவித்து, (அடுத்த பாட்டில்) வேங்கடமே ஸர்வோத்க்ருஷ்டம் (அனைத்திலும் சிறந்த புண்ணியத்தலம்) என்கிறார்.

**'ஆவார்கள் அமுத நிலையம்' உரை:**

''விலங்குகளும் கிட்டி அடிமை செய்யும் திருமலையை நாட்டார் சுற்றி வலம் வந்து வணங்குவார்கள் எனில் நலமாம்'' என்கிறார்.

**நம் உரை:**

''வெண் மதியம் தா!'' என்று மந்தி கடுவனைக் கேட்டதை பேயாழ்வார் பாடினார். இதை கஜேந்திர ஆழ்வார் பரம்பரையில் பிறந்த திருமலை யானை கேட்டுவிட்டது. ''பெண் குரங்கின் பேச்சைக்கேட்டு, ஆண் குரங்கு குரங்குத்தனமாக எதையாவது செய்துவிடப் போகிறதே! இத்தனை அழகிய முழுநிலவு குரங்கு கையில் கிடைத்த பூமாலையின் துர்கதியை அடைவதா? அதற்கு முன் நாமே சந்திரனைப் பறித்து ஸ்ரீ வேங்கடாசலபதிக்கு மணிவிளக்காய் வைப்போம்!'' என்று திருமலை தும்பிக்கை ஆழ்வார் அவசர அவசரமாகக் கையை நீட்டுகிறார்.

பௌர்ணமி திருமாலை பூஜிப்பதற்குச் சிறந்த நாள். ''மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாள்'' என்றே திருப்பாவை

துவங்குகிறது. நம்மாழ்வார் வைகாசி விசாகத்திலும், திருமங்கையாழ்வார் கார்த்திகை கிருத்திகையிலும், பௌர்ணமி திதியில் அவதரித்தனர். புத்தரும், சைதன்யரும் அவதரித்ததும் மதி நிறைந்த நன்னாட்களிலேயே. ''சரி, நம்மால் ஆன பௌர்ணமி பூஜையைப் பெருமாளுக்குச் செய்வோம்'' என்று நினைத்தே திருமலை கஜேந்திரர் சந்திரனைப் பிடிக்க முயல்கிறார்.

யானை துதிக்கையைத் தூக்குவது வணங்குவது போலிருக்கும்; துதிக்கும் கையே துதிக்கை. ''மாலுக்கென்று எப்பொழுதும் கைநீட்டும் யானை' என்பதால் திருமலை யானை எப்பொழுதும் துதிக்கையைத் தூக்கி ஏழுமலையானை ஏத்தித் துதித்தே நிற்கும் என்பது தெரிகிறது. ஆபத்துக் காலத்தில் 'ஆதிமூலமே' என்று அலறிய பாகவத புராணத்து கஜேந்திரனை விடவும் பக்தியிற் சிறந்தது 'நான்முகன் திருவந்தாதி' திவ்விய பிரபந்த யானை! ''சந்திரன் திருமலைக்கு நேரே எப்பொழுது வரும்? வந்தவுடன் 'லபக்'கென்று பிடித்து மணிவிளக்கா வைத்து விடுவோம்,'' என்று நினைத்தே, தயார்நிலையில் எப்பொழுதும் துதிக்கை தூக்கியபடியே இருக்கிறார். சில யோகியர் மனவலிமையை வளர்த்துக் கொள்ள, பகவானை நினைத்தே எப்பொழுதும் கைதூக்கியபடி இருப்பர்; சிலர் எப்பொழுதும் நின்றுகொண்டே இருப்பர். நம் திருமலை கஜேந்திரயோகி இத்தகையவரே. வேடர்கள் தம்மைச் சூழ்ந்து கொண்டது, குறவர்கள் வில்லை எடுப்பது ஒன்றுமே தெரியாம கருமமே கண்ணாக இருக்கிறார். ''கை கூப்பிய நிலையிலே ஆழ்வார்களும், ஆசார்யர்களும் எழுந்தருளியிருக்கின்றனர். நமக் இருப்பதோ ஒரே ஒரு கை. நம்மால் கைகூப்ப இயலாது. எனவே கைதூக்கிய நிலையிலேயே நிற்போம்'' என்றிருக்கிறார்.

**நாடு வளைத்து ஆடுமேல் நன்று:**

நாட்டிலுள்ளவர்கள் திருமலையை வலம் வந்து திருவேங்கடமுடையானைக் குறித்து கீதங்கள் பாடியும், ஆடியு தொழுவது நாட்டிற்கும் நல்லது, வீட்டிற்கும் நல்லது என்கிற ஆழ்வார். ஏழு மலைகளும் பரந்து கிடப்பதா கிரிப்பிரதட்சிணமாக வலம் வருதல் கருடாழ்வாருக்கே இயலு ஏழு மலைகளையும் நடந்து ஏறுவதே வலம் வருதலா கொள்ளலாம். திருமலையைப் பொறுத்தவரையி கிரிப்பிரவேசமே கிரிப்பிரதட்சிணம். 'நாடு வளைத்து' என ஆழ்வார் அன்று அருளியபடியே, திருமலையைச் சுற்

காடுகளெல்லாம் மாயமாய் நிறைந்து, மக்கள் வாழும் நாடாகி விட்டதை இன்று காண்கிறோம்! திருமலையை நாடு வளைத்து வருகிறது.

## ஸ்ரீ திருமழிசையாழ்வார்

நன் மணிவண்ணன் ஊர் ஆளியும் கோளரியும்
பொன்மணியும் முத்தமும் பூமரமும் - பன்மணி நீர்
ஓடு பொருது உருளும் கானமும் வானரமும்
வேடும் உடை வேங்கடம். (47)

ஆளி = யாளி, கோளரி = கோள் + அரி; கோள் = பலம், மிடுக்கு; அரி = சிங்கம். நீரோடு என்பது 'நீர் ஓடு' என்று இங்கு பிரித்து எழுதப்பட்டது. வேடு = வேடர் இனம்

**பாசுரத்தின் பொருள்:**

யாளி என்ற மிருகங்களும், பலமுள்ள சிங்கங்களும், பொன்னும், மாணிக்கங்களும், முத்துக்களும், பூத்த மரங்களும், பலவகைப்பட்ட ரத்தினங்கள் அருவி நீருடன் கலந்து உருண்டு விழும் காடுகளும், வானரங்களும், வேடர் இனங்களும் உடையது வேங்கடம். இதுவே நீலமணிவண்ணனாகிய திருமாலின் நல்ல திவ்ய தேசம்.

**ஆழ்வார்கள் அமுத நிலையம் உரை:**

''ஸர்வேச்வரன் உகப்பது திருமலை. அவன் உறையும் திவ்ய தேசத்திலுள்ள சேதன அசேதனங்களும் (உயிருள்ள, உயிரற்ற பொருட்கள்) அவன் விரும்புவன; அவை நித்யசூரிகளே'' என்று அம்மலையை மண்டி அநுபவிக்கிறார் ஆழ்வார்.

**'ப்ரபந்த ரக்ஷை' உரை:**

நித்யசூரிகளே எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருமலைக்கேற்ப பல உருவங்களை எடுத்துக்கொண்டு அதனைச் சிறப்பித்து வருகின்றனர். ஆகையால் திருமலை பரமபதத்திற்குக் குறைந்ததன்று. பரமபதத்தில் யாளி, மணி, மரம், வானரமென்றாற் போன்றவைகள் இருக்குமாயினும் வேடர், குறவர் போன்றோர் கிடைப்பதரிது. வேடுமுடையதானபடியாலே வேங்கடத்திற்கு ஏற்றமுண்டு. மணிவண்ணனும் லீலாவிபூதியில் உள்ளாருக்கும் சுலபனாயிருந்து தனது மணிவண்ணத்தன்மை, அதாவது மணி முன்றானையிலே முடிக்கப்பட்டு அடக்கப்படுமாப் போலே

எல்லோருக்கும் எளிதில் கிடைக்கப்படுகின்றமை தெரியும்ப
இங்கே விளங்குகிறான். ஆகவே இதுவே அவனுக்கு நல்ல ஊ
இனி நாம் பரமபதத்தை எவ்வாறு நினைக்க வேண்டும் எனி
இராமன் அரண்யத்திற்கு எழுந்தருளின பிறகு அயோத்தின
எவ்வாறு பாவிக்க வேண்டுமென்று இலக்குமணனுக்கு அவர
தாய் உபதேசித்தாள் என்பதை நினைக்க.

**நன்மணி:**

நல் என்பதை மணியோடு சேர்ப்பதை விட ஊரோ
சேர்ப்பது நலம்.

**ஊர்:**

திருமலையைக் காடென்று நினைக்கலாகாது, ஊரேய
அது. பலவகை விவேகிகள் நிறைந்த இடத்
காடென்னலாமோ? ஆளிகள், ஆள்கின்ற நித்யசூரிக
கோளரிகள், நரசிங்க மூர்த்தியைப் போன்றவர்கள். இப்ப
எல்லாம் சிறந்தவை.

**வேங்கடம்:**

பாபம் கழிந்தாரைப் பெறுவது பரமபதம். பாபிகள்
பாபத்தையும் போக்குவது இது.

எனவே பரமபதத்தையும் விட உயர்ந்தது வேங்கட
'இராமன் இருக்குமிடம் அயோத்தி' என்பதுபோல் பரமபதநா
இக்கலியுகத்தில் இருக்குமிடமான திருவேங்கடமே பரமபதம்

'வேடும் உடை வேங்கடம்' என்று பாசுரத்தை ஆழ்
முடித்திருப்பதை ஒட்டியே நம் தலைப்பும் அமைந்தது; ந
இதுவரை கண்ட திருமலை வேடர், குறவர் காட்சிக
முடிகிறது! முன்பொருநாள் ஒரு வேடுவன் பறவை எ
நினைத்து வில்லை வளைத்து அம்பை எய்ய, அது திருவடிக
தோய்ந்ததால் கிருஷ்ணாவதாரம் முடிவுற்றது. திருவடிகளில் அ
தோய்ந்ததால் மறைந்தவன் மீண்டும் அர்ச்சைய
தோன்றியதால், அவனுடைய திருவடிகள் தோய்ந்த மலை எ
வேடர் வில் வளைக்கும் வேங்கடம், கானமும், வானரமு
வேடும் உடை வேங்கடம்!

**ஸ்ரீ பேயாழ்வார் திருவடிகளே சரணம்**

# 15. வேழம் வழிபடும் வேங்கடம்

வேங்கடத்தை மங்களாசாஸனம் செய்த முதலாழ்வார்கள், அதன் யானைக்காட்சிகளை மிக அற்புதமாக வர்ணித்துள்ளனர். பொய்கையாழ்வார் காட்டும் யானைக்காட்சி இது:

## ஸ்ரீ பொய்கையாழ்வார்

பெருவில் பகழிக் குறவர் கைச் செந்தீ
வெருவிப் புனந் துறந்த வேழம் இருவிசும்பில்
மீன்நீழக் கண்டஞ்சும் வேங்கடமே! மேலசுரர்
கோன்வீழக் கண்டுகந்தான் குன்று (40)

*பகழி = அம்பு; செந்தீ = தீவட்டி; புனம் = கொல்லை, வயல்; வேழம் = யானை; விசும்பு = ஆகாயம்; மேல் = முன்னொரு காலத்தில்; அசுரர் கோன் = இரணியன்; குன்று = திருமலை;*

**பாசுரத்தின் பொருள்:**

பெரிய வில்லையும், அம்புகளையும் உடைய குறவர்கள், கொளுத்திய தீவட்டியையும் கையிலேந்திக் கொண்டு, தினைப்புனத்தில் பட்டி மேயும் யானையை அதட்டித் துரத்துகிறார்கள். இதனால் பயந்த யானை வயலைவிட்டு ஓடுகிறது. அப்பொழுது ஆகாயத்திலிருந்து அகஸ்மாத்தாக ஒரு எரிநட்சத்திரம் மிகுந்த ஒளியுடன் யானைக்குமுன் விழுகிறது. இருதலைக் கொள்ளி எறும்புபோல், யானை செய்வதறியாது திகைத்து, அஞ்சி நிற்கிறது, திருமலையில்.

இந்த வேங்கடமே, முன்னொரு காலத்தில் அசுரர் அரசனாகி, இரண்யகசிபுவைக் கொன்று, (தன்னுடைய பக்தனாகிய பிரகலாதனைத் துன்புறுத்திய விரோதி தொலைந்தான்) என்று மகிழ்ந்த நரசிம்ம மூர்த்தியினுடைய மலை.

தன்னுடைய பக்தர்களின் விரோதிகளை அழித்து அவர்களைக் காக்கும் பொருட்டே ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் திருமலையில் எழுந்தருளியிருக்கிறான் என்கிறார்.

தீவட்டி தடியர்களின் மிரட்டலாலும், எரிநட்சத்திரம் தன் பாதையில் விழுந்ததாலும், யானை பயந்தது போலவே பக்தனும் இவ்வுலகில் பலவித பிரச்சனைகளில் சிக்கி கதிகலங்குவதுண்டு. இவ்விதமே மகாபக்தனாகிய பிரகலாதனும், பாகவத விரோதியான இரணியகசிபுவினால் பலவித இன்னல்களுக்கு இரையானான். ''அன்று நீ பிரகலாதனை, நரசிம்மமாக அவதரித்துக் காத்தது போதாது; இன்றும் பக்தர்கள் துன்பமடையும்போது அவர்களைக் காப்பது உன் கடமை'' என்று ஏழுமலையானுக்கு ஆழ்வார் நினைவூட்டுகிறார்.

## ஸ்ரீ பூதத்தாழ்வார்

''ஞானத் தமிழ் புரிந்த நான்'' என்றே பாடத் தொடங்கிய இரண்டாவது ஆழ்வாராகிய தவத்திரு பூதத்தடிகள், ''யானே தவஞ்செய்தேன்; யானே தவமுடையேன்; யானே பெருந்தமிழன்!'' என்று மும்முறை ஒரு பாசுரத்தில் மீண்டும் தம்மைக் குறித்து பெருமிதம் கொள்கிறார். கஜேந்திரனை முதலையின் வாயிலிருந்து விடுவித்த ஸ்ரீ வேங்கடேசனுக்கு அடிமை பூண்டு, திருமலையில் புஷ்பகைங்கர்யம் செய்தது குறித்தே விளைந்த பெருமிதம் இது என்பது இதற்கு முந்தைய பாசுரத்திலிருந்து தெரிய வருகிறது. இதைக்கேட்ட வெங்கடேசப் பெருமாள் ஆழ்வாரை நோக்கி, ''நீர் நல்ல பெருந்தமிழர் என்பதை நாடு நகரமும் நன்கறிய ஒரு கவி சொல்லும், பார்ப்போம்!'' என்கிறார். உடனே நம் பெருந்தமிழர் திருவேங்கடத்தைக் குறித்து அற்புதமாக ஒரு யானைப் பாசுரத்தைப் பாடித் தம் கைவரிசையைக் காட்டுகிறார். ''யானே, யானே, யானே!'' என்று பெருமைப்பட்டவர் ''யானை, யானை, யானை!'' என்று கீழ்க்காணும் பாசுரத்தில் யானையைக் காட்டி நம்மை மகிழ்விக்கிறார்:

பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன் நின்(று)
இருகண் இளமூங்கில் வாங்கி - அருகிருந்த
தேன் கலந்து நீட்டும் திருவேங்கடம் கண்டீர்
வான் கலந்த வண்ணன் வரை''. (75)

*வேழம் = ஆண் யானை; பிடி = பெண் யானை; வரை = மலை.*

***பாசுரத்தின் பொருள்:***

*பெருகுகின்ற மதநீரையுடைய ஆண் யானை, தனது சிறந்த பெண் யானைக்கு முன்நின்று, இரண்டே கணுக்களையுடைய இளம் மூங்கில் குருத்தைப் பறித்து, அதை அருகிலிருந்த தேனடையில் தோய்த்துத் தேனுடன் கலந்து நீட்டுகின்றது திருவேங்கடமலையில். நீலமேக சியாமளனாகிய ஸ்ரீநிவாஸன் நித்யவாசம் செய்யும் திருமலையல்லவா இது!*

*ஏற்கனவே மதம் பிடித்து, திருமலையில் செருக்கித் திரிகின்றது வேழம். அழகான பெண் யானையைக் கண்டதும், காதல் ரசம் வேறு அதன் தலைக்கேறி விடுகிறது! உடனே பிடிக்குப் பிடித்தமான இனிய உணவை அதற்குத் தந்து, அதனைக் கவர நினைக்கிறது. ''இதயத்தில் இடம் பிடிக்கும் வழி, வயிற்றின் வழியாகவே செல்கிறது'' என்கிற உண்மையை நன்கு தெரிந்து வைத்திருக்கிறது வேங்கடத்து வேழம். உடனே பசுமையான இளம் மூங்கில் குருத்தைப் பிடுங்கித் தேனிலே தோய்த்து, 'குளோப் ஜாமுனை' ஊட்டுவதைப்போல், பேடையின் வாயில் ஊட்டுகிறது! முதலில் தேன் உணவு; அடுத்துத் தேன் நிலவு.*

*'இலக்கிய ரசம்' என்னும் இளம் மூங்கில் குருத்திலே, 'பக்தி ரசம்' என்கிற தேனைக் குழைத்து நம் வாயிலும் ஊட்டிவிடுகிறார் பூதத்தார்! ஆழ்வார் நமக்குப் படைக்கும் ஆரா அமுது இது. ''தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகி'' ஆராவமுதனாகிய திருவேங்கடமுடையான் அன்பர்களின் இதயங்களிலே தித்திப்பது போலவே, வேங்கடப்பிடிக்கும், திருமலையாழ்வார் விளைவித்த மூங்கில் 'ரஸகுல்லா' தித்திக்கிறது; நமக்கும் பெருந்தமிழரின் பாசுரம் திருப்பதி லட்டு போல் தித்திக்கிறது!*

**'ஆழ்வார்கள் அமுத நிலையம்' உரை:**

திருமலையிலுள்ள விலங்குகளும் தம்முடைய காப்பை நோக்கி வாழும் பேட்டிற்கு ஆதாரம் காட்டுவதால், பிராட்டியோடு உறையும் பெருமான் நம்மிடம் ஆதாரங்கொண்டு காப்பான் என்பது ஆழ்பொருள்.

**'திவ்யார்த்த தீபிகை உரை'**

எம்பெருமான் பிராட்டியை உவப்பிக்கும்படியைக் கூறுதல் இதற்கு உள்ளுறைப் பொருள்.

எம்பெருமானார் (ஸ்ரீ ராமானுஜர்) திருமலைக்கு எழுந்தருளி, த்வயத்தின் பொருளைத் திருமந்திரத்தோடும் சரம ஸ்லோகத்தோடும் சேர்த்து இனிமைப்படுத்தி உபந்யஸித்தருளினபோது, அனந்தாழ்வான் இப்பாசுரத்தை ஸ்வாமி பரமாக நிர்வகித்தருளினார்.

*திருமந்திரம், துவயம், சரமஸ்லோகம்:*

இப்பாசுரத்தில், இளமூங்கில் = 'ஓம் நமோ நாராயணாய' என்கிற திருமந்திரம். 'ஓம்' என்பது பிரணவம் எனப்படும். ப்ர + நவம் = ப்ரணவம், எப்பொழுதும் புதிதானது, இளமையானது என்று பொருள். இங்கே 'இள' என்பது பிரணவத்தைக் குறிக்கும். மூங்கில் கிருஷ்ணாவதாரத்தில் புல்லாங்குழல் கொடுத்தது; எனவே நாராயணனைக் குறிக்கும். வேங்கடவன் 'ஓம் நமோ நாராயணாய' என்கிற திருமந்திர வடிவினன்; இளமூங்கில் குழல் ஊதிய கிருஷ்ணாவதாரக் கூறுடையவன். திருமலையில் விளைந்த இளமூங்கில் இங்கே வேங்கடவனையே சிறப்பாகக் குறிக்கும். திருமந்திரம் வைணவர்களுக்கு இயல்பானது; எனவே இளமூங்கில் 'இயல் தமிழ்' ஆகிறது!

இருகண் = துவயம். 'ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே; ஸ்ரீமதே நாராயணாய நம:' என்பதே இரண்டு அடிகளையுடைய துவய மந்திரம். எனவே இங்கு இளமூங்கிலில் உள்ள இரண்டு கணுக்கள் துவயத்தைக் குறிக்கும். ஆண் யானை பெண் யானைக்கு 'இருகண் இளமூங்கில்' சத்துணவை அன்புடன் ஊட்டுவது போலவே, துவய மந்திரத்தை வைகுந்தத்தில் முதன்முதலாக ஸ்ரீமந் நாராயணன், மகாலட்சுமிப் பிராட்டியாருக்கு உபதேசித்து, ஊட்டி உவந்தான். ஆண் யானையை எம்பெருமானுக்கு உவமையாகக் கூறுதல் மரபு; எனவே பெண்

யானை பிராட்டிக்கு உவமையானது; உவகை ஊட்டும் உவமை! அலர்மேல் மங்கையுறை மார்பினன். ஆகையாலே நம் ஸ்ரீநிவாஸன் துவயமந்திர வடிவினன் ஆகிறான். இருவர் இணைந்து இசைத்ததால், 'இருகண்' இசைத்தமிழே! இருகண் இளமூங்கிலின் குழலோசையுடன், இலக்குமி-நாராயணன் இருவரும் இணைந்து இசைத்த இன்னிசை விருந்தே துவயம்.

தேன் கலந்து = சரம ஸ்லோகத்தைக் கலந்து. ''ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ'' (அனைத்து தர்மங்களையும் கைவிட்டு, என்னையே சரணடை) என்னும் கீதையின் சுலோகம் இது. சரம ஸ்லோகம், மிகவும் சுலபமான இறுதி உபாயத்தைக் கூறுவதால் பக்தர்களுக்குத் தேன் போன்றது, எனவே இதைத் 'தேன்' என்றார். 'மாமேகம் சரணம் வ்ரஜ' (என்னையே சரணம் அடை) என்பதையே வேங்கடகிருஷ்ணன் தனது வலது திருக்கையால், திருவடிகளைக் காட்டி, நமக்கு உபதேசித்துக் கொண்டிருக்கிறான். இதை நாடகமாகவே நடித்து, அபிநயமும் பிடித்துக் காட்டுவதால் ஏழுமலையான் சரம சுலோக சரீரனே ஆகி, அசல் பார்த்தசாரதியையும் அசத்திவிடுகிறான்! எனவே 'தேன் கலந்த' ஆழ்வார் பாசுரம் தேன்போன்ற நாடகத்தமிழ் ஆகவே தித்திக்கிறது.

### திருமலையில் ஸ்ரீராமானுஜர் உபதேசம்:

திருமலையில் திரிந்த ஆண் யானை, பேடைக்கு 'இருகண் இளமூங்கில் தேன் கலந்து' ஊட்டியது. அதுபோலவே, ஸ்ரீராமானுஜர் திருமலையில் அனந்தாழ்வான் முதலிய சீடர்களுக்குத் திருமந்திரம், துவயம், சரமஸ்லோகம் ஆகிய மூன்றையும் குழைத்துத் தாயினும் சாலப் பரிந்து ஊட்டினார் என்பதை அறிகிறோம்.

### பெருந்தமிழரின் பெருந்தன்மை:

திருமந்திரம், துவயம், சரமஸ்லோகம் ஆகியவை சம்ஸ்கிருதத்தில் அமைந்தவை. ஞானத்தமிழ் புரிந்த பூதத்தாழ்வாரோ, 'பெருந்தமிழன் யானே! யானே! யானே!' என்று மும்முறை ஒரே பாசுரத்தில் பெருமிதத்துடன் மார்தட்டியவர். பார்த்தார் ஆழ்வார். மூன்று சம்ஸ்கிருத மந்திரங்களையும் முறையே 'இளமூங்கில்' இயல் தமிழ்; 'இருகண்' இசைத் தமிழ்; 'தேன் கலந்த' நாடகத் தமிழ் என்று உள்ளுறைப் பொருளாகவே வைத்துப் பாடிவிட்டார். மூன்று தமிழையும் ஒரே பாசுரத்தில் ஒன்றாகக் குழைத்து, அலர்மேல் மங்கைத் தாயினும் சாலப் பரிந்து

நமக்கு ஊட்டும் இவரல்லவோ முத்தமிழ் வித்தகர், ஸர்வமந்த்ர ஸ்வதந்த்ரர்! ஸ்ரீராமானுஜர் திருமலையில் அன்று சீடர்களுக்கு மட்டுமே புகட்டியதை, ஆழ்வார் இன்றும் தமிழர்கள் அனைவருக்கும் ஊட்டிக் கொண்டிருப்பதால், இதைப் 'பெருந்தமிழரின் பெருந்தன்மை' என்றோம்.

வேங்கடத்தில் மதவேழம் மாப்பிடியோடு கூடி, தேன் கலந்த இளமூங்கில் ஊட்டியதைப் பாடினார் பூதத்தார்; கூடியதைப் பாடிவிட்டார், நாம் ஊடியதைப் பாடுவோம் என்று பேயாழ்வார் அருளிச் செய்துள்ளார்.

## ஸ்ரீபேயாழ்வார்

புரிந்து மதவேழம் மாப்பிடியோடு ஊடி
திரிந்து சினத்தால் பொருது - விரிந்தசீர்
வெண்கோட்டு முத்து உதிர்க்கும் வேங்கடமே!
மேலொருநாள்
மண்கோட்டுக் கொண்டான் மலை. (45).

வேழம் = ஆண்யானை; பிடி = பெண்யானை; புரிந்து = கூடி, கலந்து; கோடு = யானை, பன்றிகளின் தந்தம்; விரிந்த சீர் = வீரச்ரீ நிறைந்த.

**பாசுரத்தின் பொருள்:**

மதம் பிடித்த ஆண் யானை பெண் யானையுடன் கூடி, பின்பு கலகம் ஏற்பட்டதால் ஊடி அதனைப் பிரிந்து சென்றது. அதனால் ஏற்பட்ட கோபத்திற்குப் போக்குவீடாக வேழம் அங்குமிங்கும் திரிந்து கோபத்தினால் மணிப்பாறைகளில் மோதி, வீரச்ரீயையுடைய தனது வெண்மையான தந்தங்களிலிருந்து முத்துக்களை உதிர்க்கிறது. இந்தத் திருவேங்கடமே முன்னொரு காலத்தில், தன்னுடைய கோரைப்பல்லினால் பூமியை அகழ்ந்தெடுத்த ஆதிவராகப் பெருமாளின் மலை.

**பொருது:**

போர் செய்து; திருமலையிலுள்ள பளிங்குப்பாறைகளிலே யானை தன் நிழலைக் கண்டு, எதிர்யானையென்று பிரமித்து அதனோடே போர் செய்கின்றதாகவும் கொள்ளலாம்.

திருமலையிலே ஸ்ரீ வேங்கடேச அவதாரத்திற்கு முன்பே ஆதிவராகர் சுவாமி புஷ்கரணியின் கரையில் எழுந்தருளியுள்ளதை மங்களாசாஸனம் செய்கிறார்.

**"ப்ரபந்த ரக்ஷை" உரை:**

எம்பெருமானைப் பெறுவதற்கு எங்கோ போக வேண்டுமென்று நினைக்க வேண்டா. திருவேங்கடமே அவனது திருமலையாம். மதயானைகள் நிறைந்த மாமலை அது. யானை பெண்யானையோடு கலந்திருந்தபோது ஏதோ கலஹம் ஏற்பட அதனால் விட்டுப்பிரிந்து அந்தக்கோபம் தாங்காது மதத்தினால், செய்வது தெரியாமல் மலைப்பாறைகளில் தந்தங்களால் குத்திப் போர்புரிய அப்போது ச்ரேஷ்டமான அதன் தந்தங்களில் உண்டான முத்துக்கள் கீழே கண்டவிடத்தில் சிதறி விழுகின்றன. இத்தகைய வேங்கடமே முன் பூமியைக் கிடந்தெடுத்த ஆதிவராஹமூர்த்தி பூதேவியோடு உல்லாசமாய் வஸிக்கப் பரமபதத்தினின்று கொணர்ந்த திருமலையாம். முதலீரடிகளாலே தன்னை அண்டி சிற்சில பலன்களை அபேக்ஷிப்பார்க்கு (வேண்டுவோர்க்கு) எம்பெருமான் அதனையளித்து அதில் வைராக்யம் வர வழியும் ஏற்படுத்துவதும், 'விரிந்தசீர் - முத்துதிர்க்கும்' என்றதால் அப்படிப்பட்டவன் சேகரித்த பணத்தையும் விடுவதும் சொன்னதாம். இதனால் அர்த்தகாமங்களை த்யாகம் செய்வித்து வினைகளைப் போக்கும் அம்மலை என்றபடி.

இப்படி தந்தங்களினின்று முத்து உதிர்த்து, அர்த்த காமங்களை விட்டொழிக்கின்றது வேங்கடத்து வேழம். வேங்கடவன் அதனுடைய வினைகளைப் போக்கி, நற்புத்தியளிக்கிறான். களிறு கஜேந்திரனைப் போலவே ஸ்ரீ வேங்கடேசனைக் கண்டு வணங்குகிறது. இக்காட்சியை அடுத்து அருளிச் செய்கிறார்.

## ஸ்ரீ பேயாழ்வார்

**புகுமதத்தால் வாய்பூசிக் கீழ்தாழ்ந்து அருவி**
**உகுமதத்தால் கால்கழுவிக் கையால் - மிகுமதத்தேன்**
**விண்டமலர் கொண்டு விறல் வேங்கடவனையே**
**கண்டு வணங்கும் களிறு.**

புகு = வாயில் புகும்; வாய் பூசி = கொப்பளித்து; உகு = பெருகிற; மிகுமதத்தேன் = மிகுந்த மதத்தை விளைவிக்கக்கூடிய தேன்; விண்ட = மலர்ந்த; விறல் = வீரம், வெற்றி மிடுக்கு; களிறு = ஆண் யானை.

**பாசுரத்தின் பொருள்:**

திருமலையிலுள்ள ஆண் யானை, தன் மத்தகத்தினின்றும், கன்னங்களினின்றும் வாயில் புகும் மதஜலத்தால் வாய்

கொப்பளித்து, ஆசமனஞ்செய்கிறது. மேலிருந்து கீழ்வரை அருவிபோல் பெருகும் மதநீரினால் கால்களையும் கழுவிச் சுத்தம் செய்துகொள்கிறது. மிகுந்த மதத்தை (களிப்பை) உண்டாக்கக்கூடிய தேன் நிறைந்ததும், அப்பொழுதே மலர்ந்ததுமான பூவைத் துதிக்கையில் எடுத்துக்கொண்டு, வெற்றி மிடுக்கு நிறைந்த ஸ்ரீ வேங்கடாசலபதியை, சேவித்து வணங்குகின்றது.

**'ஆழ்வார்கள் அமுத நிலையம்' உரை:**

பெருமானை அண்டுவதற்குத் தகுதி வேண்டாமோ? எனில், விலங்குகளும் கூட அவனை எளிதில் பற்றித் தொண்டு செய்கின்றன என்கிறார்.

**திவ்யார்த்த தீபிகை உரை:**

திருமலையில் மதயானைகள் தாமரைப் பூக்களைப் பறித்து அப்பன் திருவடிகளில் சமர்ப்பித்து வணங்குகிறபடியை ஒரு சமத்காரம் பொலியப் பேசுகிறார். எம்பெருமான் ஸந்நிதியில் தொண்டு செய்யப்போமவர்கள் வாயைக் கொப்பளித்துக் கைகால்களை சுத்தி செய்துகொண்டு, புஷ்பங்களை எடுத்துக்கொண்டு போவது வழக்கம். இவ்வாசாரம் சாஸ்த்ரவச்யர்களான மானிட சாதியர்க்கு மாத்திரமல்ல, திருமலையிலுள்ள அஃறிணைப் பொருள்கட்கும் கோல்விழுக்காட்டிலே அமைந்திருக்கின்றது என்றார்.

**விறல் வேங்கடவன்:**

இங்ஙனே திருமலையிலுள்ள திர்யக் ஜந்துக்களும் தன்னை வணங்குமாறு ஜ்ஞானத்தைக் கொடுக்க சக்தனான திருவேங்கடமுடையான் என்ப.

**ப்ரபந்த ரக்ஷை:**

விறல் வேங்கடவனையே — விறல் = வெற்றியுடைய; ''மோக்ஷபர்யந்தமான பலன் அளிக்கும் திருவேங்கடமுடையானிடம் பாரமை காந்த்யம் (இது ஈசுவரனையே உபாயமாகப் பற்றி, ஆசாரியன் சொல்படி நடக்கும் மிகவுயர்ந்த பக்தனின் நிலை) கொள்கிறது களிறு. திர்யக்குகளும் திருவேங்கடமுடையானை ஆசாரத்துடன் தொழ முயன்று

வருகின்றன என்றால் அவனுடைய வெற்றியை என்னவென்று சொல்வது? வேங்கடம் வெற்றி பெறும் ஸ்தானம் என்று ஸ்ரீ தேசிகனும் அருளிச் செய்தார். வல்வினைகள் போர்புரிய அவற்றை மாய்க்க ப்ரயாஸப்பட்டு (பாடுபட்டு) கருணை என்ற கவசமணிந்து கையும் வில்லுமாய் வெற்றி பெறுமிடமான வேங்கடமேறி அருளினான் சார்ங்கமேந்தும் திருமால் என்றாரே''.

**நம் உரை:**

''சுவாமி புஷ்கரிணிப் பொய்கையிலே நீராடி, தேன் சொட்டும் மலரைத் துதிக்கையில் எடுத்துக்கொண்டு யானை திருவேங்கடவனை வணங்குகிறது'' என்னும் இப்பாசுரம் நமக்கு உடனே கஜலட்சுமியைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறது. இரண்டு கைகளில் தாமரைப் பூக்களையேந்தி, ஒரு பொய்கை நீரில் விரிந்த ஆயிரம் இதழ்களுடைய தாமரையின்மீது மகாலட்சுமிப் பிராட்டி, அலர்மேல் மங்கையாக நின்று கொண்டிருக்கிறாள். ஸ்ரீ வேங்கடேசனைப் போலவே அவளுடைய முன் வலதுகரம் அபயஹஸ்தமாக விளங்குகிறது; தங்கக் கையினாலே பொற்காசுகளை பக்தர்களுக்கு அள்ளி வீசிக் கொண்டிருக்கிறாள் அன்னை! இரண்டு பக்கங்களிலும் இரண்டு யானைகள் உயரத்தூக்கிய துதிக்கையில் தாமரையை ஏந்திக்கொண்டு, இலட்சுமிக்கு சமர்ப்பிக்க, நீரில் வந்து கொண்டிருக்கின்றன. சாதாரணமாக மலர்மகள் இவ்விதமே சித்தரிக்கப்படுகிறாள். யானைகளின் நெற்றியில் மகாலட்சுமி வாசம் செய்வதாகக் கூறுவர். இவ்வாறு கஜங்களால் தொழப்படுவதால், அலர்மேல் மங்கைத் தாயார் 'கஜலட்சுமி' என்றும் அழைக்கப்படுவாள்.

திருமலை கஜேந்திரன் அலர்மேல் மங்கையை வணங்காமல் ஸ்ரீநிவாஸனையே தொழுவது ஏன்? பிராட்டிக்குத் திருமலையில் கோயில் இல்லை. 'அகலகில்லேன் இறையும்' என்று ஸ்ரீநிவாஸனின் திருமார்பிலேயே மகாலட்சுமி வாசம் செய்வதால், அப்பன் 'அலர்மேல் மங்கையுறை மார்பன்' என்றே பிரசித்தமானான். திருமலை கஜேந்திர ஆழ்வார் இவ்வளவையும் தெரிந்து வைத்திருக்கிறார்! யானை புத்திசாலி அல்லவா?

'வேழம் வழிபடும் வேங்கடம்' என்று பேயாழ்வார் காட்டும் இந்த கஜேந்திர ஆழ்வாரை நினைத்தே தலைப்பும் இங்கே சூட்டினோம். மனிதர்களில் சிலர் 'கடவுள் இல்லை' என்று வணங்காமுடிகளாகத் திரிவதைப் போலவே, திருமலையிலும்

யானைகள் திரிந்ததுண்டு. இவைகளின் முடிவு பரிதாபகரமானது! திகிலூட்டும் யானைக்காட்சி ஒன்றைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்தி, கீழ்ப்பாசுரத்தில் நம்மை அசத்திவிடுகிறார் ஆழ்வார்!

## ஸ்ரீ பேயாழ்வார்

களிறு முகில்குத்தக் கை எடுத்து ஓடி
ஒளிறு மருப்பு ஒசிகை யாளி- பிளிறி
விழக் கொன்று நின்று அதிரும் வேங்கடமே! மேனாள்
குழக்கன்று கொண்டு எறிந்தான் குன்று (71)

களிறு = யானை; முகில் = மேகம்; கை = துதிக்கை; ஒளிறு = ஒளிரும், ஒளிவீசும்; மருப்பு = கொம்பு, தந்தம்; ஒசிகை = ஒடிக்கின்ற கை; பிளிறி = யானை வாய்விட்டு அலறி; அதிரும் = பெருமுழக்கம் செய்யும்; மேனாள் = மேல் நாள், முன்னொரு காலம்; குழக்கன்று = இளம் கன்று, இங்கு வத்ஸாசுரன்.

**பாசுரத்தின் பொருள்:**

திருவேங்கடமலையில் யானையானது தனது துதிக்கையைத் தூக்கிக்கொண்டு, வேகமாக ஓடி, மதயானை போலெழுந்த மேகங்களைக் குத்துகிறது. இதைக் கண்ட யாளியானது அந்த யானையின் ஒளிவீசும் தந்தங்களைக் கையினால் முறிக்கிறது; யானையை அங்கேயே வாய்விட்டு அலறி விழும்படிக் கொன்றும் விடுகிறது. பிறகு யாளிஅங்கேயே நின்று கொண்டு பெருமுழக்கம் செய்கிறது. முன்னொரு காலத்தில் இளங்கன்றின் வடிவெடுத்துக் கொண்டு தன்னைக் கொல்ல வந்த வத்ஸாசுரனை எறிதடியாகக் கொண்டு, விளாம்பழ வடிவிலிருந்த கபித்தாசுரனின் மீது எறிந்து, இரண்டு அசுரர்களையும் கொன்ற ஸ்ரீ கிருஷ்ணன் நித்யவாசம் செய்வது திருமலையாகும்.

யாளி = சிங்கத்தைப் போல் வலிய மிருகம்; இதன் சிற்பங்களைக் கோயில்களில் காணலாம். இப்படி ஒரு மிருகம் இருந்ததா, கவிஞர்களின் கற்பனையா என்று தெரியவில்லை. இங்கே 'யாளி' என்பதை சிங்கம் என்றும் கொள்ளலாம்.

**திவ்யார்த்த தீபிகை உரை:**

''மதயானை போலெழுந்த மாமுகில்காள்!'' ''கரிய மாமுகிற் படலங்கள் கிடந்தவை முழங்கிடக் களிறென்று'' என்றும்

சொல்லுகிறபடியே யானைக்கும், மேகத்திற்கும் ஒப்புமை பிரஸித்தம். ஆகவே திருமலையிலுள்ள யானையானது மலைமுகட்டில் படிந்திருந்த மேகத்தை எதிரியானதொரு யானையென்று மயங்கிப் பெரிய வேகத்தோடே சென்று துதிக்கையினால் குத்த, இதனை ஒரு யாளி கண்டு 'இக்களிற்றுக்கு இவ்வளவு மதமா?' என்று சினந்து ஓடி வந்து அவ் யானையின் மேற் பாய்ந்து அதன் கொம்பை முறித்தெறிந்து அது வாய்விட்டு அலறிக்கொண்டு விழும்படியாகக் கொலையுஞ் செய்து, அவ்வளவிலும் சீற்றம் தணியாமையாலே அவ்விடத்திலேயே நின்று மற்றுள்ள மிருகங்களும் மண்ணுண்ணும்படியாக கர்ஜிக்கின்றதாம் திருமலையில்.

**பாசுரத்தின் உட்கருத்து:**
***'ஆழ்வார்கள் அமுத நிலையம்' உரை:***

''தனது அன்பர்களின் விரோதிகளைப் போக்கும் பெருமான் உறையும் திருவேங்கட மலையில் விலங்குகளும் இதே இயல்புடையன'' என்கிறார்.

**ப்ரபந்த ரக்ஷை உரை:**

இது பாசுரத்தின் உறைபொருளை நன்கு விவரிக்கின்றது:

அண்டினவரின் தாபத்தைப் போக்கித் திருமால் போல் விள்ங்கும் முகிலை மதம் பிடித்த யானையானது தனக்குத் துதிக்கை, எம்பெருமானைத் துதித்துத் தொழ ஏற்பட்டதென எண்ணாமே உதறித்தள்ள வாய்த்ததாக வைத்து ஓடி அதனால் குத்தும்போது, முகில் வண்ணனைப் போன்ற முகிலை விரோதிக்கும் அதை மருப்பொசிக்க (தந்தத்தை ஒடிக்கக்) கையோங்கி விரைந்து வந்து அது கூச்சலிட்டு விழுந்தழியும்படி கொன்று நின்று யாளியானது, விரோதிகளை வெல்லவே ஏற்பட்டது வேங்கடமென மீண்டும் முழங்கி வரும். அசுரனாய் வேற்றுருவம் கொண்டு தீங்கிழைக்க வருமவரைக் கொல்லும் கண்ணனுக்கு மேக மண்டலமளாவிய இம்மலையே தகுமான திருப்பதியென்றபடி.

மேகமண்டலம் அளாவியது மலையென்றார். ஆச்ரித விரோதிகளைக் (ஆச்ரிதர் = பக்தர்) கொல்வது கூறப்பட்டது.

திருமலையில் திருமாலிடம் பக்திபூணாமல் திரிந்த யானையை யாளிஅடித்துக் கொன்ற திகில் படத்தைக் கண்டோம்.

இது பேயாழ்வார் தீட்டிய சொல்லோவியம். இதையே தூக்கி சாப்பிட்டு விடும் காட்சியைத் திருமழிசையாழ்வார் சித்தரிக்கிறார்! குருவை மிஞ்சிய சிஷ்யர் போலும்! திருமலையில் யானைகளை அப்படியே சுளையாக விழுங்கி ஏப்பம் விடும் பிரம்மாண்டமான மலைப்பாம்புகள் உண்டு என்கிறார். பயந்து விடாதீர்கள். இந்நாளில் அப்படி எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை! மனிதனே இன்று உலகிலுள்ள விலங்குகளையெல்லாம் சீக்கிரம் முடித்து விடுவான் போலிருக்கிறது; பயப்பட வேண்டியது அவையே!

## ஸ்ரீ திருமழிசையாழ்வார்

அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண
இழைப்பன் திருக்கூடல் கூட — மழைப்பேர்
அருவி மணிவரன்றி வந்து இழிய யானை
வெருவி அரவு ஒடுங்கும் வெற்பு

வரன்றி வந்து இழிய = திரட்டிக் கொண்டு வந்து விழ; வெருவி = பயந்து; அரவு = பாம்பு; வெற்பு = மலை.

**பாசுரத்தின் பொருள்:**

திருவேங்கடத்தானைக் காண விரும்பி நான் வாய்விட்டு அழைக்கிறேன். மழைபோல் பொழியும் பெரிய அருவிகள் அங்குமிங்கும் கிடக்கும் இரத்தினங்களைத் திரட்டிக்கொண்டு வந்து திருமலையில் விழுகின்றன. இரத்தினங்கள் வீசும் ஒளியை அக்னிப்பிழம்பாக நினைத்து யானைகள் பயந்து ஓடுகின்றன; மலைப்பாம்புகள் அதை மின்னல் என்று நினைத்து மயங்கி புற்றுக்குள் ஒடுங்கிக் கொள்கின்றன. இத்தகைய திருமலை சென்று சேரவேண்டுமென்று விரும்பி நான் 'திருக்கூடல்' என்றும் சகுனம் இழைத்துப் பார்க்கிறேன்.

**திருக்கூடல் இழைப்பன்:**

கூடல் இழைத்தலாவது, ஒரு பெரிய வட்டம் வரைந்து, அதற்குள் சுழி சுழியாக முழுவதும் எழுத வேண்டும். பிறகு அவற்றை இரண்டிரண்டாகக் கூட்டி மீதமில்லாமல் இருந்தால் வேண்டியது நடக்கும்; இல்லாவிடில் கூடாது என்று அறிவது பழந்தமிழர் சகுனம் பார்க்கும் வகைகளில் ஒன்று. சுழிகளை சுழிக்கும்போதே சாமர்த்தியமாக முன்கூட்டியே எண்ணிக்கையைக்

கூட்டி, இரட்டைப் படையில் முடியுமாறு பார்த்துக் கொள்ளக்கூடாது! இது கூடல், கூடல் இழைத்தல், கூடல் வளைத்தல், கூடற்குறி என வழங்கப்படும்.

கூடலிழைத்தல் பெண்டிர்க்கே உரியதென்றும், இங்கு "இழைப்பன் திருக்கூடல்" என்று ஆழ்வார் அருளிச் செய்தது நாயகீ ஸமாதியில் என்றும் அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்வர்.

**திவ்யார்த்த தீபிகை உரை:**

பின்னடிகட்கு இரண்டு வகையாகக் கருத்துரைக்கலாம்.... அருவிகளில் விழுந்த ரத்னங்களைக் கண்ட யானைகள் "இவை கொள்ளிவட்டம்" என்று ப்ரமித்து ஓடப்புக்கவாறே மலைப்பாம்பின் வாயிலே விழும்படியாயின எனவுமாம்.

சில மலைப்பாம்புகள் யானையைப் பார்த்து அஞ்சி ஒடுங்கி ஓடிப்போய்விடும் என்றும், பல மலைப்பாம்புகள் யானையை அணுகி விழுங்கி விடுமென்றும் தமிழ் நூல்களால் தெரிகிறது.

'திரையன் பாட்டு' என்ற ஓர் பழைய நூலில்—

"கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி
திடங்கொண்டறைதல் திண்ணமென்றஞ்சிப்
படங்கொள் பாம்பும் விடரகம்புகூஉம்
தடங்கொள் உச்சித் தாழ்வரையடுக்கத்து"

என்றதனால் மலைப்பாம்பு யானையைக் கண்டு அஞ்சி ஒளிக்கும் என்பது தெரிகின்றது.

**பாடலின் கருத்து:**

சிறிய கண்ணையுடைய யானை தனது நீண்ட துதிக்கையால் பலமாக அறைந்து விடுவது நிச்சயம் என்று பயந்து, படமெடுக்கும் பாம்பு, மலைச்சரிவிலுள்ள புற்றில் புகுந்து கொள்ளும்.

"இடிகொள் வேழத்தை எயிற்றொடும் எடுத்துடன் விழுங்கும்
கடியமாசுணம் கற்றறிந்தவர் என அடங்கிச்
சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாமித்தேறப்
படிகடாமெனத் தாழ்வரை கிடப்பன பாராய்"

என்ற கம்பராமாயணப் பாட்டிலிருந்து மலைப்பாம்பு யானையை விழுங்கும் எனத் தெரிகிறது.

*இது பேயாழ்வார் தீட்டிய சொல்லோவியம். இதையே தூக்கி சாப்பிட்டு விடும் காட்சியைத் திருமழிசையாழ்வார் சித்தரிக்கிறார்! குருவை மிஞ்சிய சிஷ்யர் போலும்! திருமலையில் யானைகளை அப்படியே சுளையாக விழுங்கி ஏப்பம் விடும் பிரம்மாண்டமான மலைப்பாம்புகள் உண்டு என்கிறார். பயந்து விடாதீர்கள். இந்நாளில் அப்படி எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை! மனிதனே இன்று உலகிலுள்ள விலங்குகளையெல்லாம் சீக்கிரம் முடித்து விடுவான் போலிருக்கிறது; பயப்பட வேண்டியது அவையே!*

## *ஸ்ரீ திருமழிசையாழ்வார்*

அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண
இழைப்பன் திருக்கூடல் கூட — மழைப்பேர்
அருவி மணிவரன்றி வந்து இழிய யானை
வெருவி அரவு ஒடுங்கும் வெற்பு

*வரன்றி வந்து இழிய = திரட்டிக் கொண்டு வந்து விழ; வெருவி = பயந்து; அரவு = பாம்பு; வெற்பு = மலை.*

***பாசுரத்தின் பொருள்:***

*திருவேங்கடத்தானைக் காண விரும்பி நான் வாய்விட்டு அழைக்கிறேன். மழைபோல் பொழியும் பெரிய அருவிகள் அங்குமிங்கும் கிடக்கும் இரத்தினங்களைத் திரட்டிக்கொண்டு வந்து திருமலையில் விழுகின்றன. இரத்தினங்கள் வீசும் ஒளியை அக்னிப்பிழம்பாக நினைத்து யானைகள் பயந்து ஓடுகின்றன; மலைப்பாம்புகள் அதை மின்னல் என்று நினைத்து மயங்கி புற்றுக்குள் ஒடுங்கிக் கொள்கின்றன. இத்தகைய திருமலை சென்று சேரவேண்டுமென்று விரும்பி நான் 'திருக்கூடல்' என்றும் சகுனம் இழைத்துப் பார்க்கிறேன்.*

***திருக்கூடல் இழைப்பன்:***

*கூடல் இழைத்தலாவது, ஒரு பெரிய வட்டம் வரைந்து, அதற்குள் சுழி சுழியாக முழுவதும் எழுத வேண்டும். பிறகு அவற்றை இரண்டிரண்டாகக் கூட்டி மீதமில்லாமல் இருந்தால் வேண்டியது நடக்கும்; இல்லாவிடில் கூடாது என்று அறிவது பழந்தமிழர் சகுனம் பார்க்கும் வகைகளில் ஒன்று. சுழிகளை சுழிக்கும்போதே சாமர்த்தியமாக முன்கூட்டியே எண்ணிக்கையைக்*

கூட்டி, இரட்டைப் படையில் முடியுமாறு பார்த்துக் கொள்ளக்கூடாது! இது கூடல், கூடல் இழைத்தல், கூடல் வளைத்தல், கூடற்குறி என வழங்கப்படும்.

கூடலிழைத்தல் பெண்டிர்க்கே உரியதென்றும், இங்கு "இழைப்பன் திருக்கூடல்" என்று ஆழ்வார் அருளிச் செய்தது நாயகீ ஸமாதியில் என்றும் அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்வர்.

**திவ்யார்த்த தீபிகை உரை:**

பின்னடிகட்கு இரண்டு வகையாகக் கருத்துரைக்கலாம்.... அருவிகளில் விழுந்த ரத்னங்களைக் கண்ட யானைகள் "இவை கொள்ளிவட்டம்" என்று ப்ரமித்து ஓடப்புக்கவாறே மலைப்பாம்பின் வாயிலே விழும்படியாயின எனவுமாம்.

சில மலைப்பாம்புகள் யானையைப் பார்த்து அஞ்சி ஒடுங்கி ஓடிப்போய்விடும் என்றும், பல மலைப்பாம்புகள் யானையை அணுகி விழுங்கி விடுமென்றும் தமிழ் நூல்களால் தெரிகிறது.

'திரையன் பாட்டு' என்ற ஓர் பழைய நூலில்—

"கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி
திடங்கொண்டறைதல் திண்ணமென்றஞ்சிப்
படங்கொள் பாம்பும் விடரகம்புகூஉம்
தடங்கொள் உச்சித் தாழ்வரையடுக்கத்து"

என்றதனால் மலைப்பாம்பு யானையைக் கண்டு அஞ்சி ஒளிக்கும் என்பது தெரிகின்றது.

**பாடலின் கருத்து:**

சிறிய கண்ணையுடைய யானை தனது நீண்ட துதிக்கையால் பலமாக அறைந்து விடுவது நிச்சயம் என்று பயந்து, படமெடுக்கும் பாம்பு, மலைச்சரிவிலுள்ள புற்றில் புகுந்து கொள்ளும்.

"இடிகொள் வேழத்தை எயிற்றொடும் எடுத்துடன் விழுங்கும்
கடியமாசுணம் கற்றறிந்தவர் என அடங்கிச்
சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாமித்தேறப்
படிகடாமெனத் தாழ்வரை கிடப்பன பாராய்"

என்ற கம்பராமாயணப் பாட்டிலிருந்து மலைப்பாம்பு யானையை விழுங்கும் எனத் தெரிகிறது.

*கம்பர் பாடலின் கருத்து:*

இடிபோல் முழங்கும் யானையை தந்தத்துடன் எ உடனடியாக மலைப்பாம்பு விழுங்கிவிடும். இருப்பினுட் சடைமுடி தரித்த முனிவர்களைக் கண் கற்றறிந்தவர்களைப்போல அடங்கி, அவர்கள் தன்னை ட மலையேறுவதற்கு ஏற்றபடி, மலைச்சரிவில் படி படுத்துக்கொள்கிறது.

மிகவும் அற்புதமான சொல்லோவியத்தைக் கவிச்சக்கர தீட்டியுள்ளார். முதலாழ்வார்களைப் போன்ற மகான் முன்னிலையில் யானையை விழுங்கும் பாம்பும் சாது விடுகிறது! சத்சங்கம் அத்தனை மகத்துவம் வாய்ந்தது. ''படி கிடந்து உன் பவளவாய் காண்பேனே!'' என்று திருமலை படியாகக் கிடந்து வேங்கடவனின் பவளவாய் காண விரு குலசேகர ஆழ்வாரைப் போல, கம்பநாடரின் மலைப்ட முனிவர்களும், அடியார்களும் கிடந்து இயங்கும் படியா சாஷ்டாங்கமாகத் தரையில் படுத்துவிடுகிறது.

''யானையைக் கண்டு மலைப்பாம்பு அஞ்சும்'' 'திரையன் பாட்டுப்' பாடிய புலவர்; ''யானையை அது வி( விடும்'' என்று பாடிய கவிச்சக்கரவர்த்தி கம்பர்; இருவரை சேர்த்து விழுங்கிவிடும் அளவிற்குக் கவித்திறம் பல தெய்வப்புலவர் நம் திருமழிசைப் பிரான் எ( இப்பாசுரத்திலிருந்து தெரிகிறது. எப்படி என்கிறீர்களா? போல் அமைந்துள்ள கடைசி இரண்டு அடிகளைப் பாருங்க

> ''அருவி மணிவரன்றி வந்து இழிய யானை
> வெருவி அரவு ஒடுங்கும் வெற்பு''

என்கிறார். இங்கே ''யானை வெருவி அரவு ஒடுங்கும் வெ என்பதற்கு இரண்டு விதமாகப் பொருள் கூறலாம்:

அ) யானையைக் கண்டு, (அல்லது அருவி அடித்து எ இரத்தினத்தை மின்னல் என நினைத்து) பாம்பு ஒடு திருமலை. இதுவே திரையன்பாட்டின் கருத்து.

ஆ) அருவி அடித்து வரும் இரத்தினங்க கொள்ளிக்கட்டைகள் என்று நினைத்து ஓடும் யா மலைப்பாம்பின் வாயிலே புகுந்து ஒடுங்கி, அடங்கும் திரும இதுவே கம்பன் கூறிய கருத்து.

இப்படி இருபுலவர்களும் விரித்துக்கூறிய இருவேறு கருத்துக்களை ஒரேயடியாக ஈரடிகளில் ஒடுக்கி விடுகிறார் மழிசையார்!

இயற்கை என்னும் தீங்கரும்பை ஆராய்ந்து எடுத்து, கவித்திறன் என்னும் உருளையால் அதை நெருக்கிச் சாறு பிழிந்து, அதில் பக்திரசம் என்னும் பனிக்கட்டியையும் சேர்த்து, உலக ஆசை என்னும் தாகம் தணிய நமக்குத் தருகின்றனர் இன்கவி பாடிய இப்பரம கவிகள்!

**பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார்:**

முதலாழ்வார்கள் காட்டும் திருமலைக்காட்சிகள் குறித்துக் கூறுவது—

''இயற்கையை நாம் காண்பது ஒரு வகை. நம் மனத்தில் அஃது ஒருவித சலனத்தையும் ஏற்படுத்துவதில்லை. அது கவிஞர்களிடம் பல்வேறு வித சலனங்களை ஏற்படுத்திப் பல்வேறு கற்பனைக் காட்சிகளைப் படைக்கத் தூண்டுகின்றது. கவிஞர்கள் பக்தர்களாக இருப்பின் அவர்கள் பிறிதோர் உலகத்தையே படைத்து விடுகின்றனர்; அதில் தத்துவக் கருத்துக்களையும் மிளிரச் செய்து விடுகின்றனர். இவை இயற்கையைத் துய்ப்பவர்கட்கு எழிலைக் காட்டி மகிழ்விக்கின்றன; முருகுணர்ச்சியையும் தூண்டுகின்றன. பக்திக்கண் கொண்டு நோக்குபவர்கட்கு பரவசத்தை ஏற்படுத்திப் பரமனின் விசுவரூப தரிசனத்தையே காட்டி விடுகின்றது. இத்தகைய பாசுரங்களைப் படித்து அநுபவிக்கக் கற்றுக்கொள்ளாவிடில் நமக்கு இவ்வுலகில் ஆறுதல் அளிக்கும் பொருளே இல்லை என்று ஆகிவிடும்''.

**ஸ்ரீ பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்**

# 16. முதலாழ்வார்கள் கண்ட திருமலை

சித், அசித், ஈசுவரன் என்று மூவகைப்பட்ட வைணவத் தத்துவம் 'தத்துவத் திரயம்' (திரயம் = மூன்று) எனப்படும். சித் (உயிருள்ள ஜீவராசிகள), அசித் (ஜடப்பொருள்) ஆகிய இரண்டும் ஈசுவரனுக்கு உடல் என்பர்; இந்த உறவு 'சரீர - சரீரி பாவனை' எனப்படும். அசித்தும் பகவான் படைப்பாதலால் அதுவும் வழிபாட்டிற்குரியது.

திருமலையின் நாம் கண்ட வானரங்கள், யானைகள், வேடர்கள், குறவர்கள் 'சித்' வகையைச் சேர்ந்தவர். மலை 'அசித்' ஆகும். வைகுந்தத்திலிருந்த கிரீடாசலமே கருடபகவானால் ஸ்ரீமந்நாராயணன் ஆணைப்படி கொண்டு வரப்பட்டு பூவுலகில் வைக்கப்பட்டதால், திருமலை 'கருடாசலம்' எனப்படும். ஆதிசேஷனே சேஷகிரியாக எழுந்தருளியிருப்பதாகக் கூறுவர். ஏழுமலை வெறும் கல் அல்ல; எம்பெருமானின் சத்துவகுணமே இறுகித் திருமலையானது எனலாம். எனவே வேங்கடம் 'திருமலையாழ்வார்' என்றே போற்றப்படும். மிகவும் பிரசித்தி பெற்ற இந்த ஆழ்வார் ஏகப்பட்ட திருநாமங்களுடன் எழுந்தருளியிருக்கிறார். சிந்தாமணிகிரி, ஞானகிரி, வேங்கடகிரி, ஸ்ரீனிவாசகிரி, தீர்த்தகிரி, சுவர்ணகிரி, ஸ்ரீசைலகிரி, ஆனந்தகிரி, நாராயணகிரி, வைகுந்தகிரி, வேதகிரி, யமகிரி, சிம்மகிரி, வராககிரி, நீலகிரி என்றும், சேஷசைலம், கருடாசலம், வேங்கடாசலம், சேஷாசலம் என்றும்; வேங்கடாத்ரி, நாராயணாத்ரி, விருஷபாத்ரி, விருஷாத்ரி, அஞ்சநாத்ரி, சேஷாத்ரி, ஆநந்தாத்ரி, என்றும் அழைக்கப்படும் ஏழுமலை. இருப்பினும் வேங்கடம், திருமலை ஆகிய திருநாமங்களே இதற்கு சாதாரணமாக வழங்கப்படும்.

''சென்று சேர்திரு வேங்கடமாமலை
ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே''

என்று நம்மாழ்வார் திருமலையை மங்களாசாஸனம் செய்திருக்கிறார். திருமலையாழ்வாரை வணங்கினாலே நம்முடைய பாவவினைகள் அழிந்து விடும். முதல் நான்கு ஆழ்வார்கள் திருமலையைக் குறித்துப் பாடியுள்ள சில பாசுரங்களை இங்கு காண்போம்.

## ஸ்ரீ பொய்கையாழ்வார்

எழுவார் விடைகொள்வார் ஈன்துழாயானை
வழுவா வகை நினைந்து வைகல் - தொழுவார்
வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடமே! வானோர்
மனச்சுடரைத் தூண்டும் மலை. (மு.தி. 26)

வழுவா வகை = பிரியாமல் இருக்க வகை; வைகல் = தினந்தோறும்; நந்துவிக்கும் = அணைக்கும், அழிக்கும்; மனச்சுடர் = திருவுள்ளமாகிய விளக்கு.

**பாசுரத்தின் பொருள்:**

சிலர் (எழுவார்) செல்வம் வேண்டி ஏழுமலையானை வணங்குவர்; சிலர் (விடை கொள்வார்) கைவல்யம் (மோட்சம்) வேண்டி, அதைப் பெற்றதும் அவனை விட்டுப் பிரிவர்; ஆயினும் பக்தர்கள் இனிய துழாய் (துளசி) மாலைகளணிந்த ஸ்ரீவேங்கடாசலபதியை என்றும் பிரியாமலிருக்க விரும்பி அவனை நாள்தோறும் தொழுவார்கள். அவரவர்களது பாவவினைகளாகிய தீயை அணைக்கக்கூடியது வேங்கடம். நித்யசூரிகளுடைய திருவுள்ளமாகிய விளக்கைத் தூண்டி விளங்கச் செய்வதும் திருமலையே.

**'ஆழ்வார்கள் அமுத நிலையம்' உரை:**

அவதாரத்திற்குப் பிற்பட்டவர்களாகிய நாம் தொழுது உய்யுமாறு திருமலையிலே பெருமான் உறைந்துள்ளான்.

**'திவ்யார்த்த தீபிகை' உரை:**

கீழ்ப்பல பாசுரங்களில் விபவாவதார சேஷ்டிதங்களை (செயல்களைப்) பேசி அநுபவித்த ஆழ்வார், என்றைக்கோ கழிந்த அவ்வவதாரங்களின் திருக்குணங்கள் இன்றைக்கும் நன்கு

விளங்குமாறு, பின்னானார் (பின் தோன்றியவர்கள்) வணங்கும் சோதியாக சேவை சாதித்து அருள்கின்ற அர்ச்சாவதாரங்களையும் அனுபவிக்க ஆசை கொண்டு, ''தென்னனுயர் பொருப்பும் தெய்வவடமலையும்'' என்னும் இரண்டு திருமலைகளுள் திருவேங்கடமலையிலே திருவுள்ளஞ்சென்று அவ்விடத்தைப் பேசி அனுபவிக்கிறார் இப்பாட்டில். எம்பெருமானிலுங்காட்டில் எம்பெருமானோடு சம்பந்தம் பெற்ற பொருள்களே பரம உத்தேசியமென்று கொள்ளுகிறவர்கள் ஆகையாலே, திருவேங்கடமுடையான் வரையில் போகாமல், அவனுடைய சம்பந்தம் பெற்றதான திருமலையோடே நின்று அனுபவிக்கிறார்.

**எழுவார்:**

இங்கு 'எங்களுக்கு ஐச்வர்யத்தைத் தரவேணும்'' என்று பிரார்த்தித்து அது கைப்பட்டதும் எம்பெருமானைவிட்டு எழுந்து போகிறவர்கள் என்றாவது, ஐச்வர்யம் வேணுமென்று மேலே மேலே பிரார்த்திக்குமவர்கள் என்றாவது கொள்க. இவர்களுடைய வினைச்சுடரை நந்துவிக்கையாவது ஐச்வர்ய ப்ராப்திக்கு விரோதியான பாவங்களைத் தொலைத்து ஐச்வர்ய விருப்பத்தை நிறைவேற்றுகை.

**விடைகொள்வார்** என்றால் விட்டு நீங்குகிறவர்கள் என்கை; ஸந்தர்ப்பம் நோக்கி இங்கே கைவல்யார்த்திகளைச் சொல்லுகிறது. அவர்களுடைய வினைச்சுடரை நந்துவிக்கையாவது - ஆத்மானுபவத்திற்கு விரோதியான பாவங்களைத் தொலைத்துக் கைவல்யானுபவத்தை நிறைவேற்றுகை.

**ஈன்துழாயானை வழுவாவகை நினைந்து வைகல் தொழுவார்** பரமைகாந்திகளான பகவத்பக்தர்கள்; அவர்களுடைய வினைச்சுடரை நந்துவிக்கையாவது மாறிமாறிப் பலபிறப்பும் பிறக்கும்படியான தீவினைகளைத் தொலைத்து முத்தியளிக்கை ஆக வேண்டுவோர் வேண்டினபடியே அநிஷ்ட நிவ்ருத்தியையும் (வேண்டாததை விலக்கியும்) இஷ்டப்ராப்தியையும் செய்விக்கவல்லது திருவேங்கடம் என்றதாயிற்று.

**வானோர் மனச்சுடரைத் தூண்டும் மலை:**

ஒரு நெருப்பை அணைக்கும்; ஒரு நெருப்பை அபிவிருத்தி செய்யும் என்று சமத்காரமாக அருளிச் செய்கிறார். வானோர் மனச்சுடரைத் தூண்டுகையாவது - பரமபதத்திலே பரத்வகுணத்தை

அனுபவித்துக் கொண்டிருக்கிற நித்யசூரிகளை, இங்கு வந்து ஸௌலப்ய, ஸௌசீல்யாதி குணங்களை அனுபவிக்குமாறு உத்ஸாஹமூட்டுதலாம்.

## ஸ்ரீ பூதத்தாழ்வார்

நெறியார் குழற்கற்றை முன்னின்று பின்தாழ்ந்து
அறியாது இளங்கிரி என்றெண்ணி - பிரியாது
பூங்கொடிகள் வைகும் பொருபுனற் குன்றென்னும்
வேங்கடமே! யாம் விரும்பும் வெற்பு. (இ.தி. 53)

நெறி = வழி, பாதை; நெறியார் = திருமலை வழியிலே இருப்பவர்கள்; குழற்கற்றை = சடைமுடி; இளங்கிரி = சிறியமலை; வைகும் = படரும்; பொருபுனல் = அலையெறியும் அருவி; வெற்பு = மலை.

***பாசுரத்தின் பொருள்:***

திருமலைக்குச் செல்லும் வழியில் தவம் செய்யும் தவசியர்களது சடைமுடிக்கற்றைகள் முன்புறம் உயர்ந்தும், பின்னே முதுகுப்புறம் தாழ்ந்தும் இருக்கின்றன. மனிதன் என்று அறியாமல், சிறிய மலை என்றெண்ணி, அவ்விடம் விட்டுப் பிரியாமல் பூங்கொடிகள் அவர்கள் மீதே படர்கின்றன. அலையெறிகின்ற அருவிகளையுடைய 'திருமலை' என்று புகழ்பெற்ற வேங்கடமே நாம் விரும்பும் மலையாகும்.

***'திவ்யார்த்த தீபிகை' உரை:***

திருவேங்கடமலையை ஒரு சமத்காரம் பொலிய வருணிக்கிறார். திருமலை யாத்திரை வருகின்ற மஹான்கள் பலர் ''வெறியார் தண்சோலைத் திருவேங்கடமலைமேல் **நெறியாய்க்** கிடக்கும் நிலையுடையேன் ஆவேனே'' என்று ஸ்ரீ குலசேகரப் பெருமாள் விரும்பினபடியே, திருமலை ஏறும் வழியிலே மிக்க ஆதாரம் வைத்து, திருமலை மேற்சென்று வாழ்வதிற்காட்டிலும் திருமலைவழியிற் கிடப்பதையே பரம உத்தேச்யமாகக் கொண்டு அவ்வழியிலே வீற்றிருந்து எம்பெருமானைச் சிந்தை செய்கின்றனர். அப்போது மூச்சுவிடுதல், உடம்பு அசைத்தல் முதலியன ஒன்றுஞ்செய்யாதே, வால்மீகி முதலிய மஹரிஷிகளைப்போலே யோகநிலையில் ஆழ்ந்து கிடக்கின்றனர். அன்னவர்களது கூந்தல் கற்றையானது முன்னின்று பின்

தாழ்ந்திருப்பதைக் கண்ட பூங்கொடிகளானவை 'சில மனிதர்கள் வீற்றிருக்கின்றார்கள்' என்றும் 'அவர்களுடைய குழல்கற்றை தாழ்ந்திருக்கின்றது' என்றும் தெரிந்து கொள்ளாமல், 'இவை சிறுமலைகள்' என்றெண்ணி அவற்றின் மேலே படர்கின்றனவாம். படர்ந்து, வால்மீகி முனிவர்மீது புற்று மூடினாற்போலே இந்த பக்தர்களின் மேலும் பூங்கொடிகள் படர்ந்திருப்பது அற்புதமான ஒரு காட்சியாய் அமைந்தது. இப்படிப்பட்ட காட்சிக்கு இடமான திருமலையே நாம் விரும்பத்தக்க மலையாம் - என்றாயிற்று.

## ஸ்ரீ பேயாழ்வார்

வெற்பென்று வேங்கடம் பாடும் வியன்துழாய்
கற்பென்று சூடும் கருங்குழல்மேல் - மற்பொன்ற
நீண்டதோள் மால்கிடந்த நீள்கடல் நீராடுவான்
பூண்டநாள் எல்லாம் புகும். (மூ. தி. 69)

வியன்துழாய் = வியக்கத்தக்க துளசி; மற்பொன்ற = மல் பொன்ற, மல்லர்கள் அழியும்படியான; மால் = திருமால்; நீள்கடல் = திருப்பாற்கடல்.

ஆழ்வார் ஒரு தலைவி நிலையை அடைந்து பாடுவது முதலிய செயல்களை அவளது திருத்தாயார் கூறுவதாக இச்செய்யுள் அமைந்துள்ளது. இது தாய்ப்பாசுரம் என்பர்.

**பாசுரத்தின் பொருள்:**

என் மகளானவள் ஏதேனும் ஒரு மலையைப் பற்றிய பேச்சு நேர்ந்தாலும், திருவேங்கட மலையைப் பற்றிப் பாடுகிறாள். தனது கற்புக்குத் தகுந்ததென்று வியக்கத்தக்க துளசியைத் தனது கருங்கூந்தலில் சூடிக்கொள்கிறாள். மல்லர்கள் அழியும்படியான நீண்ட தோள்களையுடைய திருமால் பள்ளிகொண்டுள்ள பரந்த திருப்பாற்கடலிலே நீராடுவதற்காக விடிந்த விடிவுகள் தோறும் புறப்படுகின்றாள்.

இப்பாசுரத்தில் 'கற்பென்று' பாதிவ்ரத்யத்தையும், 'கருங்குழல்' என்று பெண்ணின் கூந்தலையும் கூறுவதால், 'என் மகள்' என்று ஒரு பெண்ணை எழுவாயாகக் கொள்ள வேண்டும்.

**மற்பொன்ற:**

மல்லர்களையழித்த; கடலில் புகுந்து மதுகைடபர் என்னும் அசுரர்களைக் கொன்றதையும், கிருஷ்ணாவதாரத்தில் சாணூரன், முஷ்டிகன் என்கிற மல்லர்களை அழித்ததையும் கூறுகிறார்.

**பூண்ட நாள் எல்லாம்:**

பூண்ட = பூட்டிய; சூரியனுடைய தேரிலே குதிரையைப் பூட்டிய நாள் எல்லாம் என்கிறபடியே, 'விடிந்த விடிவுகள் தோறும்' என்று பொருள்பட்டது.

**'திவ்யார்த்த தீபிகை' உரை:**

எம்பெருமானை அனுபவித்தல் பல வகைப்பட்டிருக்கும்: அவனுடைய திருநாமங்களைச் சொல்லி அனுபவித்தல், திருக்கல்யாண குணங்களைச் சொல்லி அனுபவித்தல், திவ்யசேஷ்டிதங்களை (அவதாரச் செயல்களைச்) சொல்லி அனுபவித்தல், வடிவழகை வருணித்து அனுபவித்தல், அவனுகந்தருளிய திவ்ய தேசங்களின் வளங்களைப் பேசி அனுபவித்தல், அங்கே அபிமானமுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களின் பெருமையைப் பேசி அனுபவித்தல் என்று இப்படிப் பலவகைப்பட்டிருக்கும் பகவதனுபவம்.

இவ்வகைகளில் பரமவிலக்ஷணமான மற்றொரு வகையுமுண்டு: அதாவது - தாமான தன்மையை (ஆண்மையை) விட்டுப் பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்றுவாயாலே பேசி அனுபவித்தல் (இது அந்யாபதேசம் எனப்படும்). இப்படி அனுபவிக்கும் திறத்தில் தாய்ப்பாசுரம், தோழிப்பாசுரம், மகள் பாசுரம் என்று மூன்று வகுப்புகளுண்டு. இவை நம்மாழ்வார், திருமங்கையாழ்வார்களது அருளிச்செயல்களில் (பாட்டுகளில்) விசேஷமாக வரும். முதலாழ்வார்களின் திருவந்தாதிகளில் ஸ்திரீபாவனையினாற் பேசும் பாசுரம் வருவதில்லை. ச்ருங்கார ரஸத்தின் ஸம்பந்தம் சிறிதுமின்றியே கேவலம் சுத்த பக்திரஸமாகவே பாசுரங்கள் அருளிச்செய்தவர்கள் முதலாழ்வார்கள். ஆயினும் இப்பாசுரம் ஒன்று தாய்வார்த்தையாகச் செல்லுகிறது. பேயாழ்வாராகிய பெண்பிள்ளையின் நிலைமையை அவளைப் பெற்று வளர்த்த திருத்தாயார் பேசுவதாக அமைக்கப்பட்ட பாசுரம் இது. "என்னுடைய மகளானவள்" என்ற எழுவாய் இதில் இல்லையாதலால் கற்பித்துக்கொள்ள வேண்டும்.

இப்பிரபந்தத்தில் அந்யாபதேசப் பாசுரம் வேறொன்றும் இல்லாதிருக்க இஃதொன்றை மாத்திரம் இங்ஙனே தாய்ப்பாசுரமாகக் கொள்ளுதல் சிறவாதென்றும், 'என் மகள்' என்ற

எழுவாய் இல்லாமையாலும் இவ்வர்த்தம் உசிதமன்று என்றும் சிலர் நினைக்கக் கூடுமாதலால் இப்பாசுரத்திற்கு வேறுவகையான நிர்வாஹமும் பூர்வர்கள் அருளிச் செய்துள்ளனர்.

எங்ஙனே எனில்: ''பாடும், சூடும், புகும்'' என்ற வினைமுற்றுக்களை முன்னிலையில் வந்தனவாகக் கொண்டு, ''உலகத்தவர்களே! நீங்கள் ஏதாவதொரு மலையைப் பாடவேண்டில் திருவேங்கடமலையைப் பாடுங்கள்; ஏதேனும் ஒரு மலரைக் குழலில் சூடவேண்டில் திருத்துழாய் மலரைச் சூடிக்கொள்வதே சேஷத்வத்திற்கு உரியதென்று கொண்டு அதனைச் சூடுங்கள்; நீராடுவதற்குத் திருப்பாற்கடலிலே சென்று புகுங்கள்'' என்பதாக.

இங்கே பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீ ஸூக்தி காண்மின்: ''இப்பிரகரணத்தில் (பிரபந்தத்தில்) கீழும் மேலும் அந்யாபதேசமின்றிக்கே யிருக்க இப்பாட்டொன்றும் இப்படிக் கொள்ளுகிறதென்னென்று நிர்வஹிப்பர்கள்... திருமலையைப் பாடுங்கோள்... திருத்துழாயைச் சூடுங்கோள்... விரோதி நிரஸந சீலனானவன் கிடந்த திருப்பாற்கடலிலே முழுகுங்கோள்'' என்று.

**நம் உரை:**

திருவேங்கடத்தின் புகழைப்பாடியும், துளசியைப் போற்றிச் சூடியும் வந்தால், நாம் திருப்பாற்கடலிலே நித்யம் நீராடலாம்; நிச்சயம் வைகுந்தம் புகுவோம் என்பது குறிப்பு.

## ஸ்ரீ திருமழிசையாழ்வார்

வெற்பென்று வேங்கடம் பாடினேன் வீடாக்கி
நிற்கின்றேன் நின்று நினைக்கின்றேன் - கற்கின்ற
நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்
கால்வலையில் பட்டிருந்தேன் காண் (நா. தி. 40).

வீடு = மோட்சம்; நூல்வலை = வேதங்களாகிய வலை; நூலாட்டி = வேதமாகிய நூலில் போற்றப்படும் லட்சுமி; கேள்வனார் = கணவர், இங்கே திருமால்.

**பாசுரத்தின் பொருள்:**

மலைகளின் பெயர்களைச் சொல்லி வருகையில், தற்செயலாக வேங்கடமலை என்றேன்; இதன் பலனாகவே மோட்சம் நிச்சயம் என்றுணர்ந்து நிற்கின்றேன். ''நாம் சொன்ன

சிறிய சொல்லுக்குப் பெரிய பேறு கிடைத்த பாக்கியம் எத்தகையது!'' என்று நினைத்து, வியந்து, மலைத்துப் போனேன்! ஓதப்படுகின்ற வேத சாஸ்திரங்களாகிய வலையில் அகப்பட்டிருக்கும் லக்ஷ்மீநாதனின் திருவடிகளாகிய வலையில் அகப்பட்டு நிலைத்து நிற்கின்றேன்.

**'திவ்யார்த்த தீபிகை' உரை:**

'மலை' என்று வருகிற பெயர்களையெல்லாம் அடுக்காகச் சொல்லுவோம் என்று விநோதமாக முயற்சி செய்து 'பசுமலை, குருவிமலை' என்று பலவற்றையும் சொல்லி வருகிற அடைவிலே, என்னையும் அறியாமல் 'திருவேங்கடமலை' என்று என் வாயில் வந்துவிட்டது; இவ்வளவையே கொண்டு எம்பெருமான் என்னைத் திருவேங்கடம் பாடினவனாகக் கணக்கு செய்து கொண்டான் என்பது இதன் கருத்து.

**நின்று நினைக்கின்றேன்:**

நாம் புத்திபூர்வமாக ஒரு நல்ல சொல்லும் சொல்லாது இருக்கவும், எம்பெருமான் தானே மடிமாங்காயிட்டுத் திருவுள்ளம் பற்றுகிற இது என்ன ஆச்சரியம்! என்று இதனையே அநுஸந்தித்து ஈடுபட்டு நின்றேன் என்கை.

**கால்வலையிற் பட்டிருந்தேன்:**

மூன்றாமடியில் சாஸ்திரங்களை எம்பெருமானுக்கு வலையாகவும், ஈற்றடியில் அவ்வெம்பெருமான் திருவடிகளைத் தமக்கு வலையாகவும் அருளிச் செய்தார். எம்பெருமானை சாஸ்திரங்களிலிருந்து எப்படிப் பிரிக்க முடியாதோ அப்படியே என்னை அப்பெருமான் திருவடிகளிலிருந்து பிரிக்கமுடியாது என்றவாறு. எம்பெருமான் ஒரு வலையில் அகப்பட்டான், நானொரு வலையில் அகப்பட்டேன் என்று சமத்காரமாகச் சொல்லுகிறபடி.

**'ப்ரபந்தரக்ஷை' உரை:**

வேதங்களையும், ஸ்ம்ருதி இதிகாச புராணங்களையும் சம்பிரதாயமாக ஓதும் முறையைப் பின்பற்றி ஆராய்ந்தபோது, எம்பெருமானும், பெரிய பிராட்டியும் (லட்சுமியும்) இருவரும் நமக்குத் தெய்வம் என்ற தெளிவு உண்டாயிற்று... சரணாகதரைக் காப்பதாகக் கூறி அவன் அதுபடி நடக்கவில்லையாகில் நூலாட்டி (லட்சுமி) அந்நூல்களே எதற்கென்று கேள்வனை (ஸ்ரீநிவாஸனைக்) கேட்பாள்.

ஏதோ வெற்பொன்றைப் பாட நினைத்த போதும் அவனது வேங்கடத்தைப் பாடும்படியாயிற்று. அதனால் அதை எனக்கு வீடாக்கினான். அதே மோட்சத்தானம். இப்படி எனக்கு வாய்த்ததற்கு யானே வியந்து அசையாது நின்று என்ன வாத்ஸல்யமென விசாரியா நின்றேன் (ஆராய்ந்தேன்). இனி நிலைத்து நின்று இடையூறின்றி வேங்கடத்தையே தியானிக்கவும் வாய்த்தது என்றபடி. இங்கே பாடுதல், நிற்றல், நினைத்தல் என்று வாக்கு, காயம், மனோரூப முக்கரணங்களின் வியாபாரங்கள் (செய்கைகள்) மொழியப் பெற்றன.

## ஸ்ரீ திருமழிசையாழ்வார்

வேங்கடமே விண்ணோர் தொழுவதும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினை நோய் தீர்ப்பதுவும் - வேங்கடமே
தானவரை வீழத்தன் ஆழிப்படைதொட்டு
வானவரைக் காப்பான் மலை. (நா. தி. 48)

மெய்ம்மையால் = உண்மையான பக்தியுடனே; மெய்வினை நோய் = முன்பிறவியில் செய்த பாவவினைகளால் உடலை வருத்தும் நோய்; தானவர் = அசுரர்கள்; ஆழிப்படை = சக்கராயுதம்; வானவர் = தேவர்கள்.

**பாசுரத்தின் பொருள்:**

நித்யசூரிகளால் உண்மையான பக்தியுடனே தொழப்படுவது வேங்கடமே. பாவ வினைகளால் விளைந்து உடலை வருத்தும் கர்மவியாதிகளைத் தீர்ப்பதும் வேங்கடமே. அசுரர்கள் அழியும்படி, சக்கராயுதத்தை ஏவி, தேவர்களைக் காத்தருளும் பெருமானுடைய திருமலையும் வேங்கடமே.

**வேங்கடமே விண்ணோர் தொழுவதும்:** விண்ணோர் வைகுந்தத்திலிருக்கும் முக்தர்களும், நித்யசூரிகளும்.

**'திவ்யார்த்த தீபிகை' உரை:**

''ஸதா பச்யந்தி சூரய:'' என்கிறபடியே நித்யசூரிகள் பரமபதத்திலே எம்பெருமானை இடைவிடாது அநுபவிக்கப்பெற்றாலும், அங்கே பரத்வத்துக்கு உரிய மேன்மைக் குணங்களை அநுபவிக்கலாகுமேயன்றி ஸௌலப்ய (எளிதில் அணுகும் தன்மை) ஸௌசீல்யங்களுக்குப் (வேறுபாடின்றிப் பழகும் தன்மை) பாங்கான எளிமைக் குணங்களை இந்நிலத்திலே

வந்து அநுபவிக்க வேண்டியிருப்பதால் அந்த சீலாதி குணங்களை அநுபவிப்பதற்காகத் திருமலையில் வந்து தொழும்படியைக் கூறுவது முதலடி.

**வேங்கடமே மெய்வினை நோய் தீர்ப்பதுவும்:**

இது 'வேங்கடம்' என்பதற்கு விளக்கம். வேம் = பாவம்; கடம் = எரித்தல்.

தேவர்களுக்கு அசுரர்களால் நேரும் துன்பங்களைத் திருவாழியால் (சக்கரத்தால்) தொலைத்துக் காத்தருளும் எம்பெருமான், அப்படியே நம் போன்ற பக்தர்களுடைய துன்பங்களையும் துடைக்கவே எழுந்தருளியிருக்கும் இடம் திருமலை என்பன பின்னடிகள்.

***'ப்ரபந்தரக்ஷை' உரை:***

''வேங்காரோம்ருத பீஜம் கடமைச்வர்யம் உச்யதே'' என்றபடி வேங்கடம் என்ற சொல்லுக்கு மோட்சம், ஐச்வர்யம் இரண்டுமான மலையென்ற பொருளுமுண்டு. மோட்சமென்பதற்கு ஏற்ப விண்ணோர் தொழுகின்றனர். ஐச்வர்யம் என்பதற்கிணங்க வானவர் வணங்குகின்றனர். வினைகளை எரிப்பதால் வேங்கடம் என்ற பொருளைக் கருதி அனைவரும் இதனையே வணங்கி எல்லாத் துயரங்களையும் தீர்த்துக்கொள்வது கண்கூடு. ஆகவே எல்லாவற்றிற்கும் மேலானது. இவ்வாறு வேங்கடம் என்ற சொல்லின் பொருளைக் கருதி மூன்றுதரம் வேங்கடமென்றது.

**ஸ்ரீ பூதத்தாழ்வார் திருவடிகளே சரணம்.**

# 17. முதலாழ்வார்கள் கண்ட திருவேங்கடவன்

முதலாழ்வார்கள் மாபெரும் வேங்கடேச பக்தர்கள் என்பது அவர்கள் பாடிய திருவந்தாதியிகளிலிருந்து நன்கு வெளிப்படுகிறது. மொத்தம் 300 பாசுரங்களில், இவர்கள் வேங்கடவனைக் குறித்துப் பாடியவை 39; ஸ்ரீ ரங்கநாதனைக் குறித்தவை 7; திருமழிசையாழ்வார் சரிசமமாகவே, முறையே 15, 14 பாடல்களைப் பாடியுள்ளார்; இந்நால்வரும் வேங்கடவனைப் பாடிய பாசுரங்களில் சிலவற்றை இங்கு காண்போம்.

## ஸ்ரீ பொய்கையாழ்வார்

உணர்வாரார் உன்பெருமை? ஊழிதோறு ஊழி
உணர்வாரார் உன் உருவம் தன்னை? உணர்வாரார்?
விண்ணகத்தாய்! மண்ணகத்தாய்! வேங்கடத்தாய்! நால்வேதப்
பண்ணகத்தாய்! நீ கிடந்தபால்.

உணர்வாரார் = உணரக்கூடியவர் யார்? ஊழி = பிரளயம், காலவெள்ளம்; விண்ணகம் - வைகுந்தம்.

**பாசுரத்தின் பொருள்:**

வைகுண்டத்தில் இருப்பவனே! மண்ணுலகில் அவதரித்தவனே! வேங்கடத்தில் நின்று அருள்பவனே! ஸ்வரப்ரதானமான நான்கு வேதங்களின் பண்கள் மயமானவனே! உன் பெருமையை ஊழி முதல் அடுத்த ஊழிவரை காலமெல்லாம்

ஆராய்ந்தாலும் யார் அறியவல்லார்? உனது திவ்யாத்ம சொரூபத்தைத்தான் யார் அறியவல்லார்? நீ திருப்பாற்கடலில் பாம்பணைமேல் கிடக்கும் நிலையைத்தான் யார் அறியவல்லார்?

**திவ்யார்த்த தீபிகை உரை:**

"திருமாலை அறிவதே அறிவு" என்று கீழ்ப்பாட்டில் அருளிச்செய்த ஆழ்வார் அறிவுக்கு எல்லைநிலம் எம்பெருமான் அல்லது இல்லை என்னும்படி இருந்தாலும், அவன் தன்மை அறிவார்தான் இல்லை என்று இப்பாட்டில் அருளிச்செய்கிறார். இவ்வாறிருப்பது வஸ்துவின் (திருவேங்கடவனின்) சுபாவமே ஒழிய, அறிவின் குறைவன்று என்பதும் அறியத்தக்கது. "உணர்வாரார்?" என்ற வினாவினால் ஸர்வஜ்ஞனான உன்னாலும் உன் தன்மை அறியமுடியாது என்பதும் காட்டப்படும். "தனக்கும் தன் தன்மை அறிவரியான்" என்றார் நம்மாழ்வாரும்.

## ஸ்ரீ பூதத்தாழ்வார்

**உளதென்று இறுமாவார் உண்டு இல்லை என்று**
**தளர்தல் அதன் அருகுஞ்சாரார் - அளவரிய**
**வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும்**
**பாதத்தான் பாதம் பயின்று. (இ.தி. 45)**

உளது என்று = செல்வம், பகவானை வழிபடும் பேறு தமக்கு உள்ளது என்று; இறுமாவார் = கர்வம் கொள்ளமாட்டார்; விண்ணோர் = நித்யசூரிகள்; பயின்று = பழகி.

**பாசுரத்தின் பொருள்:**

அளவிட முடியாதபடி அனந்தமாயுள்ள வேதங்களால் போற்றப்படும் திருவேங்கடமுடையான், நித்யசூரிகளது தலைமுடிகள் படியும்படி பணியப்பெற்ற திருவடிகளையுடையவன். ஸ்ரீவேங்கடாசலபதியினுடைய பாதங்களை வணங்கிப் பழகிய பக்தர்கள் தமக்குச் செல்வமோ, அவனை வணங்கும் பேறோ உள்ளதென்று கர்வம் கொள்ளமாட்டார்கள்; அவை 'நேற்று இருந்து இன்று இல்லையென்னும்படி அழிந்தன' என்னும் மனத்தளர்ச்சியின் பக்கமே செல்லமாட்டார்கள்.

வேங்கடேச பக்தர்கள் தம்முடைய பணம், பதவி பறிபோனாலும், மனம் தளர்ந்து அவனைத் தொழுவதைக் கைவிடமாட்டார்கள்; "ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே' (ஸ்ரீ

வேங்கடேசனின் இரண்டு திருவடிகளையும் சரணடைகிறேன்) என்றே எப்பொழுதும் இருப்பார்கள். இத்தகைய "ஸ்ரீ வேங்கடேச பிரபத்தி," 'வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும் பாதத்தான் பாதம் பயின்று' என்பதனால் கூறப்பட்டது. வேங்கடத்தான் பாதத்தான் = ஸ்ரீ வேங்கடேச சரணௌ; பாதம் பயின்று = சரணம் ப்ரபத்யே, சரணமாகப் பற்றுகிறேன். எனவே இப்பாசுரம் ஸ்ரீ வேங்கடேசப் பிரபத்திக்கு இலக்கணம் கூறுகிறது.

**உளதென்று இறுமாவார் உண்டில்லை என்று:**

இதற்கு இருவிதமாகப் பொருள் கூறப்படுகிறது; செல்வத்தைக் குறித்துச் செருக்கடைதல்; நித்யசூரிகள் முடிதோயும் ஸ்ரீ வேங்கடேசனின் பக்தர்கள் நாம் என்று பெருமைப்படுதல் என்று.

**'திவ்யார்த்த தீபிகை' உரை:**

பாகவதர்களின் பெருமையைப் பேசுகிறார். எம்பெருமானுடைய திருவடிகளிற் பழகுகின்ற பாகவதர்கள் செல்வம் படைத்தாலும் செருக்குக் கொள்ள மாட்டார்கள்; இருந்த செல்வம் அழிந்து போனாலும், "ஐயோ! ஏழைமை வந்துவிட்டதே!" என்று சிறிதும் தளர்ச்சியடைய மாட்டார்கள். 'களிப்பும் கவர்வுமற்று' என்ற பாசுரத்திற் சொன்னபடி லாபநஷ்டங்களில் ஒருபடிப்பட்ட சிந்தை உடையராயிருப்பர். "முனியார் துயரங்கள் முந்திலும், இன்பங்கள் மொய்த்திடினும் கனியார்... எங்கள் இராமாநுசனை வந்தெய்தினர்" (இராமாநுச நூற்றந்தாதி, 17) என்ற ஸ்ரீராமாநுஜபக்தனைப் போன்றிருப்பர் பகவத்பக்தர்களும்.

## ஸ்ரீ பேயாழ்வார்

தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்நாணும் தோன்றுமால் - சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து (மூ.தி. 63)

தாழ்சடை, ஒண்மழு, சூழ் அரவு = சிவனுக்குரியவை. நீள்முடி, சக்கரம், பொன் நாண் = விஷ்ணுவுக்குரியவை.

**பாசுரத்தின் பொருள்:**

தாழ்ந்த சடாமுடியும், நீண்ட மகுடமும்; அழகிய மழுவாயுதமும், சக்கரமும்; சுற்றிலும் அணிந்துள்ள

நாகாபரணமும், பொன் அரைநாணும்; நாற்புறமும் அருவிகள் திரண்டு பாயும் திருமலைமேல் எழுந்தருளியிருக்கும் எந்தை ஸ்ரீ வேங்கடேசனுக்கு இவ்விதம் சிவன், விஷ்ணு ஆகிய இருவரின் உருவமும் ஒரே வடிவமாக அமைந்து விளங்குகிறது; என்ன ஆச்சரியம்!

இப்பாசுரத்திற்கு அவரவர்கள் விருப்பப்படி பலவாறாகப் பொருள் கூறுவர். சைவர்கள் சங்கர - நாராயணனைக் கூறுவதாகக் கொள்வர். இதையொட்டியே சைவ - வைணவர்களுக்கிடையே திருமலை யாருடையது என்று ஒரு பிரச்னை ஏற்பட்டதாகவும், ஸ்ரீ ராமானுஜர் அது வைணவருடையதே என்று நிலைநாட்டியதாகவும் வரலாறு கூறுகிறது. ஸ்ரீ ராமானுஜர் ஸ்ரீ வெங்கடேசன் சன்னிதியில் பலர் காண சங்கு, சக்கரமும், சிவனுக்குரிய ஒண்மழுவும், திரிசூலமும் வைத்து, எவையேனும் ஒன்றை ஏற்றுப் பிரச்னையை தீர்த்து வைக்கும்படி இறைவனை வேண்டி, இரவில் கதவை மூடினார். மறுநாள் திருவேங்கடமுடையான் சங்கு, சக்கரங்களுடன் காட்சி தந்ததாகக் கூறுவர்.

வேங்கடவன் நாகத்தை அணிந்திருப்பது வாஸ்தவமே. எம்பெருமானின் சிரசிற்குக் கீழ் காணப்படும் நீண்ட ரேகையைச் தாழ்சடையாக் கொள்வது கற்பனை என்பர் வைணவர். இப்பாசுரத்தையே இடைச்செருகல், பேயாழ்வார் பாடியதாக இருக்க முடியாது என்றே சிலர் கூறுவர்.

இது எங்ஙனமிருப்பினும் பேயாழ்வார் சைவ வைணவ சமரச நோக்கு உடையவர் என்பதற்கு இப்பாசுரம் சான்றாக அமைகிறது. இருப்பினும் இவர் திருமாலே முழுமுதற் `கடவுள் என்று கொண்டு, சைவராக இருந்த திருமழிசையாரை வாதத்தில் வென்று வைணவராக்கினவர் என்பதையும் நினைவுகூர வேண்டும்.

இன்று அவைதீக சமயங்களின் தீவிரப் பிரசாரத்தினாலும், மதமாற்று முயற்சிகளாலும் வைதீக மதங்களான சைவத்திற்கும் வைணவத்திற்கும் இடையே முன்பொரு காலம் நிலவிய பூசல்களும், வாக்குவாதங்களும் மறைந்து சமரச நோக்கே மிகுந்திருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். ஸ்ரீ வேங்கடேஸ்வரன் என்று சைவர்களாலும், ஸ்ரீநிவாஸன் என்று வைணவர்களாலும், 'பாலாஜி' என்று சாக்தர்களாலும் மற்றும் அவைதீக சமயத்தினராலும் கூட வணங்கப்படும் கண்கண்ட தெய்வமாகத் திருவேங்கடமுடையான் திகழ்கின்றது கண்கூடு.

# ஸ்ரீ திருமழிசையாழ்வார்

சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை
நின்று வினைகெடுக்கும் நீர்மையால் - என்றும்
கடிக்கமல நான்முகனும் கண்மூன்றத்தானும்
அடிக்கமலம் இட்டேத்தும் அங்கு (நா.தி. 42)

*சேண் = உயர்ந்த; சேணுயர் = மிகவுயர்ந்த; நீர்மை = இயல்பு, சுபாவம்; கடி = வாசனை மிகுந்த; கமலம் = தாமரை; நான்முகன் = பிரம்மா; கண்மூன்றத்தான் = முக்கண்ணன், சிவன்.*

**பாசுரத்தின் பொருள்:**

*(அன்பர்களே!) மிகவும் உயர்ந்த வேங்கடத்தைச் சென்று வணங்குங்கள்! அத்திருமலை, இயல்பாகவே பாவங்களை நின்று போக்குவது. அங்கு பரிமளம் மிக்க தாமரையில் பிறந்த பிரம்மனும், முக்கண்ணனாகிய சிவனும், என்றும் ஸ்ரீ வேங்கடாசலபதியினுடைய திருவடிகளில், தாமரைப் பூக்களை சமர்ப்பித்து, துதித்துக்கொண்டிருப்பர்.*

**வேங்கடத்தை நின்று வினைகெடுக்கும் நீர்மையால்:**

வேம் = பாவங்கள், வினை. கடம் = எரிப்பது, கெடுக்கும்; 'வேங்கடம்' என்பதற்குப் பொருள் கூறியிருக்கிறார். ''வெங்கொடும் பாவங்களெல்லாம் வெந்திடச் செய்வதால் நல்மங்கலம் பொருந்துஞ்சீர் வேங்கடமலையானதென்று'' என்கிறது ஒரு புராணச் செய்யுள்.

பிரம்மாதி தேவர்களே 'புஷ்பமண்டபம்' என்றே புகழ்பெற்ற பொன்மலையில் ஸ்ரீ வேங்கடேசனது திருவடிகளில் புஷ்பாஞ்சலி செய்து, தங்கள் அதிகாரத்தைப் பெற்றிருக்கின்றனர். நீங்களும் அவ்விதமே செய்து உய்வடையுங்கள் என்று உபதேசிக்கிறார்.

சமரச நோக்குடைய பேயாழ்வாரைப்போல் அல்லாது, திருமழிசையார் வீரவைணவர் என்பதும் இதிலிருந்து தெரிகிறது.

**ஸ்ரீ பேயாழ்வார் திருவடிகளே சரணம்**

# 18. முதலாழ்வார்கள் வாழித் திருநாமங்கள்

## (அப்பிள்ளை திருவாய்மலர்ந்தருளியது)

*அரசனுக்குப் பிரஜைகள் ''வாழ்க, வாழ்க!'' என்று வாழ்த்து தெரிவிப்பது போலவே, இறைவனுக்கும், மெய்யடியார்களுக்கும் வாழ்த்துக்கூறுவது மரபாகும். வைணவத்தில் ஆழ்வார்களுக்கும், ஆசாரியர்களுக்கும் இவ்விதம் வாழித் திருநாமங்கள் கூறுவது வழக்கில் உள்ளது. முதலாழ்வார்களைக் குறித்த இந்நூல் அவர்களுடைய வாழித் திருநாமங்களுடன் நிறைவடைகிறது.*

### ஸ்ரீ பொய்கையாழ்வார்

செய்ய துலா ஓணத்தில் செகத்துதித்தான் வாழியே
திருக்கச்சி மாநகரம் செழிக்க வந்தோன் வாழியே
வையந்தகளி நூறும் வகுத்து உரைத்தான் வாழியே
வனசமலர்க் கருவதனில் வந்தமைந்தான் வாழியே
வெய்யகதிரோன் தன்னை விளக்கிட்டான் வாழியே
வேங்கடவர் திருமலையை விரும்புமவன் வாழியே
பொய்கைமுனி வடிவழகும் பொற்பதமும் வாழியே
பொன்முடியும் திருமுகமும் பூதலத்தில் வாழியே.

### ஸ்ரீ பூதத்தாழ்வார்

அன்பேதகளி நூறும் அருளினான் வாழியே
ஐப்பசியில் அவிட்டத்தில் அவதரித்தான் வாழியே

நன்புகழ்சேர் குருக்கத்தி நாண்மலரோன் வாழியே
நல்ல திருக்கடன்மல்லை நாதனார் வாழியே
இன்புருகு சிந்தை திரியிட்ட பிரான் வாழியே
எழில் ஞானச்சுடர் விளக்கேற்றினான் வாழியே
பொன்புரையும் திருவரங்கர் புகழுரைப்போன் வாழியே
பூதத்தார் தாளிணை இப்பூதலத்தில் வாழியே

## ஸ்ரீ பேயாழ்வார்

திருக்கண்டேன் என நூறும் செப்பினான் வாழியே
சிறந்த ஐப்பசியில் சதயம் செனித்த வள்ளல் வாழியே
மருக்கமழும் மயிலைநகர் வாழ வந்தோன் வாழியே
மலர்க்கரிய நெய்தல்தனில் வந்துதித்தான் வாழியே
நெருக்கிடவே இடைகழியில் நின்ற செல்வன் வாழியே
நேமிசங்கன் வடிவழகை நெஞ்சில் வைப்போன் வாழியே
பெருக்கமுடன் திருமழிசைப்பிரான் தொழுவோன் வாழியே
பேயாழ்வார் தாளிணையிப் பெருநிலத்தில் வாழியே.

*''ஸ்ரீவேங்கடேச பாகவதம்''* என்னும் இந்தப் புத்தகத்திலுள்ள *குற்றம், குறைகளைப் பொறுத்து அருளும்படி, திருவேங்கடமுடையானை வேண்டிக் கொள்வதோடு நூல் நிறைவடைகிறது, வணக்கம்.*

## ஸ்ரீவேங்கடேச ஸ்தோத்ரம்

அஞ்ஞானினா மயா தோஷான் அசேஷான் விஹிதான் ஹரே
க்ஷமஸ்வத்வம் க்ஷமஸ்வத்வம் சேஷசைல சிகாமணே

அறியாமையால் புரி தீவினை புரியாதுளத் தற நீக்கிடு!
பொறுத்தே அருள்! பொறுத்தே அருள்! பெருமாமணி
வேங்கடவா!

ஹரி: ஓம் தத் ஸத்
ஸ்ரீவேங்கட கிருஷ்ணார்ப்பணம் அஸ்து.

# பயன்பட்ட நூல்கள்


1) **திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை**

பிரதிவாதி பயங்கரம் அண்ணாங்கராசாரிய சுவாமிகள் கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம். (பிரதிகள் கிடைப்பதில்லை)

2) **உபய வேதாந்த க்ரந்தமாலை "ப்ரபந்த ரக்ஷை"**

ஸ்ரீ உத்தமூர் திருமலை நல்லான் சக்ரவர்த்தி வீரராகவாசாரியார், ஸ்ரீ வேங்கடேஸ்வர அச்சகம், சின்ன காஞ்சீபுரம் (1958) (பிரதிகள் கிடைப்பதரிது)

**ஆழ்வார்கள் அமுத நிலையம், 37, சௌத் கூவம் ரோடு, கோமளேசுவரன் பேட்டை, சென்னை - 600 002 வெளியிட்டுள்ள நூல்கள்:**

3) **திருவேங்கடமுடையானும் ஆழ்வார்களும்,**

தொகுப்பாசிரியர் ஸ்ரீ லக்ஷ்மீநாராயண தாசன், (1981), விலை ரூ. 8/-

4) **ஸ்ரீ வைஷ்ணவம்,** R. ராமஸ்வாமி ராமாநுஜ தாஸர், (1986), விலை ரூ. 12/-

5) **முதலாழ்வார் மூவர் இயற்பா,** T.S. ராஜகோபாலன், (1988), விலை ரூ. 12/-

6) **நான்முகன் திருவந்தாதி, இராமாநுச நூற்றந்தாதி உரை,** T.S. ராஜகோபாலன், (1988) விலை ரூ. 11/-

7) **ஆழ்வார்கள் அமுதம் - ஸ்ரீ வைஷ்ணவ ஹஸ்தபூஷணம்,** தொகுப்பு: ஸ்ரீ லக்ஷ்மீ நாராயண ராமாநுஜ தாஸர், (1989), விலை ரூ. 12/-

(முன் கூறிய இரண்டு சிறந்த நூல்களும் இப்பொழுது கிடைப்பதரிது. இந்நிலையில் 83 வயதான வைணவ மூதறிஞர் ஸ்ரீ லக்ஷ்மீநாராயண ராமானுஜதாஸ சுவாமி அவர்கள் ''ஆழ்வார்கள் அமுத நிலையம்'' மூலம் இதுவரை 24 நூல்களை மிகவும் குறைந்த விலையில் சிறந்த அறிஞர்களைக் கொண்டு வெளியிட்டு, ஸ்ரீவைஷ்ணவத்திற்கு எம்பெருமான்

திருவுள்ளப்படி அருந்தொண்டு ஆற்றியிருப்பது வியக்கத்தக்க பகவத் கைங்கரியமாகும்)

**வேங்கடம் பப்ளிகேஷன்ஸ்,** AD - 13, ***(பிளாட் - 3354),* அண்ணா நகர், சென்னை - *600040* வெளியிட்டுள்ள நூல்கள் - பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் இயற்றியன:**

8) **ஆழ்வார்களின் ஆரா அமுது,** (விற்பனை உரிமை: ஐந்திணைப் பதிப்பகம், *282*, பாரதி சாலை, திருவல்லிக்கேணி, சென்னை - *600 005*). *(1987)*, விலை ரூ. *25* / -

9) **வடவேங்கடமும், திருவேங்கடமும்,** (விற்பனை உரிமை: பாரி நிலையம், *184*, பிராட்வே, சென்னை - *600 108*) ***(1992)*, விலை** ரூ. *35* / -

10) **சில நாக்கில் நாலாயிரம்.**

11) **வைணவ உரைவளம்**

(பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் ஆசிரியம், இலக்கியம், சமயம், தத்துவம், திருத்தலப்பயணம், திறனாய்வு, வரலாறு, தன் வரலாறு, அறிவியல், ஆராய்ச்சி ஆகிய பல துறைகளில் சுமார் *100* தமிழ் நூல்கள் இயற்றி, சைவ, வைணவ பேதமின்றி அரிய தொண்டாற்றியுள்ளார்).

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி (லிப்கோ), ரங்கநாதன் தெரு, தியாகராயநகர், சென்னை *600 017* வெளியிட்டுள்ள நூல்கள்:**

12) பன்னிரு ஆழ்வார்கள் *(1988)* ரூ. *2.50*

13) வடகலை நித்யாநுஸந்தானம் *(1993)*, ரூ. *5* / -

14) தென்கலை நித்யாநுஸந்தானம் *(1993)*, ரூ. *5* / -

15) **வைணவ வழித்தோன்றல் வரலாறு** (உபதேச ரத்தினமாலை), டாக்டர் மா. வரதராஜன், ஸ்ரீ அனந்த் பதிப்பகம், *14/86*, பத்மாவதிபுரம், திருச்சானூர் ரோடு, திருப்பதி - *517503*, *(1993)*, ரூ. *12* / -.